3109

# முகவுரை

'செந்தமிழ்ச் செய்யுள் வசனத்திரட்டு' என்னும் இந்நூற் பெயரே இதன் இயல்பை நன்கு விளக்கும்.

இதனில் செய்யுளுக்குக் கடவுள் வாழ்த்தும், நீதியும், புராணேதிகாச காவியங்களிலிருந்து அழகிய பகுதிகளும் கொள்ளப்பட்டிருக்கின்றன.

செய்யுட் பகுதி: கடவுள்வாழ்த்தும் நீதியும் ஒழிந்தவை:

1. **திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்: சங்கப்பலகை கோடுத்தது:** இதில் சங்கப்புலவர் வேண்டுகோளுக்கிரங்கி ஆலவாயில் அவிர்சடைக்கடவுள் ஒரு கனமாப் பலகை கொடுத்ததும், அக்கடவுளே ஒரு புலவராய்த்தோன்றி 'இறையனார் அகப்பொருள்' என்னும் இலக்கணம் செய்ததும் கூறப்படுகின்றன.

2. **சீகாளத்திப்புராணம்: நக்கீரச்சருக்கம்:** இது மேலே கூறிய திருவிளையாடற் கதையோடு தொடர்புடையது. சங்கப் பலகை பெற்றபின் நிகழ்ந்த ஒரு சரித நிகழ்ச்சியைக் கூறுகின்றது. இதில் ஆலவாய்ப்பெருமானுக்கும் நக்கீரருக்கும் நிகழ்ந்த வாது கூறப்படுகின்றது. அன்றியும் இதிலே பஞ்சக்கொடுமையைப் பொறுக்கலாற்றாது, கிழியைத் தான் பெற்று வேற்று நாடு சென்று பிழைக்குமாறு அருளுக என்று தருமி சுவாமியை இரந்து வேண்டினதாகக் கூறப்பட்டிருக்கிறது.

3. **கம்பராமாயணம்: பள்ளியடைப்படலம்:** இராமன் வனஞ்சென்றதுகேட்ட தசரதன் உயிர்துறந்தானாக அவனுக்கு

உரிய கடன் கழிக்க உரியாரின்மை கண்டு, வசிட்டமுனிவர், பரதனுக்கு ஓலைவிட, அவன் கேகயத்திருந்து அயோத்திக்கு வந்து தன் தாயைக்கண்டு அவளாலே அங்கு நிகழ்ந்தன தெரிந்து அவளை முனிந்து கோசலையிடம் சென்றான் என்பது முடியவுள்ள பகுதி இதில் கொள்ளப்பட்டிருக்கிறது.

4. **கலிங்கத்துப்பரணி:** அவதாரம்: விசயதரன் பிறக்குமுன் சோழநாட்டிலிருந்த குழப்பநிலையும், அவன் பிறந்து வளர்ந்து முடிசூடியபின் அது நன்னிலை பெற்றதும் இதில் கூறப்படு கின்றன.

5. **அரிச்சந்திரபுராணம்: நகர்நீங்குகாண்டம்:** கோசிகமுனி வர்க்கு நாடளித்துவிட்டு, அவர்க்கு முன் கொடுப்பதாகக்கூறிய வேள்விப்பொருளை அளிப்பதற்காகப் புகரோனையும் உடன் கொண்டு அரிச்சந்திரன் காசிக்குச் சென்றது வரை இதிற் கூறப்படுகின்றது.

6. **வில்லிபாரதம்: புட்பயாத்திரைச்சருக்கம்:** இதில் பாஞ் சாலியின் விருப்பிற்கிணங்கி மந்தாரமலர் கொணர வீமன் அளகா புரிக்குச் செல்லுதலும், வழிநடுவே அநுமனைச் சந்தித்தலும், கூறப்படுகின்றன.

ஒருபடலமாவது முற்றக்கற்றாலன்றிச் செய்யுட்சுவையை ரஸிப்பது மாணவர்க்குச் சாத்தியமாகாது என்னுங் கருத்தால் செய்யுட்பகுதியில் கதையும் சரித்திரமும் சம்பந்தமான நூல் களிலிருந்து ஒவ்வொரு பகுதி அப்படியே கொள்ளப்பட்ட தென்க; ஆதலின் இனிய தனிப்பாடல்களுக்கு ஈண்டு இடங் கொடுக்க இயலாதாயிற்று.

வசனபாடத்திலே புலவர் வரலாற்றுக்கு "வைத்தியநாத நாவலர்," அடியார்க்கு "திருநாவுக்கரசு" இதிகாசத்துக்கு "கும்பகருணன்," நீதிக்கு, "அகதிக்குத் தெய்வந்துணை," பிரமுகர் வாழ்விற்கு "ஓவியர் திலகம்," பொது விஷயத்திற்குப் "பொய்த்தோற்றம்," என்றிவை கொள்ளப்பட்டிருக்கின்றன.

வசனபாகத்துக்குப் பாடங்களை யுதவிய திருவாளர்கள்: திருநெல்வேலி ஹிந்து காலேஜ் தமிழாசிரியர் வி. சிதம்பரராம லிங்க பிள்ளையவர்கள், விருதுநகர் முனிசிபல் ஹைஸ்கூல் தமிழாசிரியர் இராஜகோட்டியப்ப பிள்ளையவர்கள், மதுரைச் சேதுபதி உயர்தரக் கலாசாலைத் தமிழாசிரியர் என். கிருஷ்ணஸாமி ஐயரவர்கள், இராமேஸ்வர தேவஸ்தான சம்ஸ்கிருத காலேஜ் தமிழாசிரியர் பண்டித: ஆ. சிவசுப்பிரமணிய ஐயரவர்கள் என்றிவர்க்கு என் மனமார்ந்த நன்றி உரித்தாகும்

இப்புத்தகத்தின் இயல்பறிந்து கலாசாலை யதிகாரிகளும், பண்டித வித்வத் சிரோமணிகளும் என்னை ஊக்குவார்களாக.

மதுரை
12—10—32 }

**வி. சு. சுவாமிநாதன்**

# உள்ளுறை

---

வசனத்திரட்டு





உ

# செந்தமிழ்ச் செய்யுள் வசனத் திரட்டு

## இரண்டாம்பகுதி

### 1. கடவுள் வாழ்த்து

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே யுலகு. 1

(குறள்)

கண்ணி கார்நறுங் கொன்றை காமர்
வண்ண மார்பில் தாருங் கொன்றை
ஊர்தி வால்வெள் ளேறு சிறந்த
சீர்கெழு கொடியும் அவ்வே றென்ப
பிறைநுதல் வண்ண மாகின்று அப்பிறை
மறைநவில் அந்தணர் நுவலவும் படுமே
பெண்ணுரு ஒருதிற னாகின்று அவ்வுரு
தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்
கறைமிட றணியலும் அணிந்தன்று அக்கறை
பதினெண் கணனும் ஏத்தவும் படுமே
எல்லா உயிர்க்கும் ஏம மாகிய

நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோற்கே. 2

(புறநானூறு)

பொய்யாத மொழியுமயல் செய்யாத செயலும்வீண்
போகாத நாளும் விடயம்
புரியாத மனமுமுட் பிரியாத சாந்தமும்
புந்திதளா ராத நிலையும்
எய்யாத வாழ்வும்வே றெண்ணாத நிறைவும்நினை
என்றுமற வாத நெறியும்
இறவாத தகவுமேற் பிறவாத கதியும்இவ்
வேழையேற் கருள்செய் கண்டாய்
கொய்யாது குவியாது குமையாது மணம்வீசு
கோமளத் தெய்வ மலரே
கோவாத முத்தமே குறையாத மதியமே
கோடாத மணிவி ளக்கே
ஐயான னங்கொண்ட தில்லையம் பதிமருவும்
அண்ணலார் மகிழு மணியே
அகிலாண்ட முஞ்சரா சரமுமீன் றருள்பரசி
வாநந்த வல்லி யுமையே. 3

(அருட்பா)

மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்
படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே
நாரா யணாவென்னா நாவென்ன நாவே. 4

(சிலப்பதிகாரம்)

# வசனத் திரட்டு

ஒளிநாக் கொடுவான் சுடர்புகழ
ஒளிநாக் கொடுபன் மணிபுகழக்
களிநாக் கொடுபற் புள்புகழக்
கமழ்நாக் கொடுகா மலர்புகழத்
தெளிநாக் கொடுநீர் புனல்புகழத்
தினமே புகழப் படுவோய்நீ
அளிநாக் கொடுநான் உனைப்புகழ
அறியா மூமைகை யறிவாயே.

(தேம்பாவணி)

திருவினும் திருவாய்ப் பொருளினும் பொருளாய்த்
தெளிவினும் தெளிவதாய்ச் சிறந்த
மருவினும் மருவாய் அணுவினுக் கணுவாய்
மதித்திடாப் பேரொளி யனைத்தும்
பொருவினும் பொருவா வடிவினும் வடிவாய்ப்
பூதலத் துறைந்தபல் லுயிரின்
கருவினும் கருவாய்ப் பெருந்தலம் புரந்த
கருத்தனைப் பொருத்துதல் கருத்தே.

சிறந்தமெய்ப் பொருளை 'யழிவிலா மணியைத்
தெரிந்துமுக் காலமும் உணர்ந்து
துறந்தவர் இதயா சனத்திருந் தவனைத்
தொடரின்ப துன்பமற் றவனைப்
பிறந்தபல் லுயிரின் மனத்தள வுறைந்து
பிறப்பிறப் பொன்றிலா தவனை
மறந்தவர் சுவர்க்கப் பதியையும் மறந்து
மண்ணினில் மதிமறந் தவரே.

(சீறாப்புராணம்)

வெள்ளித் தகட்டுநெட் டேடவிழ்த் தின்னிசை
விரும்புஞ் சுரும்பர் பாட
விளைநறவு கக்கும் பொலன்பொகுட் டலர்கமல
வீட்டுக் கொழித்தெ டுத்துத்
தெள்ளித் தெளிக்குந் தமிழ்க்கடலி னன்பினைந்
திணையென வெடுத்த விறைநூற்
றெள்ளமுது கூட்டுணுமொர் வெள்ளோதி மத்தினிரு
சிறடி முடிப்பம் வளர்பைங்
கிள்ளைக்கு மழலைப் பசுங்குதலை யொழுகுதீங்
கிளவியும் களிம யிற்குக்
கிளரிளஞ் சாயலும் நவ்விக்கு நோக்கும்விரி
கிஞ்சுகச் சூட்ட ரசனப்
பிள்ளைக்கு மடநடையும் உடனாடு மகளிர்க்கொர்
பேதைமையும் உதவி முதிராப்
பிள்ளைமையின் வள்ளன்மை கொள்ளுமொரு பாண்டிப்
பிராட்டியைக் காக்க வென்றே. 8

(மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழ்)

ஆசையெனும் பெருங்காற்றூ டிலவம்பஞ்
செனவுமன தலையும் காலம்
மோசம்வரும் இதனாலே கற்றதுங்கேட்
டதுந்தூர்ந்து முத்திக் கான
நேசமும்நல் வாசமும்போய்ப் புலனாயிற்
கொடுமைபற்றி நிற்ப ரந்தோ
தேசுபழுத் தருள்பழுத்த பராபரமே
நிராசையின்றேல் தெய்வ முண்டோ 9

(தாயுமானார்)

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.

(குறள்)

## 2. நீதி

### (a) நாலடியார்

கல்லெறிந் தன்ன கயவர்வா யின்னாச்சொல்
எல்லாருங் காணப் பொறுத்துய்ப்ப—ஒல்லை
இடுநீற்றால் பையவிந்த நாகம்போல் தத்தம்
குடிமையான் வாதிக்கப் பட்டு. 1

இசையா வொருபொரு ளில்லென்றல் யார்க்கும்
வசையன்று வையத் தியற்கை—நசையழுங்க
நின்றோடிப் பொய்த்த னிரைதொடீஇ செய்ந்நன்றி
கொன்றாரிற் குற்ற முடைத்து. 2

கல்லாது நீண்ட வொருவ னுலகத்து
நல்லறி வாள ரிடைப்புக்கு—மெல்ல
விருப்பினும் நாயிருந் தற்றே யிராஅது
உரைப்பினு நாய்குரைத் தற்று. 3

தனதாகத் தான்கொடான் றாயத் தவருந்
தமதாய போழ்தே கொடாஅர்—தனதாக
முன்னே கொடுப்பி னவர்கடியார் தான்கடியான்
பின்னை யவர்கொடுக்கும் போழ்து. 4

கற்றதூஉ மின்றிக் கணக்காயர் பாடத்தாற்
பெற்றதாம் பேதையோர் சூத்திர—மற்றதனை
நல்லா ரிடைப்புக்கு நாணாது சொல்லித்தன்
புல்லறிவு காட்டி விடும்... 5

பெருங்கட லாடிய சென்றா ரொருங்குட
னோசை யவிந்தபி னாடுது மென்றற்றா
லிற்செய் குறைவினை நீக்கி யறவினை
மற்றறிவா மென்றிருப்பார் மாண்பு. 6

ஆகா தெனினு மகத்துநெய் யுண்டாகிற்
போகா தெறும்பு புறஞ்சுற்றும்—யாதுங்
கொடாஅ ரெனினு முடையாரைப் பற்றி
விடாஅ ருலகத் தவர். 7

## (b) திரிகடுகம்

கணக்காயர் இல்லாத ஊரும் பிணக்கறுக்கும்
மூத்தோரை யில்லா அவைக்களனும்—பாத்துண்ணும்
தன்மையி லாளர் அயலிருப்பும் இம் மூன்றும்
நன்மை பயத்தல் இல. 1

தாளாளன் என்பான் கடன்படா வாழ்பவன்
வேளாளன் என்பான் விருந்திருக்க உண்ணாதான்
கோளாளன் என்பான் மறவாதான் இம்மூவர்
கேளாக வாழ்தல் இனிது. 2

மண்ணின்மேல் வான்புகழ் நட்டானும் மாசில்சீர்ப்
பெண்ணினுட் கற்புடையாட் பெற்றானும்—உண்ணுநீர்க்
கூவல் குறைவின்றித் தொட்டானும் இம்மூவர்
சாவா உடம்பெய்தி னார். 3

நுண்மொழி நோக்கிப் பொருள்கொளலும் நூற்கேலா
வெண்மொழி வேண்டினும் சொல்லாமை-நன்மொழியைச்
சிற்றினம் அல்லார்கட் சொல்லலும் இம்மூன்றும்
கற்றறிந்தார் பூண்ட கடன் 4

பல்லவையுள் நல்லவை கற்றலும் பாத்துண்டாங்(கு)
இல்லறம் முட்டா தியற்றலும்—வல்லிதின்
தாளின் ஒருபொருள் ஆக்கலும் இம்மூன்றும்
கேள்வியுள் எல்லாம் தலை. 5

கற்றாரைக் கைவிட்டு வாழ்தலும் காமுற்ற
பெட்டாங்கு செய்தொழுகும் பேதையும்—முட்டின்றி
அல்லவை செய்யும் அலவலையும் இம்மூவர்
நல்லுலகம் சேரா தவர். 6

## (c) நீதிநெறிவிளக்கம்

வருந்தித்தாம் கற்றன வோம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் றொடங்கல்—கருந்தனம்
கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள் செய் திடல். 1

கலைமகள் வாழ்க்கை முகத்த தெனினும்
மலரவன் வண்டமிழோர்க் கொவ்வான்—மலரவன்செய்
வெற்றுடம்பு மாய்வனபோன் மாயா புகழ்கொண்டு
மற்றிவர் செய்யு முடம்பு. 2

இன்று கொளற்பால நாளை கொளப்பெறான்
நின்று குறையிரப்ப நேர்படான்—சென்றொருவன்
ஆவன கூறின் எயிறலைப்பான் ஆறலைக்கும்
வேடலன் வேந்தும் அலன். 3

வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலு நனிநல்ல—கொன்னே
அருளில னன்பிலன் கண்ணறைய னென்று
பலரா லிகழப் படான். 4

சொல்வன்மை யுண்டெனில் கொன்னே விடுத்தொழிதல்
நல்வினை கோறலின் வேறல்ல—வல்லைத்தம்
ஆக்கம் கெடுவ துளதெனினும் அஞ்சுபவோ
வாக்கின் பயன்கொள் பவர். 5

## (d) நீதிவெண்பா

மென்மதுர வாக்கால் விரும்புஞ் சகங்கடின
வன்மொழியி னாலிகழு மண்ணுலகம்—நன்மொழியை
ஓதுகுயி லேதங் குதவியது கர்த்தவந்தான்
ஏதபரா தஞ்செய்த தின்று. 1

ஈக்கு விடந்தலையி லெய்துமிருந் தேளுக்கு
வாய்த்த விடங்கொடுக்கில் வாழுமே—நோக்கரிய
பைங்கணர வுக்குவிடம் பல்லளவே துர்ச்சனருக்
கங்கமுழு தும்விடமே யாம். 2

பொற்பறிவில் லாதபல புத்திரரைப் பேறலினோர்
நற்புதல்வ னைப்பெறுத னன்றாமே—பொற்கொடியே
பன்றிபல குட்டி பயந்ததினா லேதுபயன்
ஒன்றமையா தோகரிக்கென் றோது. 3

தாமுங் கொடார்கொடுப்போர் தம்மையுமீ யாதவகை
சேமஞ்செய் வாருஞ் சிலருண்டே—யேமநிழல்
இட்டுமலர் காய்கனிக ளீந்துதவு நன்மரத்தைக்
கட்டுமுடை முள்ளெனவே காண். 4

கல்லார் பலர்கூடிக் காதலித்து வாழினுநூல்
வல்லா னொருவனையே மானுவரோ—அல்லாரும்
எண்ணிலா வான்மீ னிலகிடினும் வானகத்தோர்
வெண்ணிலா வாமோ விளம்பு. 5

## (e) அறப்பளீசுர சதகம்

வாலிபந் தனில்வித்தை கற்கவேண் டுங்கற்ற
வழியிலே நிற்க வேண்டும்
வளைகடல் திரிந்துபொருள் தேடவேண் டுந்தேடி
வளரறஞ் செய்ய வேண்டும்
சீலமுடை யோர்களைச் சேரவேண் டும்பிரிதல்
செய்யா திருக்க வேண்டும்
செந்தமிழ்ப் பாடல்பல கொள்ளவேண் டுங்கொண்டு
தியாகங் கொடுக்க வேண்டும்
ஞாலமிசை பலதரும நாட்டவேண் டும்நாட்டி
நன்றாய் நடத்த வேண்டும்
நம்பனிணை யடிபூசை பண்ணவேண் டும்பண்ணி
னாலுமிகு பத்தி வேண்டும்
ஆலமமர் கண்டனே பூதியணி முண்டனே
அனகளம தருமை மதவேள்
அனுதினமு மனதினினை தருசதுர கிரிவளர்
அறப்பளீ சுர தேவனே. 1

வஞ்சகர் தமைக்கூடி மருவொணா தன்பிலார்
வாசலிற் செல்லொ ணாது
வாதெவ ரிடத்திலும் புரியொணா தறிவிலா
மடையர்முன் னிற்கொ ணாது
கொஞ்சமே னுந்தீது செய்யொணா தொருவர்மேற்
குற்றஞ்சொ லொண்ணா தயற்
கோதையர்க ளோடுபரி காசஞ்செ யொண்ணாது
கோளுரைகள் பேசொ ணாது
நஞ்சுதரு மரவொடு பழகொணா திருள்வழி
நடந்துதனி யேகொ ணாது

நதிபெருக் காகினதி னீஞ்சல்செய் யொண்ணாது
நல்வழி மறக்கொ ணாது
அஞ்சாம லரசர்முன் பேசொணா திவையெலாம்
அறியுமெம தருமை மதவேள்
அனுதினமு மனதினினை தருசதுர கிரிவளர்
அறப்பளீ சுர தேவனே. 2:

## 3. திருவிளையாடற் புராணம்

### சங்கப்பலகை கொடுத்தது

முன்னமோர் காலஞ் சங்கமண் டபத்து
முறைமையி னிருப்பதற் கியைந்தே
மின்னிய பனுவற் காரண மாகி
விளங்குபே ராசனம் விரும்பிப்
பன்னியல் வாணர் கபிலர்நக் கீரர்
பரணர்முன் னாகவா லயத்துத்
தொன்னெறி யடியார்க் கினியன கொடுக்குஞ்
சொக்கனுக் குரைப்பமென் றடைந்தார். 1

தேவர்கள் தேவே நின்னரு ளிருக்குஞ்
செந்தமி ழோர்நெருக் கின்றி
யாவரு மிருக்கச் சிறக்குமோர் தவிசை
யீந்தரு ளெனத்தொழு தேத்த
மூவர்கள் தலைவன் கோணமொத் திலங்கோர்
முழத்தினி னொருவரே யிருக்கும்
பாவறி ஞானப் பலகையொன் றளிப்ப
வாங்கிய பாவலர் பகர்வார். 2:

அருளுடை யரசே யாவரு மிருந்திங்
    காயநீ டாசனம் விரும்ப
வொருவரே யிருக்கு மாசனந் தந்த
    தென்னையென் றுளந்தளர் காலை
யிருமையி னிலங்கும் புலவரை யறிந்தீ
    திடந்தரு மிடந்தரு மென்றோர்
பரிவுடை வாக்கு விசும்பிடைத் தோன்றப்
    பணிந்ததி சயத்தொடும் போந்தார். 3

வாங்கருந் தெய்வப் பலகையைச் சங்க
    மண்டபத் திடைநடு விட்டாங்
கோங்கமுன் கீர ரிருந்தனர் பின்ன
    ருயர்புளோ ரொருவருக் கிருப்ப
வாங்கது வளர்தல் கண்டுநன் கபில
    ரிருந்தன ரன்பொடு முன்போற்
றூங்குதல் கொடாது வளர்ந்திட விருந்தார்
    பரணருந் தலமெலா மதிப்ப. 4

முற்றிய பயன்க ணான்கினால் விளங்கு
    முத்தமிழ்க் கொத்தியல் வல்ல
மற்றுள சங்கத் தவருமவ் வடைவின்
    வளர்ந்திட வளர்ந்திட நயந்து
நற்றவ னருளின் பெருமையை வாழ்த்தி
    யிருந்திட நானிலத் தோர்கள்
செற்றம தகல வறிந்திடங் கொடுத்த
    சித்திரப் பலகையைத் துதித்தார். 5

சான்றவர் தேர்ந்து தம்முடைத் தெளிவாற்
    சயமுறக் கோத்தசெந் தமிழைத்

தோன்றிய சங்க மண்டபத் தின்கட்
சோர்வற வைத்துவைத் தேக
லூன்றவச் செய்யுள் காலகீ ளத்தா
லளவில வாய்த்தலை மயங்கி
வான்றொட வுயர்ந்த வாங்கவர் திரண்டு
வந்தனர் மற்றொரு காலம். 6

சொல்லருஞ் சொல்லின் தகுதியாற் றம்மிற்
றொடர்விடா வழக்கினுண் மலைந்து
வெல்லருந் திறத்தைக் கண்டுநற் றமிழுள்
விளக்கமில் லாதன விட்டு
நல்லன கொள்ளக் கடவமென் றியைந்து
நயந்தரு பனுவலா ராய்வா
னெல்லையி லழகார் சங்கமண் டபத்து
ளேறினு ருறத்தமை மதித்து. 7

வந்தவர் குலைந்து முன்னமே கலைந்து
வரையறக் கிடந்தவை யெடுத்து
முந்தவா ராயு மளவிலப் பனுவன்
முறைதலை மயங்கலா லழிந்து
சிந்தையா குலத்தோ டென்செய்கே மெனத்தஞ்
செழுமுகம் வாடலுங் கருணை
யெந்தைநா யகனும் வந்தனன் றமிழா
தின்றமிழ்ப் புலவனா யிரங்கி 8

இத்தல மதிக்கக் குற்றமி லெழுத்துச்
சொற்பொருள் யாப்பலங் காரக்
கொத்துறு பனுவல் வல்லவர் நீங்கள்
குறைவற விருந்திர்செங் கமல

மொத்துறும் முகங்கள் வாடிய தென்னை
யுற்றது போக்கலா விருப்பிற்
புத்தியா லளந்து போக்குவம் புகுந்த
காரியம் புகலுமி னென்ன 9

முதுகவிப் புலவ மயங்கிய தெமக்கிம்
முத்தமிழ்க் கொத்துநீ கோத்து
விதியினி லளிக்க வல்லையே ளுற்பத்
தெட்டெனல் விட்டுனைக் கூட்டி
யதர்பட நாற்பத் தொன்பது பேரென்
றறைந்திடக் கடவமென் றியம்ப
மதியுளான் விரும்பி யிமைப்பினி லுவப்ப
வகைப்பட விதிப்படி கோத்தான். 10

யாவையுங் கூட்டுங் கடவுளுக் கியம்பி
னிதுவுமோர் புதுமையோ மற்றப்
பாவலர் நயந்து சொக்கனே போலும்
பழுதற நிறைந்தவா சிரியன்
கேவல னல்ல னம்மினு முயர்ந்தோ
னென்றுமுன் கிளர்வுறத் துதித்து
மேவிய வரனைத் தம்மொடுங் கூட்டக்
கூடினன் மேதினி வியப்ப. 11

ஆங்கிடங் கொடுப்ப விருந்திருந் தமிழ்க
ளாய்ந்திடுங் காலையி லொருகாற்
பாங்குறு பொருளின் தகவறி யாமற்
பாவலர் மயங்கிடக் கண்டான்
டோங்கிய பொருளு லன்பினைந் திணையென்
றெடுத்தவ ருவப்புறக் காட்டி

வாங்கரு நினைவற யார்த்தன னுரைத்த
வண்பொருட் கியைந்தவொண் டமிழ்கள் 12

நயமுறு பொருட்குப் பொருந்திய தத்தம்
நலந்தரு மிருந்தமிழ் கண்டே
யியலுடை வாணர் மகிழ்ந்ததி சயத்தோ
டிவையிவை யொள்ளிய வென்னச்
சயமுறு கீரன் பொறுமையா லங்கண்
சாற்றுவா னென்றனித் தமிழிற்
செயிரறு மைந்தாம் பனுவலுக் கொப்புச்
செப்புதற் கரிதெனச் செப்ப. 13

நண்ணியவை யிடைவியந்து நவிலுவதே யொருவனெனக்
கண்ணிவியன் றரும்பொருளாற் கனத்ததொரு கவிதைதொடா
வுண்ணிறைந்த புலவீர்கா ளிதன்பொருள்கண் டுரைமினெனப்
பண்ணினொடு முறைசெய்தான் பாவறிந்த நாவலவன். 14

ஏயவழு வின்றியிலங் கிருங்கவிதை கேட்டலுமே
நேயமொடு நிறைந்திருந்தார் நேர்கொடுப்ப வுரையின்றி
யாயுமியல் நக்கீர னஞ்ஞானத் தாலதனைத்
தீயதென வுரைசெய்யத் தமிழ்ச்சொக்கன் சிரித்தருளி. 15

என்றுமிவன் பொறுமையுள னென்னுமிங் கியாரறியார்
வென்றியுளீர் அவன்றனக்கு வேண்டுவன விளம்பிடுக
வொன்றியநங் கவிதைக்கிங் கிவனொழிய வுங்களிலோர்
நன்றியுளார் குற்றமெனிற் குற்றமது நனியென்றான். 16

இத்தகைமை யியம்பக்கேட் டினிமையினு லேனொரு
முத்தரமொன் றுரையாம லிருக்குங்கா லுயர்விசும்பில்

வித்தகரே நும்வழக்கு விடுவிப்பான் காரணமாம்
அத்தனும்வந் தானுமைப்போல் விடும்விடும்நும் மறிவின்மை.

வணங்குமினீர் வணங்குமினீ ரெனமயக்க நீக்கிடுவா
னணைந்தருள்சேர் திருவாக்குத் தோன்றியிட வதிசயித்துக்
குணம்பயில்வோர் பயமெய்திக் கும்பிடமு னியற்கீரன்
பணிந்தடியேன் செய்தபிழை பொறுத்தியெனப் பழிச்சினனால்

பெருமைதரும் பெயர்மதுரைப் பேரால வாயனென
வுரைசெய்தே யவைநெடுநா ளிருந்தவனவ் வயினொளிப்ப
அருளுடையார் சொக்கனைப்போ லாருளரிங் கெனத்துதித்தார்
பொருளதிகா ரம்பிறங்கிற் றிறையனார் பொருளெனவே. 19

## 4. சீகாளத்தி புராணம்

### நக்கீரச் சருக்கம்

அன்ப ரெண்ணிய வெண்ணியாங் கந்நிலை யளிக்கும்
பின்பு தாழ்சடைப் பெருந்தகை யருளினாற் பெற்ற
பொன்பி றங்கிய தெய்வதப் பலகைதம் புலமை
வன்ப றிந்திடந் தரவதி லிருந்துள மகிழ்ந்து. 1

யாக்கை பெற்றவர்க் குறுதியா மறம்பொரு ளின்பம்
போக்கி னுண்பொரு ளரிலறப் புதுமொழி புணர்த்துத்
தூக்கி னம்பல பலபுனைந் தெறிதிரை சுருட்டு
மாக்க ருங்கட லுலகிடைத் தமிழினை வளர்த்தே 2

வெள்ளைத் தாமரைச் செல்விதன் பெண்மையை விடுத்திட்
டெள்ளற் பாடிலா னுருவெடுத் தெனமுடி யேந்தும்
பிள்ளைப் பான்மதி யான்றமி ழொருவனைப் பெருஞ்சீர்
வள்ளற் பாண்டியற் காருயிர்த் துணைவராய் வாழ்ந்தார் 3

இன்ன வாறவர் வாழுநா ளோர்பக லெரிகான்
மின்னு வாட்படைச் சேல்வல னுயர்த்ததார் வேந்தன்
பொன்னின் மாடத்தின் மேனிலைக் குழையடர் பூங்க
ணன்ன மன்னவ ளோடினி தேறின னமர்ந்தான். 4

ஆய காலையின் மந்தமா ருதத்தொடு மரிக்கண்
வேயை வென்றதோ ளணங்கின்வார் குழன்மணம்வீசச்
சேய னுன்னொளிர் துவரிதழ்ச் செய்யவாய்த் தேவி
மாயி ருங்குழ லின்மண யாமென மதித்தான். 5

மதித்த காவல னதுமனங் கொண்டுதன் மனத்திற்
றதைத்த நுண்பொரு டரவொரு செய்யுள்செய் புலவ
ரிதைக்கொள் கென்றுபொன் னாயிர மொருகிழி யியற்றி
யதைப்பொற் சங்கமண் டபத்தின்முற் றூக்கின னன்றே. 6

புலவர் யாவருந் தாங்கண்ட வாறுபாப் புனைந்து
தலைவன் முன்புபோய்ச் சாற்றிய வனைத்தையுந் தண்டார்
மலைகொ டோளினன் மறுத்தலின் வறிதகன் றனரவ்
விலகு பொற்கிழி யிருந்ததங் கறுப்பவ ரின்றி 7

கால மங்கதி லுரோணியிற் கரியவன் புகுத
வால வெவ்வர வடுத்தவீ ருவாவினு மழன்று
கோல வெஞ்சுடர் தண்சுட ரிரண்டும்வாய்க் கொள்ள
ஞால மைந்தனும் வெள்ளியு மிகல்பட நடந்தார். 8

காலை தண்பனி சொரிதலு நண்பகற் கால
நீல வான்புதை முகிலினம் பெய்வபோ னின்று
மாலை தோன்றுமுன் மலர்தலை வான்கழு வியது
போல நீங்கலு நிகழ்ந்தன மழைவளம் போன்ற. 9

பெயல்வ றந்தபைங் கூழெலாம் பீளொடு கரிந்த
பயம்வ றந்தன மரங்களு மலைகளும் பனிநீர்க்
கயம்வ றந்தன கள்ளியும் பெண்ணையுங் கதிரின்
வெயிலின் வெந்துதம் பசுமைபோ யுலர்ந்தன மிகவும். 10

உண்ப தின்பன நனிமிகக் குறைந்தன வொருங்கு
வெண்க லங்களும் வெள்ளியுஞ் செம்பொனும் விளங்கு
மண்கொ ளொன்பது வகையநன் மணிகளு மலிந்த
வெண்ப தம்பெற லரியதா யிற்றுமன் யார்க்கும். 11

நீடுந் தீப்பசி யாற்சுடர் கொளுந்திய நிலத்தோ
ராடுந் தின்கலா வடகுதின் றனர்நில னகழ்ந்து
வாடும் பல்வகைக் கந்தமுந் தின்றனர் மக்கள்
காடுங் குன்றமு நிரம்பினர் தின்பன கருதி. 12

சிறுவர் கையன தாயர்தாம் பறித்தனர் தின்றார்
முறுகு தீப்பசி பொறுக்கலார் மக்களூன் முதலா
வுறுப சுந்தசை யானையுந் தின்றன ருலகத்
தறைப ழுஞ்சொலைப் புதுக்கினர் மானமாண் பற்றார் 13

வழியெங் கும்பிண மிடறுமிவ் வார்கடற் கப்பாற்
பொழிலின் கண்ணுமுற் றுலாயது நாற்றநீள் போழ்வாய்
முழைவெங் கூற்றுயி ருண்டற வெறுத்தது முள்வாய்க்
கழுகுங் காக்கையு ஞமலியு நரிகளுங் களித்த. 14

சிலர்பி ழைத்தவவ் வற்கடத் திணைமையர்ச் சிக்குந்
தலைமை பெற்றவன் றருமியென் பவனுட றளர்ந்திங்
கிலையு யிர்க்கா ணினிநடந் தெத்திசை யேனு
மலிவி லைத்துநா டெய்துவ மெனமனம் வலித்தான். 15

கோயில் சென்றடைந் தருட்பெருங் கடலினைக் குறுகித்
தாயி லன்புடை யாயிவ ணுறிலினிச் சாவேன்
நேய முய்வதற் கேற்றது புகுந்துறீஇச் செழுமை
யாய பின்பிவ ணடைகுவ லெனத்தொழு தழுதான். 16

வேறு

குழவியங் திங்கள் வேணிக் குரிசின்மற் றதனைக் கேளா
அழுதகங் குழையல் வாழி யன்பவொன் றறைவல் கேட்டி
வழுதிதூக் கினனோர் பாத்தன் மனங்கொள வுரைத்தோர்க் கெ
கிழியதா யிரம்பொன் சங்கக் கிளர்மணி மண்டபத்தே [ன்று

அங்கதை யிப்பா வேந்தற் கறைந்தனை பெறுதி யென்று
கொங்குதேர் வாழ்க்கை யென்னுங் கோதிறாக் கீந்து விட்டான்
பொங்கிய களிப்பி னானும் போய்த்தொடர் பழுதந் தன்னைத்
திங்கள்வெண் குடையி னான்றன் செவிப்புலத் தூற்றி னானல்

மற்றது கேட்டுத் திங்கள் மருகன்றா னினைந்த வண்ணஞ்
சொற்றலி னினிது வந்து தொகுசங்கத் தவர்பாற் போயிப்
பொற்றபாட் டிசைவி யென்றான் பொருக்கெனத் தருமி சென்
கற்றவ ரவைமுன் சொன்னான் கவிகள்கேட் டலுழ வந்தார் [று

ஆங்கவர் தம்முட் கீர னரும்பெறற் கல்விச் செல்வத்
தோங்கிய தருக்கி னாலிவ் வுரைத்தபாக் குற்ற மென்றான்
தாங்கிய வுவகை சிந்தித் தருமிதான் றுனைவிற் போந்து
தேங்கமழ் கடுக்கை வேணிச் செல்வனோ டிதனைச் சொன்னான்

கேட்டலு மங்க யற்கட் கிளியுறழ் கிளவி பங்கன்
பாட்டியற் புலவ னாகிப் பாவலர் தம்பாற் போயெங்
கோட்டமில் கவிக்குக் குற்றங் கூறின ரியாவ ரென்றா
னாட்டிய புகழ்நக் கீர னானெனத் தருக்கிச் சொன்னான். 21

சொல்லலும் குற்றம் யாது சொல்லென நெடுங்க ணல்லார்
இல்லிருங் குழற்கு நாற்றஞ் செயற்கையன் றியற்கை யுண்டோ
இல்லது கூற லான்மற் றிதுகுற்ற மென்று னண்ணல்
மல்லல்விண் மகளிர் கூந்தன் மணமியல் பன்றோ வென்றான். 22

என்றலு மரம்பை யர்க்கு மிருங்குழ னறிய நாற்ற
மின்றென வுரைத்தா னைய னிறைவியென் றுலக மேத்துங்
குன்றிறை பயந்த செல்வி கூந்தலெற் றென்றான் கீரன்
றன்றனித் தருக்கா லம்மை தனதுகூந் தலுமற் றென்றான். 23

ஏற்றினை னெற்றிக் கண்ணு மெரிமருள் சடையுங் காட்ட
மாற்றரு மருட்சி யான்கண் வடிவெலாங் காட்டி னாலுஞ் [டா
சாற்றிய செய்யுள் குற்றஞ் சடைகொண்டு வெருட்டல் வேண்
தோற்றில னிதனுக் கென்றான் றொலைவிலான் வெகுண்டு
[சொல்வான். 24

எம்மொடு முரணி வான்றோ யிமயமால் வரைப்பூங் கொம்பின்
மைம்மலி மறைசொல் லாளு மணங்கமழ் குழல்ப ழித்த
செம்மைகொ ளறிவி லாய்நீ தீர்ப்பருங் குட்ட நோய்கொண்
டிம்மையி லலைக வென்று னிறப்பநக் கீர னஞ்சி. 25

முழுமெயும் பனித்தி ரங்கி முருகலர் கமலம் வென்ற
கழலடி வீழ்ந்தி றைஞ்சிக் கருணையங் கடலே யெந்தா
யிழிபுடை நாயி னன்னே னிலங்கறி விலாது செய்த
பிழைபொறுத் தருளிச் சாபப் பிணிகெட வருள்வா யென்றான்.

என்றலுங் கருணை வள்ள லெரிசினந் தணிந்து கீர
சென்றுநீ கயிலை காணிற் றீருமிக் கொடுநோ யென்று
குன்றுறழ் புரிசை விண்டோய் கோயிலிற் புகுந்தொ ளித்தான்
றென்றலம் பொதிய வெற்பிற் றென்னர்கோ னதிச யித்தான்.

பொற்குவை தருமி யேற்றுப் பொலிந்தினி திருந்தான் வெய்ய
வற்கடந் தீர வெங்கு மழைவளஞ் சுரந்த திப்பாற்
சிற்குணன் றந்த சாபத் தீப்பிணி யுடலம் போர்ப்ப
நற்கவி னிகந்து கீர நாவலன் சிந்தை செய்வான். 28

விரனிரை யழுகி நைந்து வீழ்ந்துகால் குறையா முன்னம்
இருகையும் விரல்கு றைந்திட் டெரிபுகு துடப்பொவ் வாமு
னுருவினுண் புழுக்கள் சோர வொழுகுசீ நாறச் சேணில்
வருதல்கண் டவரு மிழ்ந்து வழிவில கினர்செல் லாமுன் 29

பலப்பல நாடி றந்து படரொளிக் கயிலை யென்னு [ன்
முலப்பில்குன் றெய்தி யிங்கோ யொழிக்குவ மெனத்து ணிந்தா
விலக்கரு நண்பி னோரை விட்டக றற்கு நெஞ்சங்
கலக்கமுற் றழுதி ரங்கிக் கரையில்பே ரஞரு ளாழ்ந்தான். 30

தடையில்பே ரறிஞர் தம்மைத் தனித்தனி விளித்து நும்மோ
டுடனுறை வாழ்வு நீங்கு மொருபெரும் பாவி யேனை
மடனறு நமரங் காணீர் மறவன்மி னென்று தன்மெய்ப்
படுபிணி நோக்கி மார்பம் படத்தழு வாது நின்றான் 31

நாவல ரதைய றிந்து நண்ணிமார் பிறுகப் புல்லி
யோவில்கண் ணருவி பாய வுளங்குழைந் தழுது நல்லோய்
மேவரு நின்னை நீத்து வெறுவிய மிருப்ப நின்ற
ஆவல்வல் வினையு ளார்யா மல்லதிவ் வுலகத் தியாரே. 32

என்றன ரிரங்க மேலோ னெதிர்தழீஇத் தழுவி யாறிக்
குன்றனீர் சிறியற் காகக் குழைந்தழ றமியேன் செல்வல்
பொன்றலி னட்பி னுக்குப் புணர்வொடு பழகல் வேண்டா
நின்றநல் லுணர்ச்சி தானே நிறைக்குமென் றுணர்ந்த நல்லீர்-

என்றுபல் திறத்தாற் கூறி யிணையிலா னரிதி னீங்கிச்
சென்றனன் புலவர் கண்ணுஞ் சிந்தையுந் தொடர்ந்து செல்லத்
தன்றிரைக் கையான் மோதித் தான்றியங் குலையு திர்க்கு
மன்றலம் புதுநீர் வைகை வடகரை கடந்து மன்னோ. 34

என்றினி மதுரை காண்பே மெப்பகல் சவுந்த ரேசன்
தன்றிரு வடிகள் காண்பேந் தாயையெஞ் ஞான்று காண்பேம்
வென்றிவேற் றரும வேந்தர் வேந்தனை யெந்நாட் காண்பேம்
ஒன்றுயிர்த் துணையாஞ் சங்கத் துறவையெப் பொழுது
[காண்பேம். 35

நுணங்குமா ணறிவின் மிக்க நூல்வலார் மறப்பர் கொல்லோ
வணங்குதேர்த் தானை மன்னர் மணிமுடி யுழுக மூற்கா
லணங்குடை யரிமான் றுப்பி னரசர்கோ னினையான் கொல்லோ
இணங்குநூற் புலவர் நாற்பா னெழுவ ரென் றுரைக்குங்
[கொல்லோ. 36

இனித்தமி ழினிமை யாவர்க் கெடுத்திசைத் திடுவ மன்னோ
வெனப்பல பலவு மெண்ணி யினைந்துவெஞ் சுரமி றந்து
புனற்றிரு நாடு புக்குப் பொருந்திரைப் பெண்ணை நாடு
தனைக்கடந் தந்தண் பாலித் தண்ணடை கண்டு சென்றான். 37

அரவணைச் செல்வன் வாழு மந்தமிழ் நிலத்தி னெல்லைத்
திருமலை கண்டு கண்டோர் செறிவினைத் தொடர றுக்கும்
பெருவரைகண் டிறைஞ்சிப் பிறங்குவெள் ளருவி தாழும்
பொருவரு மேம கூடப் பொருப்பினை யினிது கண்டான். 38

அருநெடுங் கடலா நந்தி யடிகள்வந் தவத ரித்து
மூரணூறு சமண்கு றும்பு முருக்குபு சைவ மென்னுந்
திருநில முழுது மாண்டு செல்வமோ டினிதி ருந்த
பொருவில்கல் யாண மென்னும் பொன்மதி னகரங் கண்டான்.

உரைபெயர் பலதே யங்க ளொருபொழு திருந்தவ் வூர்பின்
னொருபொழு திராமற் சென்றே யொளிவளை மணிகொ ழிக்கு
மிரை திரைக் கங்கை யாடி யிறந்தவர் பிறவா வின்பந்
தருதிரு நகரி றைஞ்சித் தடவரை நாடு புக்கான். 40

## 5. கம்பராமாயணம்

### பள்ளியடைப்படலம்

பொருவில் தூதுவர் போயினர் பொய்யிலார்
இரவும் நண்பக லும்கடி தேகினார்
பரதன் கோயிலுற் றார்படி காரிர்எம்
வரவு சொல்லுதிர் மன்னவற் கேயென்றார். 1

தூதர் வந்தனர் உந்தைசொல் லோடெனக்
காதல் முந்திக் களிக்கின்ற சிந்தையான்
போது கென்னெனப் புக்கவர் கைதொழத்
தீதி லன்கொல் திருமுடி யோனென்றான். 2

வலியன் என்றவர் கூற மகிழ்ந்தனன்
இலைகொள் பூணிளங் கோனெம் பிரானொடும்
உலைவில் செல்வத்த னோவென உண்டெனத்
தலையின் ஏந்தினன் தாழ்தடக் கைகளே. 3

மற்றும் சுற்றத் துளார்க்கும் வரன்முறை
உற்ற தன்மை வினாவி யுவந்தபின்
இற்ற தாகும் எழுதரு மேனியாய்
கொற்ற வன்தன் திருமுகம் கொள்கென்றார். 4

என்று கூறலும் ஏத்தி யிறைஞ்சினான்
பொன்றி ணிந்த பொருவில் தடக்கையால்

நின்று வாங்கி யுருகிய நெஞ்சினான்
துன்று நாண்மலர்ச் சென்னியிற் சூடினான். 5

வாணி லாநகை தோன்ற மயிர் புறம்
பூண வானுயர் காதலிற் பொங்கினான்
தாணி லாமலர் தூவினன் தம்முனைக்
காண லாமெனும் ஆசை கடாவவே. 6

எழுக சேனையென் றேவினன் எய்தினன்
தொழுது கேகயர் கோமகன் சொல்லொடும்
தழுவு தேரிடைத் தம்பியொ டேறினான்
பொழுதும் நாளும் குறித்திலன் போயினான். 7

ஆறும் கானும் அகன்மலை யுங்கடந்(து)
ஏறி யேழ்பகல் நீந்திப்பின் எந்திரத்(து)
ஊறு பாகு மடையுடைத் தொண்முளை
நாறு பாய்வயற் கோசலம் நண்ணினான். 8

நாவி நீத்தரு நல்வளந் துன்னிய
பூவி நீத்தென நாடு பொலிவொரீஇத்
தேவி நீத்தரும் சேணெறி தாவிட
ஆவி நீத்த உடலென ஆயதே. 9

என்ற நாட்டினை நோக்கி யிடருழந்(து)
ஒன்றும் உற்ற துணர்ந்திலன் உன்னுவான்
சென்று கேட்பதோர் தீங்குள தாமெனா
நின்று நின்று நெடிதுயிர்த் தானரோ. 10

மீண்டும் எய்தியம் மெய்யெனும் நல்லணி
பூண்ட வேந்தன் திருமகன் புந்திதான்

தூண்டு தேரினும் முந்துறத் துன்னுவான்
நீண்ட வாயில் நெடுநகர் நோக்கினன். 11

அண்ட முற்றும் திரிந்தயர்ந் தாய்அமு(து)
உண்டு போதியென் றெண்கதிர்ச் செல்வனை
விண்டொ டார்ந்து விலக்குவ போல்வன
கண்டி லன்கொடி யின்னெடுங் கானமே. 12

ஈட்டு நன்புகழ்க் கீட்டிய யாவையும்
வேட்ட வேட்டவர் கொண்மின் விரைந்தெனக்
கோட்டி மாக்களைக் கூவுவ போல்வன
கேட்டி லன்முர சின்கிளர் ஓதையே. 13

அன்ன தன்மை யகநகர் நோக்கியே
பின்னை யப்பெரி யோர்தம் பெருந்தகை
மன்னன் வைகும் வளநகர் போலுமீ(து)
என்ன தன்மை இளையவ னேயென்றான். 16

வேற்ற டங்கலர் விண்ணுற வென்றிடும்
கூற்ற டங்கப் பொருநெடுங் கோளினாய்
சேற்ற டங்கண் திருவொடு நீங்கிய
பாற்ற டங்கடல் ஒத்தது பாரென்றான். 17

அனைய வேலையில் அக்கடைத் தோரண
மனையின் நீணெடு மங்கல வீதிகள்
நினையும் மாத்திரத் தேகிய நேமியான்
தனைய னும்தந்தை சார்விட மேவினான். 18

ஆய காலையில் ஐயனை நாடித்தன்
தூய கையில் தொழலுறு வான்தனைக்

கூய என்னை குறுகுதிர் ஈண்டென
வேய்கொள் தோளி ஒருத்தி விளம்பினாள். 19

வந்து தாயை அடியை வணங்கலும்
சிந்தை யாரத் தழுவினள் தீதிலர்
எந்தை என்னையர் எங்கையர் என்றனள்
அந்த மில்குணத் தானும தாமென்றான். 20

வேறு

மூண்டெழு காதலான் முளரித தாள்தொழ
வேண்டினன் எய்தினன் உள்ளம் விம்முமால்
ஆண்டகை நெடுமுடி அரசர் கோமகன்
யாண்டையான் பணித்திர்என் றிருகை கூப்பினான். 21

ஆனவன் உரைசெய அழிவில் சிந்தையாள்
தானவர் வலிதவ நிமிர்ந்த தானையத்
தேனமர் தெரியலான் தேவர் கைதொழ
வானகம் எய்தினான் வருந்தல் நீயென்றாள். 22

எறிந்தன கடியசொல் செவியுள் எய்தலும்
நெறிந்தலர் குஞ்சியன் நெடிது வீழ்ந்தனன்
ந்திலன் உயிர்த்திலன் அசனி யேற்றினால்
மறிந்துயர் மராமரம் மண்ணுற் றென்னவே. 23

வாயொளி மழுங்கத்தன் மலர்ந்த தாமரை
ஆயலர் நயனங்கள் அருவி சோர்தரத்
தீயெரி செவியில்வைத் தனைய தீயசொல்
நீயல துரைசெய நினைவ ரோஎன்றான். 24

எழுந்தனன் ஏங்கினன் இரங்கப் பின்னரும்
விழுந்தனன் விம்மினன் வெய்து யிர்த்தனன்

அழிந்தனன் அரற்றினன் அரற்றி யின்னன
மொழிந்தனன் பின்னரும் உருவிற் செவ்வியான். 23

அறந்தனை வேரறுத் தருளைக் கொன்றனை
சிறந்தநின் தண்ணளித் திருவைத் தேசழித்(து)
இறந்தனை யாமெனில் இறைவ நீதியை
மறந்தனை உனக்கிதின் மாசு மேலுண்டோ. 24

முதலவன் முதலிய முந்தை யோர்பழங்
கதையையும் புதுக்கிய தலைவன் கண்ணுடை
நுதலவன் சிலைவிலின் நோன்மை நூறிய
புதல்வனை எங்ஙனம் பிரிந்து போயினாய். 25

பற்பகல் நிழற்றுநின் கவிகை பாய்நிழல்
நிற்பன பல்லுயிர் உணங்க நீநெடுங்
கற்பக நறுநிழல் காத லித்தியோ
மற்பக மலர்ந்ததோள் மன்னர் மன்னனே. 26

ஏழுயர் மதகளிற் றிறைவ ஏகினை
வாழிய கரியவன் வறியன் கையெனப்
பாழியம் புயத்துநின் பணியின் நீங்கிலா
ஆழியை இனியவற் களிக்க எண்ணியோ. 27

பற்றிலை தவத்தினில் பயந்த மைந்தற்கு
முற்றுல களித்தது முறையின் எய்திய
கொற்றவன் முடிமணக் கோலங் காணவும்
பெற்றிலை போலும்நின் பெரிய கண்களால். 28

ஆற்றலன் இன்னன பன்னி ஆவலித்(து)
ஊற்றுறு கண்ணினன் உருகு வான்,

தேற்றினள் ஒருவகை சிறிது தேறிய
கூற்றுறழ் வரிசிலைக் குரிசில் கூறுவான். 29

எந்தையும் யாயும்எம் பிரானும் எம்முனும்
அந்தமில் பெருங்குணத் திராமன் ஆதலால்
வந்தனை யவன்கழல் வைத்த போதலால்
சிந்தைவெங் கொடுந்துயர் தீர்க லாதென்றான். 30

அவ்வுரை கேட்டலும் அசனி யேறென
வெவ்வுரை வல்லவள் மீட்டுங் கூறுவாள்
தெவ்வடு சிலையினாய் தேவி தம்பியென்(று)
இவ்விரு வோரொடும் கானத் தானென்றாள். 31

வனத்தினன் என்றவள் இசைத்த மாற்றத்தை
நினைத்தனன் இருந்தனன் நெருப்புண் டானென
வினைத்திறம் யாதினி விளைவ தின்னமும்
எனைத்துள கேட்பன துன்பம் யானென்றான். 32

ஏங்கின விம்மலோ டிருந்த ஏந்தல்அப்
பூங்கழற் காலவன் வனத்துப் போயது
தீங்கிழைத் ததனினோ தெய்வம் சீறியோ
ஓங்கிய விதியினோ யாதி னோவெனா. 33

தீயன இராமனே செய்யு மேலவை
தாய்செயல் அல்லவோ தலத்து ளோர்க்கெலாம்
போயது தாதைவிண் புக்க பின்னரோ
ஆயதன் முன்னரோ அருளு வீரென்றான். 34

குருக்களை யிகழ்தலின் அன்று கூறிய
செருக்கினா லன்றுஒரு தெய்வத் தாலுமன்(று)

அருக்கனே யனையஅவ் வரசர் கோமகன்
இருக்கவே வனத்தவன் ஏகி னானென்றாள். 37

குற்றமொன் றில்லையேல் கொதித்து வேறுளோர்
செற்றதும் இல்லையேல் தெய்வத் தாலன்றேல்
பெற்றவன் இருக்கவே பிள்ளை கான்புக
உற்றதென் பின்அவன் உலந்த தென்என்றான். 38

வாக்கினால் வரந்தரக் கொண்டு மைந்தனைப்
போக்கினேன் வனத்திடை போக்கிப் பார்உனக்(கு)
ஆக்கினேன் அவன்அது பொறுக்கி லாமையால்
நீக்கினான் தன்னுயிர் நேமி வேந்தென்றாள். 39

சூடின மலர்க்கரம் சொல்லின் முன்செவி
கூடின புருவங்கள் குதித்துக் கூத்துநின்(று)
ஆடின உயிர்ப்பினோ டழற்கொ முந்துகள்
ஓடின உமிழ்ந்தன உதிரம் கண்களே. 40

துடித்தன கபோலங்கள் சுற்றும் தீச்சுடர்
பொடித்தன மயிர்த்தொளை புகையும் போர்த்தது
மடித்தது வாய்நெடு மழைக்கை மண்பக
அடித்தன ஒன்றொடொன் றசனி யஞ்சவே. 41

கோடியவெங் கோபத்தால் கொதித்த கோளரி
கடியவள் தாயெனக் கருது கின்றிலன்
நெடியவன் முனியுமென் றஞ்சி நின்றனன்
இடியுரு மனையவெம் மொழியி யம்புவான். 42

மாண்டனன் எந்தைஎன் தம்முன் மாதவம்
பூண்டனன் நின்கொடும் புணர்ப்பி னாலென்றால்

கீண்டிலன் வாயது கேட்டு நின்றயான்
ஆண்டனனேயன்றே அரசை யாசையால். 43

நீயினும் இருந்தனை யானும் நின்றனன்
ஏயெனும் மாத்திரத் தெற்று கிற்றிலன்
ஆயகன் முனியுமென் றஞ்சி னேனலால்
தாயெனும் பெயரெனைத் தடுக்கற் பாலதோ. 44

மாளவும் உளனொரு மன்ன வன்சொலால்
மீளவும் உளனொரு வீரன் மேயபார்
ஆளவும் உளனொரு பரதன் ஆகினல்
கோளல தறநெறிக் குறையுண் டாகுமோ. 45

வேறு

நோயீர் அல்லீர் நுங்கண வன்தன் உயிருண்டீர்
பேயீ ரேநீர் இன்னமி ருக்கப் பெறுவீரே
மாயீர் மாயா வன்பழி தந்தீர் பால்தந்தீர்
தாயீ ரேநீர் இன்னமெ னக்கென் தருவீரே. 46

இறந்தான் தந்தை ஈந்தவ ரத்துக் கிழிவென்று
அறந்தான் ஈதென் றன்னவன் மைந்தன் அரசெல்லாம்
துறந்தான் தாயின் சூழ்ச்சியின் ஞாலம் அவனோடும்
பிறந்தான் ஆண்டான் என்னுமி தென்றுற் பெறலாமே. 47

உய்யா நின்றேன் இன்னமும் எம்முன் உடன்வந்தான்
கையார் கல்லைப் புல்லட குண்ணக் கலமேந்தி
வெய்யோன் நான்இன் சாலியின் வெண்சோ றமுதென்ன
நெய்யோ டுண்ண நின்றது நின்றார் நினையாரோ. 48

வில்லார் தோளான் மேவினன் வெங்கா னகமென்ன
நல்லா னன்றே துஞ்சினன் நஞ்சே யனையாளைக்

கொல்லேன் மாயேன் வன்பழி யாலே குறைவற்றேன்
அல்லே னேயான் அன்புடை யார்போல் அழுகின்றேன். 47

பாரோர் கொள்ளார் யானுயிர் பேணிப் பழிபூணேன்
தீரா தொன்றே துன்பமிவ் வூரில் திருநில்லாள்
ஆரோ டெண்ணிற் றுருரை தந்தார் அறமெல்லாம்
வேரோ டிங்கே டாகமு டித்தென் விளைவித்தாய். 48

கொன்றேன் நானென் தந்தையை மற்றுன் கொலைவாயால்
ஒன்றே கானத் தண்ணலை யுய்த்தேன் உலகாள்வான்
நின்றேன் என்றால் நின்பிழை யுண்டோ பழியுண்டோ
என்றே னுந்தான் என்புகழ் மாயும் இடமுண்டோ. 49

ஏன்றுன் பாவிக் கும்பிவ யிற்றின் இடைவைகித்
தோன்றும் தீராப் பாதகம் அற்றென் துயர்தீரச்
சான்றும் தானே நல்லற மாகத் தகைஞாலம்
மூன்றும் காண மாதவம் யானே முயல்கின்றேன். 50

சிறந்தார் சொல்லும் நல்லுரை சொன்னேன் செயலெல்லாம்
மறந்தாய் செய்தாய் ஆகுதி மாயா உயிர்தன்னைத்
துறந்தா யாகில் தூயையும் ஆதி உலகத்தே
பிறந்தா யாதி ஈதல தில்லை பிறிதென்றான். 51

## வேறு

இன்னணம் இனையன இயம்பி யானும்இப்
பன்னரும் கொடுமனப் பாவி பாடிரேன்
துன்னரும் துயர்கெடத் தூய கோசலை
பொன்னடி தொழுவனென் றெழுந்து போயினான். 52

## 6. கலிங்கத்துப்பரணி

### அவதாரம்

அன்றிலங்கை பொருதழித்த வவனேயப்
பாரதப்போர் முடித்துப் பின்னை
வென்றிலங்கு கதிராழி விசயதரன்
எனவுதித்தான் விளம்பக் கேண்மின் 1

தேவரெலாங் குறையிரப்பத் தேவகிதன்
திருவயிற்றில் வசுதேவற்கு
மூவுலகுந் தொழநெடுமால் முன்னொருநாள்
அவதாரஞ் செய்த பின்னை 2

### வேறு

இருண்முழுது மகற்றும்விது குலத்தோன் றேவி
இகல்விளங்கு தபனகுலத் திராச ராசன்
அருடிருவின் திருவயிற்றில் வந்து தோன்றி
யாலிலையின் அவதரித்தான் அவனே மீள. 3

### வேறு

வந்தருளி யவதாரஞ் செய்தலுமே
மண்ணுலகு மறைக ளொன்கும்
அந்தரநீங் கினவென்ன அந்தரதுந்
துமிமுழங்கி யெழுந்த தாங்கே. 4

அலர்மழைபோன் மழைபொழிய வதுகண்டு
கங்கைகொண்ட சோழன் றேவி
குலமகள்தன் குலமகனைக் கோகனத
மலர்க்கையா னெடுத்துக் கொண்டே. 5

அவனிபாக்குப் புத்திரனு மடையாள
மவயவத்தி னடைவே நோக்கி
யிவனெமக்கு மகனாகி யிரவிகுலம்
பாரிக்கத் தகுவ னென்றே. 6

வேறு

திங்களி னிளங்குழவி செம்மலிவ னென்றுஞ்
செய்யபரி திக்குழவி யையனிவ னென்றுந்
தங்களின் மகிழ்ந்திரு குலத்தரசர் தாமுந்
தனித்தனி யுவப்பதொர் தவப்பயனு மொத்தே. 7

சினப்புலி வளர்ப்பதொர் சிறுப்புலியு மொத்தே
திசைக்களி றணைப்பதொர் தனிக்களிறு மொத்தே
யனைத்தறமு மொக்கவடி வைக்கவடி வைத்தே
யறத்தொடு மறத்துறை நடக்கநடை கற்றே. 8

பண்டுவசு தேவன்மக னாகிநில மாதின்
படர்களையு மாயனிவ னென்றுதெளி வெய்தத்
தண்டுதனு வாள்பணில நேமியெனு நாமத்
தன்படைக ளானதிரு வைம்படை தரித்தே. 9

தாயர்தரு பாலமுது சுரக்கவரு நாளை
தானுமுல கத்தவர் தமக்கருள் சுரந்தே
தூயமனு வுஞ்சுருதி யும்பொருள் விளங்கிச்
சொற்கடெரி யத்தனது சொற்கடெரி வித்தே. 10

வேறு

திருமார்பின் மலர்மடந்தை திருக்கழுத்தின்
மங்கலநா ணென்ன முந்நூற்

பெருமார்பின் வந்தொளிரப் பிறப்பிரண்டா
வதுபிறந்து சிறந்த பின்னர். 11

போதங்கொள் மாணுருவாய்ப் புவியிரந்த
அஞ்ஞான்று புகன்று கொண்ட
வேதங்க ணான்கினையும் வேதியர்பாற்
கேட்டருளி மீண்டு கற்றே. 12

நிறைவாழ்வைப் பெறனமக்கு மணித்தென்று
நிலப்பாவை களிப்ப விந்தத்
துறைவாளைப் புயத்திருத்தி யுடைவாளைத்
திருவரையி னொளிர வைத்தே. 13

வேறு

ஈரிரு மருப்புடைய வாரண முகைத்தே
யிந்திர னெதிர்க்கவரை வென்றுவரு மேயா
னோரிரு மருப்புடைய வாரண முகைத்தே
யொன்னலரை வெல்வனென வன்னது பயின்றே

இற்றைவரை யுஞ்செல அருக்கனொரு நாள்போல்
ஏழ்பரி யுகைத்திரு ளகற்றிவரு மேயா
னொற்றைவய மானடவி யித்தரை வளாகத்
துற்றவிரு டீர்ப்பனென மற்றது பயின்றே. 15

சக்கிர முதற்படையொ ரைந்துமுத னாளே
தன்னுடைய வானவத னாலவை நமக்குத்
திக்குவிச யத்தின்வரு மென்றவை பயிற்றிச்
செங்கைமலர் நொந்தில சுமந்தில தனக்கே 16

வேறு

உரைசெய்பல கல்விகளி னுரிமைபல சொல்லுவதெ
னுவமையுரை செய்யி னுலகத்

தரசருள ரல்லரென வவைபுகழ மல்குகலை
யவையவைகள் வல்ல பிறகே 17

இசையுட னெடுத்தகொடி யபயனவ னிக்கிவனை
யிளவரசில் வைத்த பிறகே
திசையரச ருக்குரிய திருவினை முகப்பதொரு
திருவுள மடுத்த ருளியே 18

வளர்வதொர் பதத்தினிடை மதகரி முகத்தினிடை
வளையுகிர் மடுத்து விளையா
டிளவரி யெனப்பகைஞ ரெதிர்முனை களக்கிழிய
எறிபடை பிடித்த ருளியே 19

குடதிசை புகக்கடவு குரகத விதத்திரவி
குறுகலு மெறிக்கு மிருள்போல்
வடதிசை முகத்தரசர் வருகத முகத்தனது
குரகத முகைத்த ருளியே. 20

புரமெரி மடுத்தபொழு ததுவிது வெனத்திகிரி
புகையெரி குவிப்ப வயிரக்
கரமெரி மடுத்தரசர் கரமெதிர் குவிப்பதொரு
கடவரை தனைக்க டவியே. 21

குளமுதிர மெத்தியதோர் குரைகடல் கடுப்பவெதிர்
குறுகலர்கள் விட்ட குதிரைத்
தளமுதிர வெட்டியொரு செருமுதிர வொட்டினர்கள்
யே. 22

## வேறு

மனுக்கோட்ட மழித்தபிரான்
வளவர்பிரான் திருப்புருவத்

தனுக்கோட்ட நமன்கோட்டம்
பட்டதுசக் கிரக்கோட்டம். 23

வேறு

பொருத ராதிபர் கண்கள் சிவந்தில
போரி லோடிய கால்கள் சிவந்தன
விருத ராச பயங்கரன் செங்கையில்
வேல்சி வந்தது கீர்த்தி வெளுத்ததே. 24

வேறு

மாவுகைத் தொருதனி யபய னிப்படி
வட திசை மேற்செல மன்னர் மன்னவன்
தேவருக் கரசனாய் விசும்பின் மேற்செலத்
தென்றிசைக் குப்புகுந் தன்மை செப்புவாம். 25

வேறு

மறையவர் வேள்வி குன்றி
மனுநெறி யனைத்து மாறித்
துறைகளோ ராறு மாறிச்
சுருதியு முழக்க மோய்ந்தே. 26

சாதிக ளொன்றோ டொன்று
தலைதடு மாறி யாரு
மோதிய நெறியி னில்லா
தொழுக்கமு மறந்து போயே. 27

ஒருவரை யொருவர் கைம்மிக்
கும்பர்தங் கோயில் சோம்பி
யரிவையர் கற்புச் சோம்பி
யரண்களு மழிய வாங்கே. 28

கலியிருள் பரந்த காலைக்
கலியிருள் கரக்கத் தோன்று
மொலிகட லருக்க னென்ன
வுலகுய்ய வந்து தோன்றி. 29

காப்பெலா முடைய தானே
படைப்பதுங் கடனாக் கொண்டு
கோப்பெலாங் குலைந்தோர் தம்மைக்
குறியிலே நிறுத்தி வைத்தே. 30

விரிபுனல் வேலை நான்கும்
வேதங்க ணான்கு மார்ப்பத்
திரிபுவ னங்கள் வாழ்த்தத்
திருவபி டேகஞ் செய்தே. 31

## வேறு

அறைகட லரச ரப்பொழு
தடிமிசை யறுகெ டுத்திட
மறையவர் முடியெ டுத்தனர்
மனுநெறி தலையெ டுக்கவே. 32

நிரைமணி பலகு யிற்றிய
நெடுமுடி மிசைவி திப்படி
சொரிபுன லிடைமு ளைத்தன
துறைகளி னறம னைத்துமே. 33

பொதுவற வுலகு கைக்கொடு
புலிவளர் கொடியெ டுத்தலு
மதுமுதல் கொடியெ டுத்தன
வமரர்கண் முழுவெ டுக்கவே. 34

குவிகைகொ டரசர் சுற்றிய
குரைகழ லபயன் முத்தணி
கவிகையி னிலவெ றித்தது
கலியெனு மிருளொ ளித்ததே. 35

## 7. அரிச்சந்திர புராணம்

### நகர் நீங்கு காண்டம்

தலமுழுதும் தவமுனிவன் தனக்களித்தேம்
இனியுறைதல் தகுதி யன்றென்(று)
இலகுமணி மண்டபமும் எழில்மணிச்சிங்
காதனமும் இழிந்து போந்து
பலவரச ருடனமைச்சர் அழுதுடன்போய்ப்
பரதவிக்கப் பதாதி மொய்க்கக்
குலமகனும் மடமயிலும் முன்னடக்கப்
பின்னடந்தான் கொற்ற வேந்தன். 1

தொடைதுறந்து முடிதுறந்து பணிதுறந்து
துடிமுரசம் துறந்து தாமக்
குடைதுறந்து வெண்கவரிக் குழாந்துறந்து
கரிபரிதேர்க் குலந்து றந்து
கடைதுறந்து மறுகணைந்த காவலன்தன்
திருமுகத்தைக் கண்டோர் எல்லாம்
அடையமனம் அழிந்துருகி அவரவரே
முகத்திலறைந் தழுவா ரானார். 2

மயிரோடும் சிறகிழந்த போகில்போல்
வேலியொடு வரம்பி ழந்த

பயிரேபோல் கரமிழந்த கரியேபோல்
பொறியிழந்த பாவை யேபோல்
உயிரேபோய்ப் பரதவிக்கும் உடலேபோல்
மத்தாலுள் ளுடைந்த லம்பும்
தயிரேபோல் தளர்ந்தலைந்து தத்தமக்கு
நிகழ்ந்தவெலாம் சாற்ற லுற்றார். 3

கொடிமீது செறிதேரும் குஞ்சரமும்
பொற்சிவிகைக் குழாமும் இன்றிப்
படிமீது நடந்திடவும் படித்தனவோ
பார்வேந்தன் பாதம் என்பார்
அடிமீது தொழுமரசர் முடிமீதும்
மடிமீதும் அன்றிச் சுட்ட
பொடிமீது நடந்திடவும் பொறுத்தனவோ
குலகுமரன் பொற்றாள் என்பார். 4

அஞ்சாயல் மடவன்னத் தணிதூவி
யதனாலும் அனிச்சத் தாலும்
பஞ்சாலும் பதைபதைக்கும் பதத்தாட்குக்
கால்நடையோ பலித்த தென்பார்
செஞ்சாலிக் கோசலமும் ராசகுல
வளநாடும் தேவர் நாடும்
அஞ்சாமல் காத்தருளெம் பெருமானுக்
கிதுவோவந் தடுத்த தென்பார். 5

முல்லைமுகை நகையாளும் முடிவேந்த
னும்மகனும் முழுதும் போன
எல்லையெலாம் மணவறையும் மலரணையும்
உண்டோவென் றிரங்கி வீழ்வார்

தொல்லைவிதிப் பயனாலே வந்திரந்த
மாமுனிவன் சொன்ன எல்லாம்
இல்லையென நீங்தோருக் கித்தனையோ
பெரும்பேறென் றேங்கி வீழ்வார். 6

வல்லார்க்கும் மாட்டார்க்கும் மறமேநன்
றென்றுரைப்பார் மறம்நன் றாமோ
அல்லார்க்கும் குழல்மடவீர் அறமேநன்
றென்றுரைப்பார் அதுநன் றாகில்
நல்லார்க்கும் தீயார்க்கும் எல்லார்க்கும்
ஒருமையினால் நடவா தென்னே
எல்லார்க்கும் உளதாகில் எங்கோனுக்
கிலையான தென்னோ என்பார். 7

கொண்டிருந்த வளநாடும் குறையாத
பெருந்திருவும் கொடித்திண் தேரும்
பண்டிருந்த மாளிகையும் பரிசனமும்
தமக்களித்துப் பாலனோடும்
வண்டிருந்த தாரானும் வாணுதலும்
வறியார்போல் வனத்தே போகக்
கண்டிருந்தும் விலக்காத கௌசிகனார்
தம்மனமும் கல்லோ என்பார். 8

செம்மையினால் உலகமெலாம் தனக்களித்துச்
செறிவனத்தே தேம்பிச் செல்வோர்
தம்மைவர வழைத்திருத்தி ஒருமனைக்குத்
தலமீயாத் தறுகட் பாவி
நம்மையெலாம் காத்தளிக்க வல்லவனோ
எனக்கரங்கள் நடுக்கி மாறு

வெம்மையினால் வெய்துயிர்ப்பார் மின்னாமல்
இடிவந்து வீழ்ந்த தென்பார். 9

என்றலமந் தனைவோரும் வயிறலைத்து
விழுந்தேங்கி இரங்குங் காலை
கன்றினொடும் பிடியினொடும் கிளையினொடும்
வனம்புகுதும் களிறே போல
இன்றளித்த தருள்முனிவர்க் கேற்றனவோ
ஏற்றிலவோ என்னா ஏங்கிக்
குன்றனைய மதில்கடந்து தனிநடந்து
சரயுவினைக் குறுகினானே. 10

உரைபெறுசீர் இரவிகுலத் தரசருக்கு
வழிவழியே உரிமை யாய
சரயுவெனும் தாதியரிச் சந்திரற்கு

விரைமலர்த்தாள் பூண்டுகிடந் தாற்றிடவும்
இழிந்தேகி விரைந்து போய்மேல்
கரையணுகி வரிமணலில் விரிமலர்கள்
சொரியும்நறுங் காவிற் புக்கான். 11

வரைக்கனக புயத்தினனும் மலர்க்காவில்
விரிமணல்மேல் வந்திருந்தான்
விரைக்கரும்பூங் குழலாளும் திருமகனும்
இருபாலும் வீற்றிருந்தார்
திரைக்கடலுள் பொருனெனப்போய்ச் செங்கதிரோன்
சென்றனன்அச் சென்ற காலை
உரைபபனவும் விளைப்பனவும் அறிந்துமனு
முனிவனும்வந் தொளித்திருந்தான். 12

அக்காலத் தமைச்சரெலாம் அடல்வேந்தன்
        அடிபோற்றி அரசே நீமீண்(டு)
எக்காலம் எழுந்தருள்வ தென்றுரைக்க
        ஆங்கவரை இருகண் நோக்கி
முக்காலங் களுமுணரும் முனிவனுக்கின்
        றியான்கொடுத்த மூதூர் தன்னில்
எக்கால மும்வருவ தில்லையென்றான்
        அமைச்சரெலாம் ஏங்கி வீழ்ந்தார். 13

முன்செய்த தீவினையோ முனிசெய்த
        உபகாரம் முன்னுண் டாகப்
பின்செய்த கைம்மாறோ பேரரசு
        கொடுத்தகன்று பெருங்கா டெய்த
மின்செய்த நெடுவேலாய் மெய்த்தவனை
        யாம்துரந்து விட்டே மாகில்
என்செய்வான் எனவுரைப்பார் யாம்போதும்
        அவன்போருக் கெதிர்க்க என்பார். 14

தோலேந்தும் மார்பில்மலர்த் தொடையேந்தத்
        தருப்பைமுடிச் சுருக்கத் தோடே
கோலேந்தும் குறுங்கைகதிர் வாளேந்தக்
        கனகமுடிக் கோட ரத்தின்
மேலேந்தி இருடியிருந் துலகாள
        அவன்குடைக்கீழ் வீணே யன்னான்
காலேந்தி வாழ்வதில்யாம் கனல்மூழ்கல்
        அமையுமெனக் கட்டு ரைப்பார் 15

சடைபிடித்தும் கரம்பிடித்தும் தாள்பிடித்தும்
        மரவுரியால் தகைத்து டுத்த

உடைபிடித்தும் ஈர்த்தவனை உயர்வனத்தில்
இப்பொழுதே ஓட்டு கின்றோம்
மடைபிடித்த வயல்சூழும் வளநாடு
நீபுரக்க வருவாய் என்று
படைபிடித்த மலர்க்கரத்தால் பதம்பிடித்து
விறல்வேந்தர் பணிந்து வீழ்ந்தார். 16

படிபுரக்கும் மன்னவன்கேட் டிருகரத்தால்
செவிபுதைத்துப் பாவம் அந்தோ
குடிகெடினும் உயிர்கெடினும் கொடுத்ததுவாங்
கேனென்று கூறும் எல்லை
கடிபொழிலில் காத்திருந்த கௌசிகனும்
வந்தெதிர்த்தான் கண்ட போதே
அடியிணைதன் முடிசாத்தி இருகரத்தால்
உறப்பூண்டான் அரசர் கோமான். 17

வெய்தாநீ வேடுவரால் விலங்கனைத்தும்
கொல்வித்தாய் வெகுண்டே னத்தை
எய்தாய்என் மக்களையும் இசைகேட்டுத்
துரத்தடித்தாய் இன்றும் என்னை
வைதாய்நீ எனக்களித்த மண்டலத்தை
யான்தரநீ வாங்கா யாகில்
செய்தாய்இன் றிவருரைத்த தீமையெலாம்
என்னமுனி செப்பி னானே. 18

சிறுத்தவர்கள் அறியாமல் செய்தபிழை
அத்தனையும் செவ்வி யோய்நீ
பொறுத்தருளா யாமாகில் பொறையென்னும்
முறையென்னும் புலமை யென்னும்

ஒறுத்திடினும் வெறுத்திடினும் உனக்களித்த
அரசுரிமை ஒருகா லத்தும்
மறுத்தினியான் வாங்கேனென் றெடுத்துரைத்தான்
மன்னன்முனி வாட்ட முற்றான். 19

பொன்கேட்கப் பொன்னளித்தான் புவிகேட்கப்
புவியளித்தான் போதா தென்று
என்கேட்கி னும்தருவ தில்லையெனும்
புன்மையிவ னிடத்தில் இல்லை
முன்கேட்ட பொருளாலே மொழிவழுவந்
தெய்துமது முடக்க மானால்
பின்கேட்டார் இகழ்வார்கள் யாம்பொறுத்தும்
எனநினைந்து பேச லுற்றான். 20

ஒன்றுரைக்க நீகேளாய் உண்மைக்கும்
வண்மைக்கும் உரியாய் என்னை
இன்றுரைத்த பிழைபொறுத்தேன் அழல்வேள்வி
முடித்திடுதற் கீவேன் என்றங்(கு)
அன்றுரைத்த பொருளதனை அளிப்பாயோ
அளியாயோ அரச என்றான்
என்றுரைத்த கௌசிகனை அடிதொழுது
வாய்புதைத்தங் கிது ரைப்பான். 21

உன்னுடனே உரைத்தபொருள் உனக்கடியேன்
உகந்தளித்த உரிமைச் செல்வந்
தன்னுடனே போனதென உணர்ந்தேனு
யினுமுனிவா தருவேன் என்றே
நின்னுடனே யானுரைத்த சபதமினி
மாறுவனோ நீயாள் விட்டால்

பொன்னுடனே தருவனெனப் புகரோனை
அவனழைத்துப் பொருத்தி னானே. 22

உள்ளியதீ வினையனைத்தும் தனித்திருத்தி
வகைவகையே யுரைத்து நீபோய்
அள்ளியிடும் பொருள்கவரா தானையின்மேல்
கவண்சிலைபோம் அளவும் தந்தால்
கொள்ளுதிநீ பின்போன கூலியையும்
பெறுதியெனக் கூறித் தீய
வெள்ளிதனை யுடன்கூட்டி மீண்டுமழைத்
தொருவாய்மை விளம்ப லுற்றான். 23

துன்றுபசிக் கடகுகனி தேடும்போ
தெனக்கினிய சோறு வேண்டும்
என்றுமொழி தந்திடினும் ஏலாது
வேண்டாளென் இவன்ஊண் பெற்றால்
அன்றுபொருள் தருமுன்உணற் ககலேல்நில்
எனத்தடுநம் அவதி வந்தால்
நின்றவரைக் கரிகுறித்து நில்லாமல்
மறுதினத்தில் நீவா என்றான். 24

அடுத்திருத்தி மனங்கலக்கி முனிக்களித்த
மொழிமாறி அளியேன் என்று
எடுத்துரைக்கில் நின்னரசை யான்வாங்கித்
தருவேன்என் இசைந்தா னாகில்
தடுத்தழைத்து வருதிநமக் கதுபோதும்
எனப்பலவும் சாறறுக கூடி
விடுத்தனன்விட் டரசனுக்கு விடைகொடுத்து
மாமுனிவன் மீண்டு போனான். 25

முனியேக மன்னவனும் மூரிநெடுஞ்
சேனைதனை முனிவன் தன்னோ(டு)
இனியேகும் அவற்கினியார் எனக்கினியார்
எனவழுதங் கியாரும் மீண்டார்
பனியேகும் முன்னெழுந்து பைந்தொடியும்
மன்னவனும் பாலன் தானும்
தனியேகக் கண்டமைச்சன் சத்தியகீர்த்
தியுமவர்கள் தம்பின் சென்றான். 26

வருகின்ற மந்திரியை மன்னவனும்
கண்டுவிழி வழிநீர் வார
உருகினிய அன்பினுடன் நீபோந்தால்
மறைமுனிவற் குறுநர் உண்டோ
அருகிருந்து புவிநடத்த நின்போலங்
கறிவுடையார் யாரும் இல்லை
திருநகர்க்கே மீண்டேகென் றுரைத்திடலும்
அமைச்சர்பிரான் செப்ப லுற்றான். 27

கோதிலாப் பெருங்குணத்தாய் குற்றேவல்
இந்நெடுநாள் கொடியேன் செய்தேன்
ஆதலால் நீயேகும் அருஞ்சுரத்தில்
பணித்தபணி யார்தான் செய்வார்
மாதரார் உடனேக மகனேக
நின்னுடன்யான் வாரே னாகில்
ஏதிலான் ஆனேனான் என்றிடியே
றுண்டமரம் என்ன வீழ்ந்தான். 28

இடிவீழ்ந்த மரம்போல வீழ்ந்தாற்றும்
மந்திரியை எடுத்து மேனிப்

பொடிதுடைத்து முடிதடவிப் பொழிவிழிநீர்
தனைமாற்றிப் பொருமலாற்றிக்
கடிநகரில் இவனைவிடில் உயிர்விடுவன்
எனக்கதறிக் கலங்கிக் காமர்
வடிவழுங்க மனங்கருக உயிர்நடுங்க
வருந்தேல்நீ வருதி என்றான். 29

வேறு

வாழ்வினை வளர்ந்தபொழு தென்னின்மிக வாழ்ந்தாய்
தாழ்வினை நிகழ்ந்தபொழு தென்றனொடு தாழ்ந்தாய்
சூழ்வினை நமைக்கடிது சுற்றினவை யெல்லாம்
ஊழ்வினை யெனச்சொலி யுடன்கொடு நடந்தான். 30

## 8. வில்லிபாரதம்

### புட்பயாத்திரைச் சருக்கம்

மற்கொண்டு வகுத்தனைய சிகரத் திண்டோள்
வாளரக்கன் குலத்தோடு மடிய முன்னம்
விற்கொண்டு சரந்தொடுத்துப் புரையில் கேள்வி
விண்ணவர்தந் துயர்தீர்த்த வீர ராமன்
கற்கொண்ட அகலிகைதன் னுருவ மீளக்
கவின்கொள்ளக் கொடுத்ததிரு கமல பாதஞ்
சொற்கொண்டு துதித்தெழுந்து துள்ளி நாளும்
தொழுமவரே யெழுபிறவித் துவக்கற் றாரே. 1

இப்பால் வெஞ் சிலைவிசையன் துறக்க மீதில்
இந்திரன்தன் னருகிருப்ப இமையோ ரூரில்
அப்பால்நல் தவம்புரியும் தழல்கூர் வேள்வி
அந்தணர்தங் குழாஞ்சூழ அழகார் மண்ணில்

ஒப்பாரு மிலாதமட மயிலி னோடும்
உயர்வனத்தி னிடைநாளு மொருநாட் போலத்
தப்பாம லறம்வளர்க்கு நீதி வேந்தும்
தம்பியரும் புரிந்ததினிச் சாற்று கிற்பாம். 2

விறல்விசயன் தனைப்பிரிந்த வருத்த மேன்மேல்
விஞ்சவொரு தஞ்சமற வெம்பி யம்பொற்
சிறகிழந்த பறவையெனத் துணைவ ரோடுந்
திறல்வேந்தன் சிந்தனையுற் றிருந்த காலைப்
பொறையறிவு நிறைதரும முடைய வாய்மைப்
போர்வேந்தே யஞ்சலெனப் புகழ்ந்து வாழ்த்தி
மறையொருபொன் வடிவுகொடு வந்த தென்ன
மாமுனியு மிமைப்பினிடை வந்துற் றானே. 3

வந்தபெருங் கடவுள்முனி வரவு நோக்கி
வாள்வேந்துந் தம்பியரு மகிழ்ச்சி கூர்ந்து
சிந்தைவிழி மலரொடுபே ருவகை பொங்கச்
சென்றெதிர்போய் வணங்குதலும் சிதைவி லாத
அந்தமுனி வரனுமவர்க் கன்பாற் றுன்பம்
அணுகாத அந்தமிலா ஆசி கூறிப்
புந்தியுட னளித்தசெழும் புனித கோலப்
புலித்தவிசி னிருந்தடைவே புகன்றா னெல்லாம். 4

வாள்விசயன் புரவிசயன் தன்னை நோக்கி
மன்னுதவம் புரிந்ததுவு மகிழ்ச்சி கூர்ந்தவ்
வேள்விசயந் தவிர்த்தபிரான் அருளால் வேண்டும்
விறற்படைகள் அளித்ததுவும் விபுதர் கோமான்
நாள்விசயம் பெறக்கொடுபோய் உம்ப ரூரின்
நளிர்மகுடம் புனைந்ததுவு நாளுந் தன்பொன்

தோள்விசயம் தொலைத்ததிறல் அவுணர் சேனை
சுடுசரத்தால் தொலைத்ததுவும் சூழ்ந்த யாவும். 5

தன்னருகே யமரரெலா மினிது போற்றத்
தனஞ்சயனங் கிருந்ததற்பின் தயங்கும் சோதி
மன்னுமெழிற் காந்தர்ப்ப மென்னு நாம
வரைவழியே வருவதுவு மருவு காதல்
உன்னுடைய பெருந்துயரந் தணியு மாறும்
உரைத்தருள்க வெனவும்பர் கோமா னுன்பால்
என்னைவிடுத் தனன்வந்தே னென்று னெல்லா
உலகமுடிந் திடுநாளு மீறி லாதான். 6

மாமுனிதன் மொழிகேட்டுப் புரையில் கேள்வி
மன்னவனுந் தம்பியரும் வருத்த மாறிக்
காமியமென் றுரைபெறுசீர் வனத்தை நீங்கிக்
கடவுண்முனி தன்னோடுங் கணத்தி னேகி
நாமமது கரதீர்த்த முதலா வுள்ள
நற்றீர்த்த மெவற்றினும்போய் நான மாடித்
தாமமதி தவழ்சிகரத் திந்த்ர நீல
சயிலத்தின் சுனைகெழுதண் சாரல் சார்ந்தார். 7

அக்கிரியின் புதுமையெலா மடைவே நோக்கி
அங்குள்ள அருவிநறும் புனலு மாடித்
தக்கபுகழ் விசயனருந் தவம்பு ரிந்த
சாரலிது வென்றுதவ முனிவன் சாற்ற
மிக்ககளி யுவகைநிகழ் நெஞ்ச ராகி
விசயனைக்கண் டனர்போல விரும்பிக் கண்டு
தொக்கமுனி கணத்தொடும்போய்த் தசாங்க னென்னுந்
தொல்லைமுனி தபோவனத்தின் சூழல் சார்ந்தார். 8

அங்குள்ள தபோதனர்தம் பாதம் போற்றி
அவருரைக்கும் ஆசியும்பெற் றப்பா லேகி
எங்குள்ள கடவுள்நெடும் புனலும் யாறும்
எப்புனலுந் தப்பாம லினிதி னாடி
வங்கமெறி கடல்கடைந்து வானோர்க் கெல்லா
மருந்துவிருந் தருளியமந் தரமுங் காட்டிக்
கங்கைநதி குதிபாயுஞ் சிகரச் சாரற்
காந்தர்ப்ப மெனும்வரையுங் காட்டி னானே. 9

அந்தவுயர் கிரியினெடுஞ் சாரல் தோறும்
அருந்தவஞ்செய் முனிவரரை யடைவே காட்டி
இந்தவனந் தனக்கெமையா ளுடையான் குன்றம்
ஈரைம்ப தியோசனையென் றெடுத்துக் காட்டிக்
கந்தனென எக்கலையும் வல்ல ஞானக்
கடவுள்முனி விசாலயனு லயமுங் காட்டி
உந்துநெறிச் செங்கோலா யிதனி லோராண்
டிருத்தியென வுரோமசனு முரைத்திட் டானே. 10

அம்முனிவன் மொழிப்படியே வரம்பில் கேள்வி
அறன்மகனுந் தம்பியரும் அரிவை யோடும்
எம்முகமும் தம்முகமா இலையுங் காயும்
இனியகனி யுடனருந்தி யிருக்கு நாளின்
மைம்முகில்வா கனன்கனக முடிமே லம்பொன்
வனசமல ரொன்றுதழன் மயின்முன் வீழச்
செம்மலரைச் செங்கண்மலர் தன்னா னோக்கிச்
செய்யமலர்க் கரத்தேந்திச் சிந்தித் தாளே. 11

இந்தமல ருலகனைத்து மீன்ற கோல
எழின்மலரோ இரவிதிருக் கரத்தில் வைகும்

அந்தமல ரோவமுதிற் பிறந்த பாவை
யமர்ந்துறையு மணிமலரோ அவனி தன்னில்
எந்தமல ருங்கருகக் கமழா நின்ற(து)
தெங்கெங்கு மிதன்மணமே யென்று போற்றிக்
கந்தவகன் மைந்தனுக்குக் கனலோ னல்கும் [வாள்
கனங்குழைசென் றுவகையுடன் காட்டிச் சொல்
இம்மலருக் கொருமலரு மவனி தன்னில்
எதிரில்லை யென்றிதழா யிரத்தின் மிக்க
அம்மலரைக் கைம்மலரிற் கொடுத்தீ தொக்கும்
அணிமலர்நீ யெனக்கருள வேண்டு மென்னச்
செம்மலையிற் றிகழ்சிகரத் திண்டோள் வீமன்
தெய்வமுனி புங்கவன்தன் திருத்தாள் போற்றி
மெய்ம்மலரைத் திருமுன்பு வைத்து நின்று
வினவினு னவனுமெதிர் விளம்புவானே. 13

என்பலவு மியாமுரைப்ப திந்தப் பூவின்
இயல்பினையும் பெருமையையும் இயக்கர் தங்கள்
மன்பதியி லுளதன்றி வரம்பி லாத
வானுலகி லுளதென்னின் மற்று முண்டோ
உன்பிறருக் கிதுகோடற் கெளிதோ மாயன்
உம்பர்பதி புகுந்தொருபைந் தோகைக் கீந்த
பின்பிதனைக் கண்டறிவா ரில்லை யென்று
பேசினன் யாவரொடும் பேச்சி லாதான் 14

இயக்கர்பதி தனிலுளதென் றிசைத்த மாற்றம்
இன்புறக்கேட் டொருகாலு மீறி லாத
வயக்கொடுவெஞ் சராசனமும் வன்போர் வாகை
மறத்தண்டுங் கரத்தேந்தி மடந்தை நெஞ்சில்

அயக்கமற விக்கணத்தில் தெய்வ போக
சுரபியல ரளித்திடுவ னென்று சொல்லிச்
சயக்கரட முறுதறுகட் சயில மன்ன
சதாகதிமைந் தனுமிமைப்பிற் றனிச்சென் றானே.

கைக்காற்றுந் தொடைக்காற்று மூச்சுக் காற்றுங்
கனகமணி வரைபோலக் கவின்கொள் சோதி
மெய்க்காற்றும் பரந்தெழுந்து வனத்தி லுள்ள
வெற்புநெடுந் தருவனைத்து மொடிந்து வீழ
எக்காற்று முடன்றெழுந்த வுகாந்த காலம்
எனச்சென்று னினவளேக ளெண்ணில் கோடி
செய்க்காற்றுஞ் செழுந்தாள நிலவு வீசச்
சேதாம்பல் பகல்மலருஞ் செல்வ நாடன். 16

இலங்கைநகர் தன்னில்விற லிராமன் றூதன்
இகலரக்கன் சோலையெலா மிறுத்த வாபோல்
நிலங்குலுங்க வரைகுலுங்க வனத்தி லுள்ள
நெடுந்தருக்கள் யாவையும்வே ருடனே ராக்கி
விலங்கினொடு புள்ளினமு மடையத் தாக்கி
மெய்ந்நடுங்கித் தடுமாறி வெம்பி யுள்ளங்
கலங்கிவிழக் கனமதிர்வ போல வார்த்துக்
காஞ்சனப்பே ரெழில்வனமுங் கடந்திட் டானே.

அவ்வனத்தை யிகந்தனந்த காதமேகி
அங்கிடைவிட் டுத்தரத்தி னப்பா லேகி
மெய்வனப்பு மடல்வலியு மிகுந்த வாகை
வீமனெனும் பேர்திசையின் விளக்கும் வீரன்
மைவனப்பி னுடன்படியுஞ் சினைக்கை வாச
மலர்ப்பொழிலி னொருமருங்கே மத்த மாவின்

கைவனப்புந் தழைசெவியு மருப்புஞ் சேரக்
கவினளிக்குங் குலைக்கதலிக் காடு கண்டான். 18

அக்கதலி வனந்தனக்குக் காவ லாகும்
அடலரக்க ரனேகருட னடுபோர் செய்து
மிக்கதலங் குருதியினால் வெள்ள மாக்கி
வெருண்டவர்தம் மாவியையும் விண்ணி லேற்றித்
திக்கதல முதலாமெவ் வுலகு மேங்கச்
சிங்கநா தமுஞ்செய்தான் செய்த காலை
உக்கதலை மணியுரக ராசர்க் கென்றால்
உம்பர்படுந் துயரமெம்மா லுரைக்க லாமோ. 19

வரைகலங்க வனங்கலங்கக் கலங்கு றாத
மண்கலங்க விண்கலங்க மகர முந்நீர்த்
திரைகலங்கத் திசைகலங்க வீறி லாத
செகங்கலங்க வுகங்கலங்கச் சிந்தை தூயோர்
உரைகலங்க வுளங்கலங்கத் துளங்கி மெய்யில்
ஊன்கலங்க விலங்கொடுபுள் ளினங்கள் யாவு
நிரைகலங்க வுலகினுயிர் படைத்த தம்மில்
நிலைகலங்கா தனவுண்டோ நிகழ்த்தி னம்மா. 20

வேறு

அந்த வோதையப் பொழிலிடைத் தவம்புரிந் தருளு
மந்த ராசல மனையதோள் மாருதி கேட்டு
விந்த மன்னதிண் புயாசல வீமனுக் கெதிர்போய்
முந்த மற்றவன் வருநெறி யதனிடை முன்னி. 21

வெற்பி ரண்டினில் வேலைமுன் கடந்ததாள் நீட்டிப்
பொற்பு யாசல மிரண்டையு மிருவரை போக்கி

அற்ப வாழ்வுடை யரக்கன்மா நகரமு லூட்டுஞ்
சிற்ப வாலதி திசையெலாஞ் சென்றுநின் ருேங்க. 22

எம்பி ரான்றனக் கொழியவே றியாவர்க்குந் தெரியாச்
செம்பொன் மாமணிக் குண்டல மிருபுறந் திகழ
விம்ப மால்வரை மீதொரு மேருவே யொக்கும்
அம்பொன் மால்வரை யிருந்தென விருந்தனன் அனுமான்.

குகைத்த டங்கிரி யனையதோள் கொட்டியார்த் துரப்பி
நகைத்து நாகமு நடுங்கிட நடந்தனன் நடந்து
மிகைத்த வாளரி போல்வரும் வீமன்முன் கண்டு
திகைத்து நின்றனன் மறமையுந் திறமையு முடையான்.

அண்டர் தானவ ரரக்கரு மணுகுரு வனத்தில்
எண்டி சாமுக மெங்கணு மிரிந்திட ஆர்த்து
மண்டி மேல்வரு மானுட ஞரடா வென்ருன்
சண்ட வாயுவின் தனயனை மற்றவன் தமையன். 25

தும்மு ளாகிய வானரஞ் சாற்றிய வுரைகேட்(டு)
எம்மு ளாகிவந் திருந்தநீ யார்கொலென் றிசைத்தான்
தெம்மு னையினுஞ் செவ்விமென் போகமா மகளிர்
தம்மு னையினு நாத்தவ ருவடல் வீமன். 26

வலைகாலா ந்தாளினை வலியா

என்னை நீபுக லாரடா வென்பதிங் கெவனோ
உன்னை நீயறி யாநெறி யுணர்விலா மனிதா
மன்னும் வால்தனைக் கடந்துபோ வல்லையே லென்ருன்.

உரங்கொள் வீமனம் மாருதி யுரைத்தசொற் கேளா
வரங்கொள் வார்சிலை யிராகவன் மாபெருந் தூதன்

தரங்க வாரிதி தாவுமன் தம்முன்வா லன்றிக்
குரங்கின் வாலிது கடப்பதிங் கரியதோ கூறாய். 28

என்று தன்றிருத் துணைவனின் றிசைத்தது கேட்டு
நன்று நன்றுநீ நவின்றது நன்றென நகையாத்
துன்று வார்சிலை மனிதனைச் சுமந்துதோள் வருந்தும்
புன்றொ ழிற்சிறு குரங்கையோ வென்னொடும் புகல்வாய்.

குரக்கு நாயகன் அவ்வுரை கூறலுங் கேட்டுத்
தரைக்கு நாயகன் தடம்புயங் குலுங்கிட நகையா
வரக்கர் நாயக னூரழ லூட்டியவ் வகிலம்
புரக்கு நாயகன் தன்னையோ விழித்துநீ புகல்வாய். 30

பின்னும் வார்சிலை யிராகவன் பெருமையு மனுமான்
மன்னு தோளிணை வலிமையு மாருதி சாற்ற
அன்ன போழ்தினி லகமகிழ்ந் தருளுட னோக்கி
என்ன காரியம் வந்ததிங் கியார்கொனீ யென்றான். 31

தாம மாருதி யுரைத்தசொற் றம்பியுங் கேட்டு
நேமி மாநிலம் புரக்குநன் னீதிவேற் றரும
நாம நாயகற் கிளையவ னரனுக்கு மூத்தோன்
வீமன் வாயுவின் புதல்வன்யா னென்றனன் விறலோன்.

அன்ன வாசக மவனுரைத் தலுமிக லனுமான்
கன்ன பாகமுஞ் சிந்தையு முந்துறக் களித்து
மின்னு வார்சிலை யிராகவன் மெய்ப்பெருஞ் சீர்த்தி
சொன்ன வாறுநன் றுனக்கிதார் சொற்றவ ரென்றான். 33

வாத்தி னொரு மறையினால் வார்சிலை பயிற்றும்
பரத்து வாசன்முன் பகர்தரக் கேட்டனன் பலகால்

திரத்தி ஞனுய ரிராகவன் சிலைவலி யென்ருன்
உரத்தி ஞலொரு வீரரு மொப்பிலா வுரவோன். 34

குந்தி கான்முளை கூறிய வாசகங் கேட்டுப்
புந்தி யாலுய ரஞ்சனை புதல்வனும் புகல்வான்
சிந்து சீகரச் சிந்துமுன் கடந்துசெந் தீயால்
உந்து வாள்வலி நிருதரு ரொருங்குசுட் டவனும். 35

அந்த வார்சிலை யிராமனுக் கடிமையா யென்றுஞ்
சிந்தை யாலவன் றிருப்பதஞ் சிந்தைசெய் பவனு
முந்தை யாகிய வாயுவுக் குற்பவித் தவனும்
இந்த வாழ்வுடை யனுமனே யென்றன னிகலோன். 36

என்ற வாசக மிருசெவிக் கமுதெனக் கேட்டுத்
துன்று நெஞ்சினி லுவகையன் துதித்தனன் துள்ளி
யென்றும் யாமுயல் தவப்பய னிருந்தவா வென்னுச்
சென்றி றைஞ்சினன் திரைக்கடல் கடந்தசே வடிமேல்.

தம்பி யைத்துணை தாழ்தடக் கைகளா லெடுத்து
வம்பு சேர்மணி மால்வரை மார்புற வணைத்துப்
பம்பு செந்தழற் கானிடைப் பதமலர் சிவப்ப
எம்பி நீதனி நடந்தவா றென்கொலென் றிசைத்தான். 38

தாயத் தாரும்வல் வஞ்சனைச் சகுனியுங் கூடி
மாயத் தாலொரு கவறுகொண் டெங்கள்மண் கொண்டு
நேயத் தானெடுங் கானக நேர்ந்தன ரென்ருன்
சீயத் தாலர சிழந்திடுஞ் சிம்புளை றனையான். 39

திகந்த மெட்டினுந் தன்மண மொல்லெனச் செல்லச்
சுகந்த புட்பமொன் றியாமுறை வனத்தினிற் றோன்றத்

தகைந்த வப்புது மலர்தனைத் தழன்மகள் காண
வகைந்த வித்துணை மலமெனக் கருளுதி யென்றாள். 40

ஆத லாலிவண் யானுமின் றணுகின னென்று
நீதி யாலுயர் தம்முனை நெடுந்தகை போற்றக்
கோதி லாதவக் குரிசிலுங் குமரனை நோக்கித்
தீதி லாயிது கேட்கெனச் செப்புவன் மாதோ. 41

அருநி திக்கிழ வன்றன தளகைமா நகரின்
மருமி குத்தநீள் மஞ்சன வாவியின் கரையில்
தருமலர்ப்பெருஞ் சோலையிற் றங்குமம் மலர்சென்று
உரிமை யுற்றது கோடன்மற் றும்பர்க்கு மரிதால். 42

ஈறி லாவிக லாக்கரோ டியக்கர்தங் காவல்
கூறும் வாசகம் பொய்ப்பவர் கூர்தவ முயலும்
பேறி லாதவர் பேரரு ளிலாதவர் பிறிது
மாறி லாதவர் தமக்குமங் கணுகுத லரிதால். 43

அறிவும் வாய்மையுந் தூய்மையு மன்புமின் னருளும்
பொறையு ஞானமுங் கல்வியும் புரிபெருந் தவமு
நெறியு மானமும் வீரமு நின்னவா தலினற்
பெறவு னக்கரி தாயதே தென்றனன் பெரியோன். 44

முன்ன வன்புக லுறுதிகூர் மொழியெலாங் கேட்டுப்
பின்ன வன்றொழு திவையிவை பேசினன் பின்னு
மன்னர் மன்னவ னறமுண்டு மறமுண்டு வழக்கே
யுன்னி லுன்னரு ளுண்டுநின் றோளுர முண்டால். 45

தேவர் காக்கினுந் தயித்தியர் காக்கினுஞ் சிறந்த
மூவர் காக்கினு முறைமுறை மொழிந்தமே வுலகில்

யாவர் காக்கினு மிக்கணத் தியக்கரு ரெய்திக்
காவின் மேற்பயில் கடிமலர் கவருவே னென்றான். 46

ஆண்ட வன்புக லுறுதியு மாண்மையுங் கேட்டு
நீண்ட தோள்வய மாருதி நெடிதுவந் தருளிப்
பாண்ட வன்றனைப் பண்புறப் பரிவினால் நோக்கி
வேண்டு நல்வரம் வேண்டுக ஈண்டைநீ யென்றான். 47

நேடிய கானக நீங்கியா நெறியினே ரலரைக்
கடிய வெஞ்செருப் புரிபெருங் குருதிவெங் களத்தில்
அடிக ளாங்கெழுந் தருளிவந் தருச்சுனன் தடந்தேர்க்
கொடியின் மீதுநின் றுவந்துகூத் தாடுதி ரென்றான். 48

# 1. வைத்தியநாத நாவலர்

வைத்தியநாத நாவலரென்ற இப்புலவர் பெருமான் தஞ்சாவூர் ஜில்லாவைச் சேர்ந்த நாகப்பட்டினத்திற் கடுத்த திவ்ய க்ஷேத்திரமாகிய கமலாலய மென்ற திருவாரூரைப் பிறப்பிடமாகக் கொண்டவர். இவர் ஸ்ரீவன்மீகநாத தேசிகருடைய குமாரர். இந்த வன்மீகநாத தேசிகர் கவிபாடுந் திறத்தில் மிக சிரேஷ்ட ரென்பதற்குக் கிஞ்சித்துஞ் சந்தேகமில்லை. இவர் "தமது பாவன்மையாற் பரிசுபெற்ற சூனம்பேட்டை மானியமும் உப்பளமும் நாளது வரைக்கும் அவர் சந்ததியார் அநுபவித்து வருகின்றார்கள்" என்று மகா-ா-ா-ஸ்ரீ சி. வை. தாமோதரம் பிள்ளையவர்க ளெழுதுகிறார்கள். இவ்வாறு தந்தையாருஞ் சிறந்த வித்வானா யிருந்ததினா லன்றோ புத்திரரும் சுபாவ நியமத்தின்படி யங்ஙனம் தோன்றினர். *இப்போது, மன்னார்குடித் தாலூக்காவைச் சேர்ந்த திருக்களரென்னு மூரில், மிக வயோதியரா யிருக்கின்ற ஸ்ரீமத் சூரியமூர்த்தி தேசிக ரென்பவர் நமது வைத்திய நாதநாவலருடைய ஆறாவது சந்ததியாராம்.

இவர் 17-ம் நூற்றாண்டின் இறுதியிலும், 18-ம் நூற்றாண்டின் தொடக்கத்திலு மிருந்தவர். இவர் இக்காலத்திலேதா னிருந்தாரென்பதைப் பற்றி வரைந்து சுட்டுவோம். இராமநாதபுரத்தில் கி. பி. 1685-ம் வருஷ முதல் 1723-ம் வருஷம் வரைக்கும் அரசாண்ட இரகுநாத சேதுபதியின் வாசல் வித்வானாயிருந்த படிக்காசுப் புலவர் நமது நாவலரிடங் கல்வி கற்ற மாணாக்கராம். ஆகவே நாம் மேலே சொல்லிய காலக்

* இவ்வியாசம் 1892 வருஷத்தில் எழுதப்பட்டதென்பது மனங்கொளத்தகும்.

கணக்குத் தவறில்லை யென்பது நன்ருய் விளங்கும். படிக்காசுப் புலவர் இவருடைய மாணுக்க ரென்பதற்கு ஆதாரமாகக்,

"கூடுஞ் சபையிற் கவிவா ரணங்களைக் கோளரிபோற்
சாடுஞ் சதாசிவ சற்குரு வேமுன்னுன் தந்தைதம்மாற்
பாடும் புலவர்க ளானேமின் றிச்செம்மற் பட்டியெங்குங்
காடுஞ் செடியுமென் ஞேதமிழ்க் காரிகை கற்றதுவே."

என்று படிக்காசுப் புலவரே பாடிய செய்யுளைக்கொள்க. மேலும் நாம் முன்னே ஸ்ரீமத் சூரியமூர்த்திதேசிகர் இவரது ஆருவது சந்ததியாரா மென்று குறித்த விஷயம் மேற்கூறிய காலக் கணக்கை யேகதேசம் வற்புறுத்துகின்றது.

வைத்தியநாத நாவலருடைய மதமோ சைவ மதம். இவர் சப்த விடங்க க்ஷேத்திரங்களிலே யதிகப் பிராதாநியத்தை யடைந்த திருவாரூரிலே அபிஷேகஸ்தர் மரபிலே சிறப்புற்றேங்கியவர். இவர் ஓர் அருமையான வித்வானென்று சொல்லுவதற்கு ஐயமே யில்லை. இவர் மலையாளத்து இராசாவின் பேரிற் சில பிரபந்தங்கள் பாடி, அவ்விராஜனிட மிருந்து கிராமங்களும், வேறு சில பரிசுகளும் அளிக்கப் பெற்றவர். மேலுமிவர் இலக்கணக் கொத்து நூலாசிரியராகிய சுவாமிநாத தேசிகரால் "திருவாரூரிற் றிருக்கூட்டத்திற் றமிழ்க்கிலக்காகிய வைத்தியநாதன்" என்றும் கவி வீரராகவ முதலியாரால்,

"ஐம்பதின்மர் சங்கத்தா ராகிவிடா ரோநாற்பத்
தொன்பதின்ம ரென்றே யுரைப்பாரோ—இம்பர்புகழ்
வன்மீக நாதனருள் வைத்தியநா தன்புடவி
தன்மீதங் நாட்சரித்தக் கால்."

என்றும் புகழப்பெற்றவர்.

இத்தகைய நம்புலவர் சிகாமணி, சோழ நாட்டிலேயுள்ள ஆமாத்தூர் என்ற மாதை யென்னுமூரி லிருந்துகொண்டு சிற்றரசு புரிந்த குறுநில மன்னனாகிய திருவேங்கட சுவாமியென்பவரால் ஆதரிக்கப்பட்டுப் பரிபாலனஞ் செய்யப்பெற்றவர். இந்த விஷயமானது நமது வைத்தியநாத நாவலருடைய மூத்த குமாரராகிய சதாசிவ நாவலரால்,

> "வேதியர் திலகன் விரவலர் கோளரி
> மாதைய ரதிபன் வரகுண மேரு
> கல்விக் கெல்லை கருணைக் காகரம்
> பெருமாண் மெய்த்தவப் பேறெனத் தோன்றிய
> திருமா லுலகஞ் செவ்விதிற் புரக்கு
> மேதகு புகழ்த்திரு வேங்கட நாதன்
> ஓதினனாக."

என்று இலக்கண விளக்கச் சிறப்புப் பாயிரத்திற் கூறப்பட்டிருப்பதினாலே யினிது விளங்குகின்றது.

வைத்தியநாத நாவலரியற்றிய பிரபந்தங்களாவன, இலக்கண விளக்கமும், பிரபோத சந்திரோதயமும், வேறு சில சிறு நூல்களுமாம். இவர் மேலே சொல்லிய இரண்டு பெரிய பிரபந்தங்களையும் மாதை மன்னவன் திருவேங்கட நாதனுடைய வேண்டுகோளிற் கிணங்கியே செய்தனர். இலக்கண விளக்கமானது, அங்ஙனஞ் செய்யற்பட்டதற்கு, மேலே யந்நூற் சிறப்புப் பாயிரத்தினின்றும் நாமெடுத்துக் காட்டின பாகமானது தக்க சான்று பகரும். இங்ஙனமிது நிற்க. மெய்ஞ்ஞான விளக்க மென்று மறுநாமத்தையுடைய பிரபோதச் சந்திரோதயமானது நமது நாவலரை யாதரித்து வந்த திருவேங்கட நாதரால் இயற்றப்பட்டதென்று கூறி மயங்குவாரு முளர்.

இவ்வாறு அவர்கள் பிராந்தியடைந்ததற்குக் காரணமென்ன வென்று சற்று விசாரித்துப் பார்ப்போமானால்,

"போதத் தமிழ்க்கும் வடகலைக்கும்
புலவோர் தமக்கும் பொருள்விரித்துச்
சீதைக் கிறைவ னெனநீதிச்
செங்கோல் செலுத்தித் திசைபுரந்து
வேதப் பனுவன் மெய்ஞ்ஞான
விளக்கா லுலகை விளக்குமெங்கள்
மாதைத் திருவேங் கடநாத
மறையோன் வாழி வாழியவே."

என்ற ஒரு விருத்தமேயென்று வெளிப்படும். ஆகவே யவர்களது மயக்கத்தைக் கொஞ்சந் தெளியவைத்தல் வேண்டியது ஆவசியகம். இந்தப் பிரபந்தமானது திருவேங்கட நாதர் வேண்டுகோளின்படி வைத்தியநாத நாவலரியற்றின ரென்று முன்னே கூறியிருக்கின்றோமாகவே, வேங்கடநாதர் ஏவுதற் கருத்தாவும், நாவல ரியற்றுதற் கருத்தாவு மாவார்கள். மேலும் மேலே சொல்லிய செய்யுளில் "மெஞ்ஞாந விளக்காலுலகை விளக்கும்" என்ற தொடர்க்கு, அவர் பிரயோச்சியனாய் மாத்திரமிருந்து விளக்குவித்தாரென்று அந்தர்ப்பாவித ணிச்சாய்ப் பொருள் கொள்ளலாமாகப், பிரயோசகனாய் நின்று விளக்கினாரென்று பொருள் கொண்டது, சமயோசிதமாகச் சொற்பொருளுணருமாற்ற லில்லாமையினாலேதானென்க. இதுவு மல்லாமற் சென்னையிலிருந்த வித்துவான் தாண்டவராய முதலியாருடைய பிரபோத சந்திரோதயப் பிரதியில் நாவலரியற்றினதாகக் குறிக்கப்பட்டிருப்பதினாலும், மதுரை, நெல்லை, புதுவை முதலிய விடங்களிற் கன்ன பரம்பரையாக நாவலரியற்றினா

றென்று வழங்குவதினாலும், யாங்கூறுவதே திருவாரூர் அபி ஷேகஸ்தர்கட்கும் தருமபுரவாதீனத்தார் முதலாயினார்க்கு மொப்ப முடிந்த தாமாதலாலு மவர்தேடிய ஆதார மவரையே தியங்கவிட்டதென்று கொள்ளல் வேண்டியதாகின்றது. இம் மயக்கம், தவறு யச்சிடப்பட்ட மூலம் பற்றி யுற்பத்தியானது போலும்.

இனி இலக்கண விளக்கத்தின் குணத்தைப்பற்றிப் பேசு வோம். எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி யென்று சொல்லுகிற ஐந்து பாகங்களுமடங்கிய வியாகரணங்கள் தமி ழிற் கிடைப்பதரிது. கிடைத்தாலு மொருவேளை யதிகமாய் விரிந்திருக்கு மில்லாவிடில் மிகச் சுருக்கமாயிருக்கும். இவ் விரண்டு குற்றமுமில்லாமல், மாணாக்கர்க்குப் போதுமான அள வினையுடையது இலக்கண விளக்க மொன்றேயாம். தமிழா ராய்ச்சிக்குத் தொல்காப்பிய வுணர்ச்சி யதிக ஆவசியகமில்லை யென்பது சொல்லாமலே விளங்குமாதலாலும், சான்றோரிதற் குக் "குட்டித் தொல்காப்பிய" மென்று பெயரிட்டிருக்கின்றார்க ளாதலாலும் இது ஒரு சிறந்த வியாகரணமென்பதற்கு ஆக்ஷே பனையில்லை யாதலாலும், இதையே படித்தாற் போதுமென்பது பெறப்படுமென்க. நாவலர் தொல்காப்பியர்போல யாப்பையு மணியையும் பொருளதிகாரத்திலடக்கி மூன்றதிகாரமாக்கினார். எழுத்திலுஞ்சொல்லிலும் பெரும்பாலும் நன்னூலைத்தழுவியே யெழுதப்பட்டிருக்கிறது. நன்னூலிற் குற்றமெனக் கண்ட சில வற்றைத் திருத்தியு மெழுதி யிருக்கிறார். அநேக சூத்திரங்கள் நன்னூலார் சூத்திரங்களாகவே காணப்படுகின்றன. பாயிர மொழிந்த 407 நன்னூற் சூத்திரங்களையும் 372 விதிகளிலடக் கிவிட்டார். பாயிரத்திற்கூறிய 55 விதிகளையும் பொருளதி

காரம் பாட்டியலில் 129 முதல் 142 வரைக்குமுள்ள 14 விதிகளி லடக்கி விட்டார். இனி மூன்ருவதாகிய பொருளதிகாரத்தில், முதலியலாகிய அகத்திணையியலில் மிகுதியும் நம்பியாண்டார் நம்பிசெய்த அகப்பொருள் விளக்கத்தையும், தொல்காப்பிய வகத்திணையியலையு மநுசரித்தே சூத்திரஞ் செய்திருக்கிருர். இரண்டாவ தியலாகிய புறத்திணை யியலில் ஐயனரிதனர் புறப்பொருள் வெண்பா மாலையை யநுசரியாது தொல்காப்பியத்தையே யநுசரித்திருக்கிருர். மூன்ருவ தியலாகிய அணியியலானது தண்டியலங்காரத்தையே யநுசரித்தெழுதப்பட் டிருக்கிறது. அநேக சூத்திரங்கள் தண்டியார் சூத்திரங்களாகவே காணப்படுகின்றன. உதாரணச் செய்யுட்களும் அதினின்றே யெடுத்து ஓதப்பட் டிருக்கின்றன. ஆகவே தண்டியலங்காரத்திற்கு உரையானது வைத்தியநாத நாவலர்க்கு முன்னரே யெழுதப்பட் டிருத்தல் வேண்டும் இனி நான்காவ தியலாகிய செய்யுளியல் யாப்பருங் கலத்தைத் தழுவி யெழுதப்பட் டிருக்கின்றது. ஐந்தாவ தியலாகிய பாட்டியலில் முதல் 128 சூத்திரம் வரை, வச்சணந்தி மாலை, சிதம்பரப்பாட்டியல் முதலிய நூல்களின் தாற்பரியங்களிற் சில எழுதப்பட்டுள. 128 முதல் 142 வரை நன்னூலார் பாயிரமாயொழிய, 142 முதல் 181 வரை தொல்காப்பிய மரபியலினிறுதியாகின்றது. இது 941 சூத்திரங்களையுடையது. இனி, நம் நாவலர் சூத்திரஞ் செய்ததோடே நில்லாமல், இதற் குரையும் எழுதினர். இந்த மாதிரியாக நூலாசிரியரே யுரையு மெழுதுகிற வழக்கம் தமிழிற் கிடையாது. இவர் தான் முதல் முதலில் இவ்விதமாக உரையையு மெழுதத் தொடங்கினர். இவரைப் பார்த்துப் பிற்காலத்தார் சிலரும், தங்கள் தங்கள் நூற்கு

உரை எழுதி யிருக்கிருர்கள். இவர் தமது உரையிற் பிறர் மதங்களைக் கண்டிப்பது வழக்கம். தொல்காப்பிய விதிகளிற் சிலவற்றை உரையிலே தழீஇயினுர். தொல்காப்பிய வுரைகளில் நச்சினுர்க்கினியத்தையே இவர் அதிகமாகக் கையாடி யிருக்கிருர். மேலும் அகத்திணை யியலில் தொல்காப்பிய வுரையிற் காணப்பட்ட சில விஷயங்களைச் சூத்திரங்களாக வகுத்தார். அணியியலில், தண்டியலங்கார வுரையிற் கூறிய சில பிரிவுகளை விதியிலே இவர் கூறினுர். பாட்டியல் 181 சூத்திரங்களும் நமது நாவலரால் எழுதப்படவே யில்லை. இந்த இயலானது வைத்தியநாத நாவலருடைய 2-வது குமாரராகிய தியாகராச தேசிகராற் சேர்க்கப்பட்டது. இந்நூற்குப் பாயிரமும், சொல்லணிச் சூத்திரங்களும் நமது நாவலருடைய மூத்த குமாரர் சதாசிவ தேசிகராற் செய்யப்பட்டன. ஆகையினுலே இவர் சொல்லணியும் பாட்டியலும் மிகப் பயன்படத் தக்கனவல்ல வென்று விடுத்து விட்டார். மேலுந் தற்கால மாணவர்க்குச் சொல்லணியும் பாட்டியலும் வேண்டுவதின்று. ஆகவே 941 விதிகளில் 207 விதிகள் நாவலராற் செய்யப் படவேயில்லை பயனின்மையால்; ஆதலால் மீதமுள்ள 734 விதிகளுமே மாணுக்கர்கட்கு நிரம்ப உபயோகமானவை. இது கிடக்க, திருவாவடுதுறைச் சிவஞான சுவாமிகள் நாவலருடைய இலக்கண விளக்கத்தை யவிக்கும் பொருட்டுச் சூருவளியை யேவினர். இச்சூருவளியை "அநியாய கண்டன" மென்று மகா-ா-ா-ஸ்ரீ சி. வை. தாமோதரம் பிள்ளையவர்கள் கூறியது போல் நாம் ஒருகாலத்தும் சொல்லப்படாது. இக்கண்டனத்தை யவர் வேண்டுமென்று எழுதினபோதிலும், சில இடங்களில் நமது நாவலர் செய்த பிழைகளையு மெடுத்துக் காட்டி

யிருக்கின்றனர். சூளுவளியின் மூலமாயே நம் இலக்கண விளக்கத்திற்கு அதிக மேன்மை யென்று யாவரும் அறிதல் வேண்டும்.

இனி இரண்டாவதான மெஞ்ஞான விளக்க மென்ற பிர போதசந்திரோதய மென்ற நூலைப் பற்றிப் பேசுவோம். ஆங்கிலேயத்தில் (Allegory) என்பதற்குச் சமானமாக இயற்றப்பட்டுள்ள இந்நூல் முதல் முதலில் வடமொழியில் நாடக ரூபமாகக் கிருஷ்ண மிச்சிரன் என்றவரால் செய்யப் பட்டுளது. அதை மொழிபெயர்க்கப் புகுந்த நமது ஆசிரியர் நாடக ரூபத்தை யொழித்துக் காவிய ரூபமாக எழுதியது யாது காரணம் பற்றியோ அறிகிலேம். வேதாந்தமாகிய பாற்கடலை நாவலர் தமது அறிவென்ற மந்தரமலையை மத்தாக நாட்டிக் கடையவே பிரபோத சந்திரோதயமாயிற்று. இந்தப் பிரபந்தமானது பாயிரமுட்பட 48 சருக்கங்களடங்கியது. இதில் 2012 செய்யுட்கள் உள. இது விருத்தப்பாவினுற் செய் யப்பட்டிருக்கிறது. இதன் விஷய மின்னதென்று கொஞ்சஞ் சொல்லுவோம். மாயை யென்றவள் பிரம்ம சந்நிதானத் திலே விகாரம் புரிந்து கர்ப்பமடைந்து மானதன் என்றொரு புத்திரனைப் பெற்றுள். அவன் பிரவிர்த்தி, நிவர்த்தி என்ற இரண்டு மாதர்களையும் கலியாணஞ்செய்துகொண்டான். மான தனுக்கு மூத்த மனைவியாகிய பிரவிர்த்தியினிட மிருந்து மோகன், அகங்காரன், மதனன், இடம்பன் முதலாகிய அநேக புத்திரர்களும், தீவினை, கபடி என்ற இரண்டு புத்திரி களும் பிறந்தார்கள்; இனி இளைய மனைவியாகிய நிவர்த்தியி னிட மிருந்து விவேகன், நிருபகன், பொறுமை, முதலான பல குமாரர்களும் மயித்திரி, கருணை முதலிய சில பெண்களும்

பிறந்தார்கள். இவ்விருதிறத்துப் பிள்ளைகளுக்கும் பாட்டியாகிய மாயை யென்பவள் அவரவர்களுடைய குணங்களுக்கு ஏற்றபடி விவாக மஹோற்சவம் நடத்தி வைத்தாள். பிரவித்தியின் மக்கள் அசுரர்களைப் போலவும் நிவர்த்தியின் மக்கள் தேவர்களைப் போலவும் வளர்ந்து வந்தார்கள். பிற்பாடு இவ்விரு பகுதிப் பிள்ளைகளுந் தங்களுக்குள் மாறுபட்டு **மோகன்** அரசாளும்படியும், **விவேகன்** காட்டிற்குப் போகும்படியும் நேரிட்டது. பிறகு **விவேகன்** குலம் விளங்கப் **பிரபோதன்** தோன்றித் தானை கூட்டி, யுத்தத்திற்குச் சென்று **மோகன்** முதலானவர்களை யெல்லாம் மூலதோஹாநியாக்கி விட்டான். பிறகு **பிரபோதன்** முடி சூட்டப் படுகின்றான். இஃதுடன் காவியம் முடிகின்றது. இதை யெழுதியபோது நாவலர் மனத்திற் குருக்ஷேத்திர யுத்தத்தைப்பற்றி நினைத்துக் கொண்டிருந்திருக்க வேண்டும் என்று தோன்றுகின்றது. பிரபந்தத்தின் நடை வெகு நளினமாயும், ஒழுகிய ஓசையோடு கூடியதாயு மிருக்கின்றது. படிக்கும் போதே நிரம்ப இன்பமளிக்கக் கூடியதாகவும் காணப்படுகின்றது. இந்த மாதிரியான பிரபந்தங்கள் நந்தமிழிற் கிடைப்பது மிகவுமருமை. இதிலே * "கனஞ்சடையென் றுருவேற்

* கனஞ்சடை யென்றுரு வேற்றிக் கண்மூடிக்கதறுஞ் சாத்திரிகள் பலரின் துர்க்குணம்:—இதைக் கண்டு பலர், துர்க்குணமென்றே நினைக்கக் கூடும்; அற்றன்று; வேதத்திற் கூறிய பொருள்களை யின்னதெனவறியாது, கனம், சடை என்று, மூல பாடத்தை மாத்திரம், மூற்கி, முனைந்து, உருவடித்துத் தமக்கு வேதங்களனைத்தும் கைவந்ததாக எண்ணித்தருக்கும் சாத்திரியார்களின், துர்க்குணமொன்றே, ஈண்டுக் கண்டிக்கப்பட்டமையறிக. பொருளையறிந்து உருவிடுதல் எக்காலத்தும், எத்தேயத்தும், எவர்க்கும் நன்மை பயப்பதாம்,

றிக் கண்மூடிக் கதறுஞ்'' சாஸ்திரிமாருடைய துர்க்குணங்களை மிகுதியும் கண்டிக்கின்றார். மனிதர்களுக்குச் சற்குணாபி விர்த்தி யுண்டாதல் வேண்டுமென்ற நோக்கத்துடனேயே இவ ரிதை யெழுதியிருக்கிறாரென்று நினைப்பதற்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை. சாஸ்திரிமார்களுடையவே யன்றிப் பற்பல மடங்களிலுள்ள தம்பிரான்களுடைய தீயொழுக்கத்தையும் நன்கு கண்டிருக்கிறார். இக்காவியத்திற் காணப்படுகிற ஒவ் வொருவரும் அவரவருடைய குணங்களுக்குத் தக்கபடியே பேசுகிறார்கள். தங்கள் குணங்களோடு சாமஞ்சஸப் படாத வார்த்தைகளை யொருவரும் பேசவேயில்லை. இப்பிரபந்த மானது சில விடங்களிற் பரிகாச நடை (Sarcastic Style) யோடு எழுதப்பட்டிருக்கிறது. இதில் ஒவ்வொரு கவியும் ஆழ்ந்த நுண்ணிய பொருளை விளக்குகின்றது. பெரும்பாலும் செய்யுட்களெல்லாம் வெகு சுகமாக அமைந்திருக்கின்றன. சமயோசிதமாகப் பதங்களும் பிரயோகிக்கப்பட்டிருக்கின் றன. இவர் செய்யுட்களிற் பாட்டை நிரப்பும் பயனைத் தவிர்த்து வேறு ஒருபயோகமுமில்லாத சொற்களைக் காணுதல் மிகவுமரிது. எதுகை, மோனைகளுக்காகச் சொற்களை விகா ரப்படுத்தும்விகாரகுணம் இவரிடமதிகமாகக் கிடையாது. வகை யுளி, வனப்பின்மை முதலிய தோஷங்கள் இந்நூலிற் கிடையா. இத்தன்மையான சிறப்பெல்லாம் பற்றியல்லவா, சிலகாலத் திற்கு முன் இதினின்று மொரு பாகமானது நமது சென்னைச் சர்வகலாசாலையில் பி. ஏ., பரீட்சைக்குப் பாடமாக நியமிக்கப் பட்டதுமென்பது யாவர்க்குந் தெரிந்தவிஷயம். இனிக் கடைசி யாக நமக்கும் நம்முடைய தமிழ்ப் பாஷைக்கும், வைத்தியநாத காவலர் மூலமாக ஒரு கௌரவம் ஏற்படுகின்றது என்பது எமது துணிவு.

## 2. திருநாவுக்கரசு சுவாமிகள்

சோழநாட்டிற்கும் தொண்டை நாட்டிற்குமிடையேயுள்ள நடுநாடாகிய திருமுனைப்பாடி நாட்டிலே திருவாமூரிலே வாழும் வேளாளர் பரம்பரையிலே குறுக்கையர் குடியிலே புகழனார் என்னும் பெரியார் சிறந்து விளங்கினார். அப்பெரியார்க்கு அவர் மனைவி மாதினியார் திருவயிற்றில் திலகவதியார் என்ற பெண்மணியும் அவருக்குப் பின் மருணீக்கியார் என்ற ஆண்டகையும் புறச்சமயமாகிய இருள்கெடவும் சிவப்பேரொளி எங்குந் தழைக்கவும் தோன்றியருளினார்கள்.

திலகவதியார் கற்பிற் சிறந்த பேரரசி. ஆதலால் தம்மை மணம்புரியக் கருதியிருந்த படைத்தலைவராகிய கலிப்பகையார் போர்க்களங் குறுகிப் போர் புரிந்து விண்ணுலகை மெய்திய செய்தியைக்கேட்டவுடன், வேறு மணஞ்செய்யக் கருதாது, சிவபெருமானுக்குத் திருத்தொண்டுபுரிதலையே கடைப்பிடித்து ஒழுகுவாராயினர். சிறிது காலத்திற்குள் இவர்களது தாய் தந்தையர் பூவுலக வாழ்வை நீத்தனர். திலகவதியார் தமது தம்பியார் பொருட்டு உயிர் தாங்கி நின்றனர்.

மருணீக்கியார் கல்வி, கேள்வி, அறிவு, ஒழுக்கங்களிற் சிறந்தவராய்த் தமது செல்வங்களை வறுமை நோயால் வாட்டமுற்றோர்க்கும் தக்கார்க்கும் அளவில்லாமல் வழங்கிவிட்டு, அருளொழுக்கங்களைச் சிறப்பாகப்பேசி மயக்குந் தன்மை வாய்ந்த சமணர்களுடைய போதனைக்குட்பட்டுச் சமண சமயம் புக்கனர். புக்கு அம்மதத்திற்குரிய சாஸ்திரங்களைக் கற்றுத் தேர்ந்து தருமசேனர் என்னும் பெயர் பெற்று அச்சமயத்திற்குப் பெருந்தலைவராய் விளங்கினர். இதனை உணர்ந்த அவர்

தமக்கையார் மனமிகநொந்து தமது தம்பியைத் தடுத்தாள வேண்டுமென்று, தாம் திருத்தொண்டு புரியும் திருவதிகை வீரட்டானத்திற் கோயில் கொண்டு வீற்றிருக்கும் சிவபெருமானை வேண்டிக்கொண்டனர். அப்பெருமானுர் அவரது கனவிற்ருேன்றி நின்பின் பிறந்தோன் முற்பிறப்பில் தவத்தில் சிறிது வழுவினமையால் இப்பிறவியிலே சமண சமயம் புகுந்தான். ஆயினும் என்னை யடையும் பெருந்தவமுடையானுதலின் அவனைத் தடுத்தாட்கொள்வோம் எனக்கூறி மறைந்தருளினுர்.

நாட் பல செல்லத் தம்பியாகிய தருமசேனர் சூலை நோய் வாய்ப்பட்டு அது சமண சமய மந்திரங்களால் தீர்க்கலாகாமையை அறிந்து தமக்கையாரைக் காண விரும்பி அவருக்குத் தெரிவித்தழைத்த காலத்து அவர் வருவதற்கு இசையாமையினுல், தாம் ஒருநாள் நள்ளிருளில் சமணப்பள்ளியினின்றும் நீங்கித் திருவதிகை அடைந்து அவரது திருவடிகளில் வீழ்ந்து வணங்கினர். அதன் பின்னர் சமண சமயம் பொய்ச்சமயமென்றும் சைவ சமயம் மெய்ச்சமயம் என்றும் உணர்வடைந்து மனம் திருந்தினர். திலகவதியார் அவர்பால் அன்புமிக்குடையராய்த் திருநீறளித்து விடியற்காலையில் தமது தம்பியாரைச் சிவபெருமான் திருமுன்பு அழைத்துச்சென்றனர். அவ்வமையம் சிவபெருமானது திருவருளினுல் தமது சூலை நோயும் பிறவி நோயும் நீங்கப்பெற்றவராய் 'கூற்ருயினவாறு' என்னும் தேவாரத்திருப்பதிகம் பாடியருளினுர். அவருடைய திருவாக்கினுல் மனமிக மகிழ்ந்த சிவபெருமான் 'திருநாவுக்கரசு' என்னும் திருநாமத்தை அசரீரியாக நின்று உலகறிய அறிவுறுத்தியருளினுர்.

இவ்வாறு தமது சமயத்தலைவராயிருந்த தருமசேனர் சிவ பெருமானது திருவருள் பெற்ற செய்தியைச் சமணர்கள் கேட்டு மனமிகக் கலங்கினர். அக்காலத்து அச்சமயத்தை ஆதரித்துவந்த அரசனை அணுகித் தருமசேனருக்குக் கடுந்தண்டனை விதிக்குமாறு பலவகையான சூழ்ச்சிகளைச் செய்தனர். அரசன் மிக்க சினமுடையவனாய் அவரை அழைத்துவரச்செய்து சுண்ணாம்பு நீற்றறையில் இடுவித்தனன். அந்நீற்றறை அவர்க்கு சிவபெருமானது திருவடி நீழல் போன்று இன்பந்தந்து நின்றது. பின்பு நஞ்சு கலந்த உணவை ஊட்டினர். அது அவர்க்குத் தேவாமிர்தமாயிற்று. பின்னர் மதங்கொண்ட யானையை ஏவிக்கொல்லச் செய்தனர். அந்த யானை நாயனாரை வலமாகச் சுற்றிவந்து வணங்கித்தன்னை ஏவினோர்களையே மிதித்துச் சென்றது. கடைசியாகக் கருங்கல்லிற்பிணைத்துக் கடலிற்புகுத்தினர். கறைமிடற்றண்ணலார் கருணையினால் அக்கல்லையே தோணியாகப்பெற்றுத் திருப்பாதிரிப்புலியூர் என்னும் தலத்தைஅடைந்தனர். இவற்றையெல்லாம் கண்டு பெருவியப் புற்ற அரசன் தான் செய்தது பெருங்குற்றமெனத் தெளிந்து பொய்யாகிய சமண சமயத்தினின்றும் நீங்கி விரைந்து வந்து நாயனார் திருவடிகளில் சரண் புகுந்து சிவனடிக்கு அன்பனாயினான். தனது ஆளுகைக்குட்பட்ட இடங்களிலுள்ள சமணப்பாழிகளை இடித்து அக்கற்களைக்கொண்டு 'குணதரவீச்சுரம்' என்னும் திருக்கோவில் கட்டினன்.

பின்னர், திருநாவுக்கரசர் பற்பல சிவதலங்களுக்குச் சென்று தேவாரப்பதிகம் பாடி வணங்கித் 'திருத்தூங்கானை மாட'த்திற்கு எழுந்தருளினார். அவ்வூரிலுள்ள கோவிலுட் புகுந்து கடவுளை நோக்கி, "சுவாமி! அடியேன் சமணர்களோடு

சேர்ந்திருந்த இவ்வுடலைத்தாங்கி உயிர் வாழேன். எனக்கு முத்திரை பொறித்தருளவேண்டு'மென வேண்டினர். உடனே சிவ பூதம் ஒன்று ஒருவரும் அறியாவண்ணந்தோன்றி சிவ சின்னமாகிய சூலத்தொடு இடபமுத்திரையும் அவர்க்குச் சாத்தி மறைந்தது. தம்தோளில் சூலமுத்திரையும் இடபமுத்திரையும் இருப்பதைப்பார்த்து அவர் அளவிலா ஆனந்தமடைந்து கடவுளின் திறத்தைத் துதித்து அங்கேயே சிறிது காலம் தங்கியிருந்து சிதம்பரத்திற்குச் சென்று நடராஜப்பெருமானை வணங்க வேண்டுமென்னும் ஆசை மீக்கூரச் சிதம்பரமடைந்து கடவுளை வாழ்த்தி வணங்கிச் சில காலம் தங்கி இருந்தனர்.

பின்பு சீர்காழியில் எழுந்தருளியுள்ள பரமாருளால் அம்பிகை ஞானப்பாலூட்ட அதனால் தன் தந்தைக்கு 'இவன் எம்மான்' என்று சுட்டிக்காட்டிய திருஞானசம்பந்தரின் சிறப்பை அடியார் மூலம் கேட்டறிந்தனர். அப்பொழுதே அத்தகைய பெரியாரைக்கண்டு வணங்கவெண்ணி அவர் பொன்னம்பலத்தில் தாண்டவமாடும் இறைவனைவணங்கிக் கோயிலிலுள்ள திருவீதிகளிற் கால்படாவண்ணம் மெய்யாற் புரண்டு வலமாக வந்தனர். பின்னர் அடியார்கள் தம்மைச் சூழ்ந்துவரப் பல தலங்களை வணங்கிச் சிவவேடப் பொலிவழகோடு மெள்ள மெள்ளச் சீகாழியின் எல்லையை அணுகினர். இவரது வருகையை அறிந்த சம்பந்தர் 'அவர் நம்மை வந்து காண்பதற்கு முன் நாமே முன் சென்று அவரைக் காண்போம்' என நினைத்து அவர் வரும் வழியை எதிர்நோக்கிச் சென்றனர். அதனைக் கண்ட நாவுக்கரசர் விரைந்துசென்று அவரை வணங்கச் சம்பந்தர் தமது அன்பு மிகுந்த வாக்கால் 'அப்பரே' எழுந்திரும்! என்று தம் கைகளால் எடுத்தனர். அதன் பிறகு இருவரும்

விரிசடைக்கடவுள் வீற்றிருக்கும் திருக்கோயில்சென்று வணங்கித் திருச்சத்திமுற்றமடைந்து கடவுளைநோக்கி,“சுவாமி!உமது சீர்பாத பொற்கமலங்களை அடியேன் தலையில் சூட்டியருள வேண்டு” மென யாசிக்கக் கடவுளும் அவர் வேண்டிக்கொண்டவாறே செய்வதாகவும் திருநல்லூருக்கு வரும்படியாகவும் கட்டளையிட்டருளினர். அவர் கட்டளைப்படியே விரைந்து சென்று திருநல்லூரை யடைந்தனர். அடியார் விரும்புவனவற்றை மறுக்காமற் கொடுத்தருளும் எம்பெருமானும் அவர் விருப்பின்படியே தம் திருவடிகளை அவர் தலையிற் சூட்டியருளினர். சூட்டியதும் அப்பர் புளகாங்கிதங்கொண்டு இறைவன் திருவிளையாடல்களை மகிழ்ந்து சில நாளிருந்து திங்களூரை யடைந்தனர்.

அங்கே அடியார் பக்தியிற் சிறந்த ‘அப்பூதியடிகள் நாயனர்’ தம் புத்திரர், பொருள்கள் முதலியவற்றிற்கெல்லாம் திருநாவுக்கரசர் என்ற பெயரையிட்டுத் தம்மிடம் அளவு கடந்த அன்பு கொண்டிருப்பதனைக் கேள்விப்பட்டார். அவரைக் காணவேண்டுமென்ற ஆசை அதிகரிக்க அவரிருக்குமிடம் நோக்கிச் செல்வாராயினர். இவரது வருகையைக் கேட்ட அப்பூதியடிகள் தமது பெண்டு பிள்ளைகளுடன் ஓடிச்சென்று அவரது அடியில் வீழ்ந்து “சுவாமி! அடியேம் உய்யவந்தருளிய மகாப்பிரபுவே! இன்று அடியேன் இல்லத்திற்கெழுந்தருளி யமுது செய்தருளவேண்டு”மெனவேண்டிக்கொள்ள நாயனரும் இசைந்தனர். அப்பூதியாரும் தமது மனைவியை யழைத்து அறுசுவையுண்டி யமைக்குமாறு ஏவி யனுப்பினர். தமது மூத்த குமாரனை அழைத்துக் “கொல்லையிலுள்ள தோட்டத்திற்குச் சென்று இலையறுத்துவா” எனப் பணிக்க அவனும் சென்று

இலை யறுக்கும்போது, அதிற்றங்கி இருந்த கருநாகந்தீண்ட அவன் தன் தாயிடம் சென்று இலையைக் கையிற் கொடுத்து நிகழ்ந்ததைக்கூறி விடந்தலைக்கேற உயிர் துறந்தான்.

அதனைக்கண்ட அவ்வம்மையார் தம் நாயகருக்கு அறிவிக்க, அவர், இது தெரிந்தால் நம் பெரியார் அமுதுண்ணாரே என விசனமடைந்து பிணத்தை ஓரிடத்தில் மறைத்து வைத்து அமுதுண்ண வருகவென அழைத்தனர். இதனைக் குறிப்பாலுணர்ந்த அப்பெரியார் பிணத்தை எடுத்துவரச் செய்து பரமர் மீது பதிகம் பாடி அச்சிறுவன் உயிர்பெற்றெழும்படி செய்து அடிகள் தம்மிடம் வேண்டியவாறே அவரில்லத்தில் உணவுண்டு அங்கேயே சிறிது காலம் தங்கி இருந்தார்.

இவ்வாறு சில நாட்கள் செல்ல மறுபடியும் திருப்பழனம் வந்து பல தொண்டுகள் செய்து அங்குக் கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் பரமர் மீது பாட்டுப்பாடலில்அப்பூதியடிகளின் திருத்தொண்டையும் சிறப்பித்துப் பாடியருளினர். பின்பு ஆரூரன் உள்ள திருவாரூரின் மேன்மையைக் கேள்விப்பட்டு அங்கே சென்றனர். இவரது வருகையைக்கேட்ட அடியார்கள் எதிர்கொண்டழைக்கச்சென்று, அங்குப் புற்றை இடமாகக் கொண்ட பெருமானைக் கண்ணாரக்கண்டு துதித்துப் பணிவிடை செய்து அவ்வூருக்கருகேயுள்ள பல சிவஸ்தலங்களையும் வணங்கித்திரும்பினர். பின்னர் திருப்புகலூரை அடையவெண்ணிப் புறப்பட்டனர். அவ்வமயத்தில் சம்பந்தப்பெருமான் பல தலங்களுக்குச்சென்று கடைசியில் திருப்புகலூரையடைந்து சிவபெருமான் திருவடிகளை வணங்கி அங்கேயே வசித்து வந்தார். சம்பந்தர், நாவுக்கரசருடைய வருகையைக் கேட்டவுடன் களிப்புற்று எதிர்நோக்கிச் சென்று அவரை நோக்கி, அப்பரே!

தாங்கள் சென்று வந்த திருவாரூரின் சிறப்பைக் கூறவேண்டு மென்றனர். அரசர் திருவாரூரின் சிறப்பையும் வீதிவிடங்கப் பெருமான் பவனிவரும் கோலத்தையும் விபரமாகத் தெரிவித்தனர். அதனைக்கேட்ட சம்பந்தர், தாமும் திருவாரூருக்குச் சென்று சுவாமி தரிசனம் செய்து வருவதாயும் அதுகாறும் அங்கேயே தங்கியிருக்கவேண்டும் எனவுங் கூறித் திருவாரூர் சென்று திரும்பியபின் இருவரும் திருவீழிமிழலை என்னும் தலத்திற்குச் சென்றனர்.

இவர்களது வருகையைக்கேட்ட அந்நகர மாந்தர்கள் எதிர்கொண்டழைத்துச் சென்றனர். அங்கே தங்கியிருக்கும் படியான காலத்தில்,

"விண்ணின்று பொய்ப்பின் விரிநீர் வியனுலகத்
துண்ணின் றுடற்றும் பசி"

என்னும் பெரியார் வாக்கின்படி மழை பெய்யாதிருந்தமையால் விளைவில்லாமற் போயிற்று. பஞ்சத்தாற் குடிகள் வருந்தலாயினர். 'மிழலைப்பிரான்' அவ்விருவர் கனவிலுந் தோன்றி 'நீங்கள் வருந்தவேண்டாம்; உங்களுக்குப் படிக்காசு கொடுக்கின்றேன்' எனக்கூறி மறைந்தனர். கடவுளால் கொடுக்கப்பட்ட இரண்டு படிக்காசுகளைத் தினந்தோறும் பெற்று யாவருக்கும் உணவளித்து வறுமையை நீக்கினர். சிறிது காலத்திற்குள் மழை பெய்து நாடு செழிப்படைந்தது.

சிலகாலம் சென்ற பிறகு அவ்விருவரும் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருமறைக்காடு என்னும் தலத்தை யடைந்து கடவுளை வணங்கக் கோவிலுக்குட் சென்றனர். அங்கே வேதம் அருச்சனை செய்து கதவு தாளிட்ட நாள் முதல் இந்நாள் வரையும் கதவு திறந்த பாடில்லை யென்னவும், இப்பெ

ழுது வேறு வழியுண்டாக்கி ஜனங்கள் அதன் வழியே செல்லு கின்றார்கள் என்பதையும் கேள்விப்பட்டனர். அப்பொழுது சம்பந்தர் அரசரை நோக்கி, அரசே! இப்புதவம் திறக்கும்படி யருளவேண்டுமெனவேண்டலும் பதிகம்பாடித் திறக்கச்செய் தனர். இருவரும் ஆனந்தமடைந்து கடவுளை வணங்கிய பிறகு அரசர், சம்பந்தரை நோக்கி, "சுவாமி! இப்புதவம் முன்போல் தாளிடும்படி யருளவேண்டும்" என்றனர். அவர் அவ்வாறே பாடுமுன் கதவம் மூடிக்கொண்டது. இதன் குறிப்பையறிய விரும்பி அரசர் அங்கே சிறிது காலந்தங்கி இருக்க ஒருநாளிர வில் அவர் கனவில் இறைவன்தோன்றி, "அன்பனே! 'நீ கவலை யடையாதே; நீ திருவாமூருக்குவா" எனக்கூறி மறைந்தார். அரசரும் துயில் நீங்கிக் கடவுள் கட்டளைப்படியே பின் தொடர்ந்து செல்ல இறைவன் அவருக்குச் சமீபமாகத் தோன் றித் தன்னிருப்பிடத்தைக் காட்டி மறைந்தருளினார். இஃ திங்ஙனமாகச் சம்பந்தர், அரசர் திருவாமூருக்குச் சென்றிருப் பதையறிந்து வந்தடைந்தார். நாவுக்கரசர், 'என்னே எம் பெருமான் செய்கை; மறைக்காட்டின் கதவை ஞானசம்பந்தப் பெருமானன்றோ முதலிற் பாடித் திறக்கும்படி செய்திருக்க வேண்டும். அவ்வாறில்லாமல், நாம் அத்தொழிலை மேற் கொண்ட குற்றத்தினால்தான் கடவுள் நமக்குத் தோன்றவில்லை' யெனக் கவலைகொண்டனர்.

அப்பொழுது இறைவன் தன் உருவத்தை இருவருக்கும் காட்ட அன்புடன் வணங்கித் திரும்பி மறைக்காட்டை அடைந்தனர். இருவரும் அங்கே தங்கியிருக்கும்போது, பாண் டிய அரசன் மனைவியாகிய மங்கையர்க்கரசியாரும், குலச்சிறை நாயனாரும், மதுரையில் சமணமதம் அதிகரித்திருப்பதாகவும்,

அதனை நீக்கவேண்டுமென்றும், தூதுவர் மூலம் சம்பந்தருக்குச் சொல்லியனுப்பினர். அதனைக்கேட்ட சம்பந்தர், நாவுக்கரசரிடம் விடைபெற்றுக்கொண்டு மதுரைக்குப் புறப்பட்டுச் சென்றனர். அரசர் பல தலங்களை வணங்கி வடதளி யென்னுமிடத்திற்குச்சென்று அங்கேயிருக்கும் 'சோமேஸ்வரர்' அமணர் வஞ்சனையினால் அடைக்கப்பட்டிருப்பதைக் கேள்விப்பட்டு அக்கோயிலருகேசென்று இறைவனைத் தியானித்து "அப்பனே! நீ வெளிப்பட்டுச் சமணர்களைத் தொலைத்துக் காட்சி கொடுத்தாலன்றி உண்ணமாட்டே"னென்று கூறி உண்ணா நோன்புடன் இருந்தார். அதனைக்கண்ட கடவுள் அந்நாட்டரசனுடைய கனவிற்றோன்றி "அப்பா! நான் சமணர்களுடைய வஞ்சனையால் மறைந்திருந்தேன். நீ அவர்களைத் தொலைத்து நம் அடியவனாகிய நாவுக்கரசரைப் போற்றுவாயாக" என்று கூறி மறைந்தனர். அரசன், நித்திரை தெளிந்து தான் கண்ட கனவை மந்திரிமார்களுக்குத் தெரிவித்து, அவ்விறையவன் இருக்குமிடம் தேடிச்சென்று அமணர்களைத் தொலைத்தான். நாவுக்கரசரும் சிலகாலம் அங்கேயே தங்கி, பின்பு, திருப்பைஞ்ஞீலி என்னும் ஸ்தலத்திற்குச் செல்ல விரும்பினர்.

தாம் விரும்பியவாறே சென்றுகொண்டிருக்கும்போது கொடிய வெயிலினாலும், பசியினாலும் மிகவருந்தினர். இவரது வாட்டத்தைக் காண முடியாத சிவபிரான், ஓர் வைதீகப் பிராமணனைப்போல வேடந்தாங்கிச் சோற்று மூட்டையோடு எதிரேவந்தார். நாவுக்கரசர் இளைப்பாறும்பொருட்டு ஓர் மரத்தடியில் தங்கினர். வேதியனாய் வந்த பரமனும் அவ்விடத்திலமர்ந்து சோற்றுமூட்டையை அவிழ்த்து உணவு உண்ணும் அமையத்து இவரை நோக்கி, ஐயா! தாங்கள் பசி

நோயினல் வாடியிருப்பதாகத் தெரிகிறது. ஆதலால் இவ்வுணவில் தாங்களும் சிறிது உண்டு களைப்பைத் தீர்த்துக் கொள்ளுங்கள் என்று அழைத்தார். அரசரும், அவர் வேண்டுகோட்கிணங்கி உணவு உண்ணும் சமயத்தில் "தாங்கள் எங்குச் செல்கிறீர்கள்" என்று பரமன் அரசரை வினவ, அவர் திருப்பைஞ்ஞீலிக்குச் செல்வதாகக்கூறினர். வேதியரும் உடன் வருவதாகக்கூறி இருவரும் அவ்விடம் விட்டுப் புறப்பட்டுச் செல்வாராயினர். ஊர் சமீபிக்க வேதியனாய் வந்த பரமனார் மறைந்தருளினார். மறையவே, அரசர் பரமனின் திருவிளையாடல்களை வியந்து கோயிலினுட் புகுந்து இறைஞ்சி, மீண்டுமுள்ள மலைநாட்டுத்திருப்பதிகளையெல்லாம் வணங்கி, திருவண்ணாமலைசென்று அருட்பண்ணவன் நற்றாள் பணிந்தனர். பின்னர், பொன்முகலிநதியடைந்து தீர்த்தமாடிக் காளத்தியடைந்து குடுமித்தேவரை வணங்கி, அங்கேயே சில காலம் உறையலாயினர்.

பின்பு, நாளுக்குநாள் பக்தியதிகரிக்க, திருக்கைலைக்குச் செல்லவேண்டுமெனப் பேரவாக்கொண்டனர். அவா அதிகரிக்க அதிகரிக்க வனமும், மலையும், நதிகளும் கடக்கலாயினர். தெலுங்கநாடு, கன்னடநாடு முதலியவற்றைக் கடந்து சென்றனர். இரவென்பதும் பகலென்பதும் அவருக்குத் தோன்றவில்லை. நெடுந்தூரம் நடந்துசென்றதினால் கால்கள் நடை தளர்ந்தன. தளரவே அவர் மனம் பரமனைக்காணவேண்டுமென்று இழுக்க மெய்யாலூர்ந்து சென்றனர். அவ்வாறு சென்றும் கைலையைக் கிட்டமுடியாதவராய் வழியின் ஓர் பக்கம் உறைவாராயினர். அன்பர் கருத்தை இன்புறமுடிக்கும் பரமனார் ஓர்விருத்த வேதியராய்த் தோன்றி, ஐய! தாங்கள்

எங்குச்செல்கின்றீர்கள் என்று வினவலாயினர். நம் நாவரசரும் அவரைத்தொழுது, "சுவாமி விரிந்த சடாபாரத்தையுடைய கடவுள் அமர்ந்திருக்கும் திருக்கைலையைக்கண்டு வணங்கவேண்டுமென உட்கொண்டு செல்கின்றே"னென அவ் வேதியர் அவரைநோக்கி, "ஒருவராலும் காணமுடியாத கடவுளை நீர்காணச் செல்கின்றீர். பயன்தராத முயற்சியைவிட்டுப் போம்" என்றனர். அரசர் அவர் கூறியவற்றைக்கேளாது ஒரே மனதுடன் கைலைசென்று வணங்கி யல்லது மீளேன் என்றனர். அவ்வளவில் ஆகாயத்தினின்றும், "அன்பனே! யாம் திருக் கைலையிலுறையும் சிறப்பைத் திருவையாற்றில் காண்பிக்கின்றோம்; அங்கே வந்து கண்டுகொள்க. இங்குள்ள தடாகத்தில் மூழ்கிவருக"வெனப் பணித்துமறைந்தனர். இறைவன் பணித்தவாறு அப்பொய்கையில் மூழ்கினவராய்த் திருவையாற்றிலுள்ள ஓர் பொய்கையில் யாவருங்காண எழுந்தனர். இவரைக் கண்ட அங்குள்ள மாந்தரனைவரும், கடவுளின் திருவிளையாடலை வியந்தவராய் அரசரைப் பலவாறு துதித்து வணங்கினர். அரசரும், பதிகங்கள் பாடித்துதித்து ஆலயத்துட் சென்றனர். அங்கே, இந்திரன் முதலிய தேவர்கள் வாழ்த்தொலியும், வேதவொலியும்,அரம்பையர்கள் பாடுமொலியும் ஆழ்கடல் ஒலியையடக்கின. இத்தகைய சிறப்புக்களுடன்கூடிய இறைவனைக் கண்ணாரக்கண்டவரசர் ஆனந்தக்கடலில் மூழ்கினர். பின்னர் ஐயாறுடைய கடவுள் கைலையினமர்ந்த திருக்கோலத்தை மறைத்தனர். அரசர் தாம்கண்ட கோலத்தை யுலகோர் அறிந்து உய்யுமாறு பல திருத்தாண்டகம்மூலம் வெளிப்படுத்தினர். பின்பு சிலகாலம் அத்திருவையாற்றிலேயே வசித்து, சில ஸ்தலங்களுக்குச்சென்று கடைசியாகத் திருப்பூந்துருத்தியை யடைந்தனர்.

முன்பு பாண்டிநாட்டிற்குச் சென்ற அருந்தமிழ்ச் சீலரா கிய ஞானசம்பந்தர், அமணர்களை வென்று எங்குப் பார்க்கினும் சைவசமயமும், திருநீற்ருெளியும், சிவசின்னங்களுமே பொ லியுமாறு செய்தனர். பின்னர் கூன்பாண்டியனுடைய கூனைக் கடவுளருளால் நிமிரும்படி செய்தனர். சில நாள் அவ் விடத்திலேயே தங்கி, சோணுட்டை நோக்கிப் புறப்படலா யினர். அவ்வாறு அவர் புறப்பட்டு வரும்வழியில் திருப்பூந் துருத்தி என்னும் திவ்ய ஸ்தலம் குறுக்கிட்டது. நாவுக்கர சர் அப்பூந்துருத்தியிலிருப்பதாகக் கேள்விப்பட்டு அங்கே செல்லலாயினர். இவர் தம்மை நோக்கி வருவதைக் கேள் விப்பட்ட நாவுக்கரசர் தாமே முன்சென்று அவருக்குத்தெரி யாமல் ஓரிடத்திலமர்ந்து அவரைத்தொழுது, பின் அவர் ஏறி வருகின்ற பல்லக்கைத் தாங்கிச்செல்பவருடன் தாமும் ஒரு வராய்த் தாங்கிச்சென்ருர். சம்பந்தர் அரசர் திருமாளிகைக் குச்சென்று அங்குள்ளாரிடம் அப்பர் எங்குபோயிருக்கின்ருர் என்றுகேட்க, தாங்கிச்சென்றஅரசர் அவரைநோக்கிச் “சுவாமி அடியேன் நும்பல்லக்கின் கீழ் வந்திருக்கின்றேன்” என்றனர். சம்பந்தர் அவர் கூறியதைக் கேட்ட மாத்திரத்தில் மனமிக வருந்தினராய்க் கீழிறங்கி அப்பரை வணங்க எத்தனிக்கை யில் அரசர் காற்றினும் விரைந்து அவரை வணங்க இருவரும் அவிர்சடைக்கடவுள் வீற்றிருக்கும் ஆலயத்துட் சென்று இறைவனை யிறைஞ்சிமீண்டனர். சிலநாள் வரையும் சம்பந் தர் அப்பருடனேயே தங்கியிருந்து பிறகு தொண்டைநாட்டி லுள்ள ஸ்தலங்களையெல்லாம் தரிசிக்கும்பொருட்டு, பூந்து ருத்தியிலமர்ந்த இறைவனை யிறைஞ்சி யவ்வூரைவிட்டு அகன் றனர்.

சம்பந்தர் தம்மைவிட்டுப்பிரியவும், நாவுக்கரசரும் பாண்டி நாட்டிலுள்ள சிறந்த ஸ்தலங்களைக்கண்டு தெரிசிக்கும்பொருட்டுப் புறப்பட்டனர். வரும் வழியில் திருப்புத்தூரையடைந்து கடவுளை வணங்கி நற்றொண்டுபல புரிந்து மதுரை சென்று அங்குள்ள சோமசுந்தரக் கடவுளைத் தொழுதனர். பின்னர் பாண்டியனையும், பாண்டிமா தேவியையும், குலச்சிறை நாயனாரையும் கண்டபின் இராமேஸ்வரம் சென்று கடவுளை வணங்கி, திருநெல்வேலி முதலிய நல்ல ஸ்தலங்களுக்கெல்லாம் சென்று நற்றொண்டுபுரிந்து மீண்டும் பொன்னி நாட்டை அடைந்து, பூம்புகலூரை யடைந்தனர்.

பூம்புகலூரிலேயுள்ள இறைவர் மீது பக்திபூண்டவராய் அளவில்லாப் பாடல்களைப்பாடி உழவாரத் திருத்தொண்டு செய்தனர். அரசர் அத்தொழில் செய்யும்பொழுது, இறைவர் அவர் பெருமையை உலகத்தார்க்குக் காட்டவேண்டி. மண்ணிலிருந்து பொன்னும் மணியும் மேலெழும்படியாகச் செய்தனர். அரசர் கல்லையெடுத்து வீசுவதுபோல் திருப்பொய்கையில் அவற்றையெடுத்து வீசினர். பின்னர், திருப்புகலூர்நாதர் தேவலோகத்திநின்று அரம்பை திலோத்தமை முதலிய தேவதாசிகளை யனுப்பினர். அம்மங்கையர் நாயனார் முன் வந்து, ஆடல், பாடல், இங்கிதம் முதலியவற்றால் நாயனாரைத் தம் வசப்படுத்த முயன்றனர். நாயனார் அவற்றிற்கெல்லாம் மனந் தளராது பரமனிடத்தே பதித்த மனமுடையவராய் விளங்கினர். அம்மாதர்களும் தம்முயற்சி பயன்றராதென்பதையுணர்ந்து, நாயனாரைத் தாழ்மையுடன் பணிந்து, தம்மிருப்பிடத்திற் கேகினர்.

பின்பும் சிவஸ்தலம் பலவற்றிற்கும் சென்று வணங்கினர். உலகோரறிந்து உய்யுமாறு பற்பல விடங்களிலும் சைவசமயத்தைப் பற்றிப்பேசினர். கடைசியில் இறைவன் சீர்பாத பொற்கமலங்களை இறைஞ்சிச் சித்திரைமாதம் சதய நக்ஷத்திரத்தில் மண்ணுடுவிட்டு விண்ணுடு நீங்கிச் சிவத்தொடு கலந்தனர். அச்சமயம் பிரமன் முதலானவர்களும், இந்திரன் முதலிய தேவர்களும் எங்களரசு வந்ததென்று, களிகூர்ந்து மலர்மாரி மண்ணின்மேல் பொழிந்தனர்.

---

## 3. கும்பகருணன்

"கடல்நுரை யெனத்தக்க வெள்ளைத்துகிலை எனக்கு உடுத்திவிட்டாய்! தெய்வ மணம் கமழும் செஞ்சாந்தினை என் மார்பகலத்து இனிதாகப் பூசிவிட்டாய்! வீரபட்டத்தை என் நெற்றியில் வீக்கிவிட்டாய்! முக்கட் பகவன் மனமுவந்தளித்த தனிப்பெருங் கவசத்தையும் எனக்குப் பூட்டிவிட்டாய்! இவ்வாயத்தங்கள் எல்லாம் செய்வதற்கு யாது அடுத்துளது? காரணம் அறிகிலேனே" என்றான் இராவணன் தம்பியாகிய **கும்பகருணன்.**

அவன் போனலன்றித் தனக்குப் போரிலே வெற்றி கிடையாதெனக் கருதிய இராவணன் ஏவலால் பாதி யுறக்கத்திலே கலைத்தெழுப்பப்பட்டவனாதலால், அவனுக்கு இடைநிகழ்ந்தவை ஒன்றும் தெரியாது. அதனாலே தனக்குத் தன் தமையன் போர்க்கோலம் செய்வதைக் கண்ட அவன் இவ்வாறு வினவினான்.

இராவணன்: "ஆயத்தம் யாவையும் ஏனென்று கேட்கின்றாய்? ஆமாம். நீ ஒன்றும் அறிந்திலை. கூறுகின்றேன் கேள்.

வானரப்படையரான மானுடர் நமது நகரத்தைப் புறஞ்சூழ்ந்து விட்டனர். யானும் அவரோடு போர்புரிந்து பார்த்துவிட்டேன். ஒளிப்பதென்! முதல் நாட் போரிலே கொற்றங் கொண்டவர் அவரே காண். ஆதலாலே அவரைக் கொல்வது கருதி உன்னை யனுப்பத் தீர்மானித்துவிட்டேன். நீ சென்று அம்மானுடரை யும் வானரர்களையும் கொன்று தின்று போதுவாயாக. எல்லா ஆயத்தங்களும் அதன் பொருட்டுத்தான்."

கும்பகருணன்: "வெம்போர் மூண்டுவிட்டதா! இன்னும் சானகி துயரம் தீரவில்லையா! நான் அன்றே சீதையை விட்டு விடச் சொன்னேனே; நீ அம்மொழிக்குச் செவிசாய்த்திலே யோ? நம்முடைய புகழெலாம் போனதோ? நமக்கு அழிவு காலமும் கிட்டியதோ? துன்மந்திரிகள் சொற்புத்தி கேட்டுப் போருக்குத் தலைப்பட்டனையோ? ஏதேது! சீதை மேற்கொண்ட தீக்காதலன்றோ உன்னை இவ்வாறு செய்யத் தூண்டுகிறது? அச் சீதையின் பெருமை இன்னும் உனக்கு விளங்கவில்லையோ? அவளைக் கேவலம் சுகநலங் கொடுக்கலாகும் பெண்ணென்றோ கருதிவிட்டனை? அங்ஙனம் கருதாதே. அவள் அன்னளா தல் அவள் கணவனாகிய இராமன் ஒருவனுக்குத்தான்; மற்று நம்போன்ற புல்லியர்க்கு அவள் திட்டி விடத்தையே ஒப்பாள்."

"அண்ணா! உன்னுடைய ஆசையெல்லாம் வீணாசையே. உலகத்தைத் தோண்டி எடுக்கவேண்டுமா? அதற்கு வரம்பு கோலி வேலி கட்டவேண்டுமா? வேண்டுமெனிற் செய்யும் ஆற் றல் நம்மிடம் உண்டு; ஆனால் இராமன் தோளாற்றலை வெல்ல லாம் என்பதும் சீதை தோள்களைச் சேரலாம் என்பதும், உண் மையாய்க் கை கூடுவன ஆகா; அவற்றைச் சிந்தியாதே; அவை பகற்கனவாய் முடியும்."

"அண்ணா! ஒருவன் போருக்கு எழ நேருமுன் நினைய வேண்டுவன சிலவுளவே. தன் வலியும் மாற்றான் வலியும் துணை வலியும் ஐயந்திரிபற ஆராய்ந்து தெளிந்தபின்னரே யன்றோ போர்மேற் செல்லவேண்டும்? அந்த இராமலக்குமணருடைய நெஞ்சமும், கருமமும், சொல்லுமாகிய இவை, அருளும், அறமும், வாய்மையுமாகிய இவற்றின் வேறல்லவே; மற்று நம்முடையனவோவெனில், வஞ்சமும், பாவமும், பொய்மையுமாகிய இவையன்றியுண்டோ? எவ்வுலகத்தாயினும் அறத்தை மறமும், கருணையைக் கொடுமையும், வாய்மையைப் பொய்மையும் வெல்லக்கண்டனையோ? அன்றிக் கேட்டதாயினுமுண்டோ? இன்னும் பலப்பல கூற விரும்புகிலேன். ஒரே ஒரு வார்த்தைதான். அதனை நல்லதெனக்கொண்டாயெனில் நன்றே; அன்றெனில், உன்னை இறந்தவருள் ஒருவனாகத் திடமாக எண்ணிவிடுதியால். அவ்வளவுதான்."

"அண்ணா! ஒரு சிறிய வாய்க்காலைத் தாண்டுவதுபோலக் கருங்கடலைத்தாவி வந்தது ஒரு குரங்கு. அக்குரங்கு ஒன்று மட்டுமேயன்று; அதுபோல்வன எழுபது வெள்ளமான எண்ணுடைக் குரங்குகள் நம்மோடு போர்புரிய உயிர்கொண் டிருக்கின்றன. 'அவையிருந்தாலென்? நம்மை யென் செய்யும்? இந்நாள்வரையும் அவை யில்லையோ?' என்று நீ என்னை வினவுதல் வேண்டா. அண்ணா! இந்நாள்வரையும் இல்லாதனவல்ல அவைகள்; அவை இந்நாளில் நம்மூரிலே தொல்லை விளைப்பானேன்? எண்ணிப்பார். அவை தொல்லை விளைக்கக் காரணமாய்ச் சீதை நம்மூரிலே இருக்கின்றாள். அவள் இன்னும் இராமனிடம் போய்ச் சேர்ந்தாகவில்லை. அதனாலே அவளிருக்கு மட்டும் கூற்றொத்த குரங்குகளால் கோள் குறுகுவது திண்ணமே.

அவற்றால் விளையும் தீங்குகட்கு நாம் ஆளாகியே தீரவேண்டும். அசோக வனத்தை அழித்து, கிங்கரரைக் கொன்று, பஞ்ச சேனாதிபரை வதைத்து, நின்மகனான அக்ககுமாரனைத் தரையிலே தேய்த்து நமது கடிநகரையும் தீயிட்டுக்கொளுத்தி வாயு வேகமாய் உயிர்கொண்டோடியதே ஒரு குரங்கு; ஏனோ அஃது அங்ஙனமெல்லாம் செய்யவேண்டும்? எல்லாம் அந்தச் சீதை பொருட்டுத்தானே? ஆதலாலே அந்தச் சீதை இங்கு இருக்கு மட்டும் நமக்கு வருவன தீங்குகளே.''

"ஓ அண்ணா! அந்தக் குரங்குகள் போகட்டும். அவற்றைப் படைத் துணையாகக்கொண்டு வந்திருக்கும் இராமனோ சாமானியனல்லன். வாலியை மார்பை ஊடுருவிச்சென்றது ஒருசரம்; அஃது அம்மட்டோடு அழிந்தொழிந்ததோ? இல்லை; அஃது ஒன்றுமேயோ? இல்லை. அதுபோல்வன பல கணைகள்! அவையுடையன் அவ்விராமன். அவன் தன் கையாலே பாணத்தைத் தொடுத்துவிட்டானெனில், அது, மாமுனிவோர் வாக்குப் பொய்ப்பினும் தான் பொய்யாத தன்மையுடையதாகின்றது. அவனுடைய கணைகளுக்கு நம்மையெல்லாம் லக்ஷியமாக்கவே உனக்கு விருப்பமோ? அன்றி அழியாப்பெருஞ்செல்வத்தில் இன்புற்று வாழ்தல் விருப்பமேயோ?''

"அண்ணா! உன்னுடைய பெருஞ்செல்வத்தையும் நல்வாழ்வையும் வீணே அழித்துக்கொள்ளாதே. அருந்தவமாற்றிய பெரும் புண்ணியப் பயனாகவன்றோ நீ இச்செல்வ நிலையும் வெற்றியும் எய்திச் சிறந்தாய்? இவற்றை மறத்திறனாலே நிலை பெறச் செய்துகொள்ள வல்லார் யாருண்டு? அறப்பயனென்றிலன்றி வேறொன்றாலே வெற்றியைப் பெற்றவர் யார்தான் உண்டு? இராமனை வெல்லுதல் குறித்துக் கூறுதல் வேண்டா.

நம்முடைய குலத்துக்கேனும் உன் செயல் புகழ் விளைத்த துண்டா? நம்முடைய குலமுதல்வன் பொய்யில் கேள்விப் புலத்தியனன்றோ? அவன்தான் ஆதிப்பிரமற்குத் தோன்றிய பிரமர் பதின்மருள் ஒருவனல்லனோ? அன்னவன் குலத்திலே தோன்றியும் நீ அநீதமான செயல் புரிகின்றனையே! அறம் நிரம்பிய அருளுடைய அந்தணர் குலத்துத் தோன்றியும் நீ மறம்பலபுரிய நேர்ந்தனையே! உனக்கோ செருவிடை வெற்றியுண்டாகும்? ஒருகாலுமில்லை. இதற்குச்சான்று பிறிது வேண்டுமோ? நிலத்தியல்பு எத்தன்மையதோ அத்தன்மைத்தே யன்றோ நீரியல்பு தானும்?"

"அண்ணா! உன் செயலாலே நீ உன் விருப்பங்களுக்கு மாறான பலன்களையே விளையக் காண்பாய். உன் செயலாலே இந்திரனுக்கு அரசும் வெற்றியும் நீயே வலிய அழைத்துக் கொடுத்தவனாகின்றாய்; உன்பெருங் கிளைஞரைப் பகைவர் கொல்லக் கொடுக்கின்றாய்; உன் புதல்வரோடு நீயும் களத்திடை மாளத்தலைப்படுகின்றாய். போர்மேற் செல்லுதலை அவர் மாட்டு விரும்பாதே. அது உனக்குத் தகுவதன்று. சீதையை விட்டிடு; இராமனுடைய சரணத்தே தாழ்ந்திடு; அவனருள் பெற்றிடு; உத்தமனான உன்தம்பியாகிய வீடணனோடு அன்போடு அளவளாவுதலைச்செய்; இவ்வாறு நடந்தால் உனக்கு நீண்ட வாழ்வும் மாண்ட செல்வமும் பல்லூழி காலமும் பயன்படக் கிடைப்பதாகும்."

"அண்ணா! இவ்வளவும் உன் நன்மையை நாடிக்கூறினேன். இவற்றை நீ நயவாயெனில் கூறுவது மற்றொன்றும் உண்டு. அதனைக் கேட்டருள். பந்திபந்தியாய்ப் படைகளை நாம் அனுப்புதல் ஆகாது. அங்ஙனம் செய்துமெனில் அம்மானுட

வர்க்கு அப்படையைக் கொன்றழித்தல் எளிதாய்விடும். அவ் வீரராமன் கரன்படையைக் கொன்றது குறிக்கொள்வாயாக. ஆதலால் சிறு சிறு பகுதியாய்ப் படைகளை அனுப்பாமல், அனைத்துப் படையையும் ஒருசேரக்கொண்டு சென்று அவரை எதிர்த்தல் வேண்டும். அவ்வாறு செய்யின் ஒருகால் வெற்றி நமதாகலும் கூடும்.''

இராவணன்:''நிறுத்து உன்னுடையஅறிவுரைகளை. மேல் விளைவதைக்குறித்து எனக்குப் புத்தி சொல்வதற்காகவன்று நான் உன்னை இங்குவரச் செய்தது? மேல் விளைவுரைக்கும் அமைச்சர் பலரும் இங்குளர். அவர் சொல்லக்கடவன நீ மொழியவேண்டா. நீ எனக்கு அறிவுடை அமைச்சனல்லை. 'சிறுதொழில் மனிசரைக் கொன்றுவா' என்று உன்னை யான் பணித்தால் நீ அதை விட்டு ஏதோ அறிவுடையான் போலச் சில பிதற்றுகின்றாய்? உன்னுள்ளத்தெழுந்த அச்சத்தை மறைத் தற்கோ அறநெறி பேசுவான் தொடங்கிவிட்டாய்? உன்னைப் பெரிய வீரன் என்றல்லவோ எண்ணியிருந்தேன். சீ! இவ்வளவு தானா உன்னுடைய வீரப்பிரதாபம்! கோழை! மறங்கிளர்ந் தோங்கவேண்டிய செருவிலே அறங்கிளர்ந்தோங்கப் பேசுவ தோ ஆண்மை? குலமானம் பேசுகின்றனையே, பேதாய்! நெஞ் சினுள் மறமே யோங்கி நிமிர்கின்ற வீரவாழ்க்கையே யன்றோ நம் குலத்துக்குரியது? அதனை ஏனோ மறந்துவிட்டாய்? போ! போ!! போதுமானமட்டும் தசையும் நறவும் உண்டு தேக்கினாய். அவ்வுண்ட மயக்கந் தீரப் படுத்துறங்கச்செல்லு. இரவு பக லின்றி உறங்கு. துயில் கொள்ளாவிட்டாலும் கண்ணைமூடியே படுத்திரு; கண் திறக்கக்கண்டால், யாரேனும் உன்னைப் போ ருக்கு அழைத்துவிடப்போகிறார்கள். முழுப் பேதை! பகைவ

ரோ இருவர்; அவரும் கேவலம் மனிசர்; அவரை வணங்கியும் கூனுடைய முதுகுடைய குரங்கைக் கும்பிட்டும் வாழ்தல், நீ உத்தமன் என்று பாராட்டும் அந்தத் தம்பிக்கும் உயிர்மேலாசை கொண்ட உனக்குமேதான் தகும். ஆண்மையுடைய யானோ அது செய்ய நேர்வேனென்று எண்ணிவிட்டாய்? ஒருநாளும் செய்யேன் என்றறி. எழுந்திரு. படுத்துறங்கப்போ. யாரடா அங்கே! கொண்டுவா எனது தேரை; ஆயுதங்களை எடுத்துவா. நம் படை வீரரையும் மானுடரோடு போருக்குப் புறப்படு கெனக் கொட்டடா துடிமுரசம்''

இவ்வாறு சொல்லி இராவணன் எழுந்துபோகத் தலைப் பட்டான். அவன் சொல்லால் சுறுக்கென்ற மனத்தனாய், ''அண்ணா! மனம் பொறுத்தருளவேண்டும்'' என்று அவ் விராவண னடியை உறப்பூண்டு பணிந்து பின், எழுந்து, அக் கும்பகன்னன் தன் நெடுஞ் சூலத்தைக் கையிலே வாங்கிக்கொண்டு ''கடை முறையிற் சொல்லுவன சில கேள்'' எனச் சொல்லத் தொடங்கினான்.

கும்பகன்னன்: ''அண்ணா! இன்ன காரணத்தால் என்று திட்டமாய் உரைக்கமுடியவில்லை; என் மனதிலே யான் வென்று ஈங்கு வருவேன் என்ற எண்ணமே உண்டாகின்றதில்லை. நான் இறந்து படுவேன் என்றே என் புத்தியிலே படுகிறது. எவ்வளவோ உத்தமனும் நல்ல அறிவுடையனுமான வீடணன் நல்லுரைகளை நீ கேட்டாயில்லை. நானும் எவ்வளவோ சொன்னேன்; அவற்றையும் கேட்டாயில்லை. இவ்வளவு பிடிவாதமாக நீ மறுத்தலை நோக்கும்போது இது விதியின் வலியென்றே எண்ணுகின்றேன். அக்கொடிய விதி பிடர்பிடித்து உந்துகையில் நல்லன கேட்க உனக்கு மனம் பற்றுமோ? நீ கேளாதது

குறித்து யான் இனி வருந்தேன். போருக்குச் செல்லும் யான் இறந்தே படுவேன். யான் இறந்தேனென்று உனக்குத் தெரிய வந்தால் அப்பொழுதாயினும் நீ யோசனை மேலொன்றும் செய்யாமல் சீதையை இராமனிடம் விட்டுவிடு. அதுதான் உனக்கு அறிவுடைச்செயலாம். என் மனத்திலே ஓர் எண்ணம் நிலை பெற்று ஓங்குகிறது. உன் மகனான இந்திரசித்தன் எவ்வளவோ பேராற்றலனே; என்றாலும் அவன் அவ்விராமன் தம்பி கைக் கணைக்கே இரையாகி யொழிவனென்று என் அறிவிற்படுகிறது. அது ஒருநாளும் பொய்யாதென்றே எண்ணுகிறேன். உன் படையெல்லாம் காற்றிலகப்பட்ட சாம்பரே போலத் தூட் பறந்து போய்விடும் என்றே உணருகின்றேன்; என்றாலும் ஒவ்வொரு நிலையிலும் நீ முன் யோசனையுடையனாக வேண்டுமென்பதே என் விருப்பம். அண்ணா! நான் இப்பொழுதே செல்கிறேன். வெற்றியுடன் மீள்வேன் என்ற நம்பிக்கையோ எனக்கில்லை. என்னை அவர்கள் வென்றுவிட்டார்கள் என்பது கூடுமானால், ஓ அண்ணா! அவர்கள் உன்னை வென்று உயர்வடைதல் திண்ணமே; ஆதலாலே, அதன் பின்னருமிருந்து பலப்பல யோசனைகள் செய்யவேண்டா; அந்தச்சீதையை அப்பொழுதே இராமனிடம் ஒப்புவித்துவிடு. இன்றுவரை யான் உனக்குச் செய்துள குற்றங்கள் உளவெனிற் பொறுத்தருள வேண்டுகிறேன். இலங்கையர் காவல! இனி நாம் ஒருவரை ஒருவர் பார்ப்பது இங்கில்லை; இன்றோடு ஒருவர் முகத்தில் ஒருவர் விழித்தலற்றது. அண்ணா! விடை பெற்றுக்கொள்கின்றேன்.''

இவ்வாறு சொல்லித் தான் சூலபாணியாய்க் கும்பகன்னன் புறப்பட்டுப்போயினான். அப்பொழுது இராவணன்மனநிலையை என்னவென்பது? கோழை, பேதை, எனக் கும்பகன்னனை

அவன் இகழ்ந்தானேனும் அவன்பால் அவனுக்குள்ள அன்பு சிறிதும் குறைந்ததில்லை. அன்பிற்குமுண்டோ அடைக்குந் தாள்? அவன் தனது கண்கள் இருபதிலும் வழி விழி நீரோடு இரத்தமும் சிந்தி மனங்கலங்கி நின்றிட்டான். ஆண்டுள்ள அரக்கர் அனைவோரும், தமையனும் தம்பியும் அரிதிற் பிரிந்த நிலை கண்டு மனமாழ்கினர். இப்படியாகக் கும்பகன்னனும் அரண்மனை வாயிலைக்கடந்து மதிற்புறம் போந்து மணித்தேரில் ஏறினன்; புறப்பட்டான். அத்தேரோ ஆயிரம் பூதமும் ஆயிரம் யானையும் இழுப்பதோர் தேர். அவன் பின்னே தோமரம், சக்கரம், சூலம், கோல், மழு, வேல், உலக்கை, வாள், நாஞ்சில், கதாயுதம், வில், கேடகம் இவற்றைத் தாங்கிய வீரர் பலர் சென்றனர்.

படை வெள்ளம் பின்தொடரத் தேரேறி முன் வருகின்ற வனை இராமன் செய்மைக்கண்ணே கண்டான். "இத்தேரின் மீதுள்ளது வீணைக்கொடியன்று; ஆதலாலே வருபவன் இராவணன் அல்லன். கொடியோ சிங்கக்கொடியாகத் தெரிகிறது. இத்தேரில் வருவோன் யாவனோ? யாவனாயினும் என்ன? இவனது தோளொடு தோளைத்தொடர்ந்து நோக்கவேண்டுமெனில் நாள் பல வேண்டும்! இவன் வடிவநிலையை என்னென்பேன்! கால் பெற்றெழுந்த மேருமலைதான் போரை விரும்பி இவ்வடிவைக்கொண்டு விட்டதோ? இவனை ஓர் ஆளென நினைத்தலும் அடாது. இராவணன் மாயங்கள் வல்லன் என்றார்களே. ஒருகால் அவன் தன் சுயவுருவை மறைத்துக் குரங்குச் சேனையை அச்சுறுத்தக்கொண்ட வடிவமோ இது? இவ்வுண்மை சிறிதும் அறியகிலேன்" என்று நினைந்து வியந்தான். வியந்தவன், பொருக்கென, "வீடணா! இத்தேர் மீது வருபவன் யாவன்? அறியச்சொல்" என்றான்.

வீடணன்: "ஐயனே! இவனை யாரென்று கேட்கின்றீர்! இவன்தான் இலங்கை வேந்தாகிய இராவணனுக்குத் தம்பி; எனக்குத் தமையன்; கும்பகன்னன் என்னும் பெயரினன். பெருந்தவம் செய்து வரங்கொள்ளும் நாளிலே நித்யத்துவம் கேட்கப்போய் நித்ரத்வம் எனச்சொல்லி வாழ்விழந்த தன்மை யாளன். இவன் ஊழி நாளும் உறங்குவதே தொழிலானன். இவன் ஆற்றலைக்குறித் தென்னுரைக்கவல்லேன்; காலனுக்கு இவன்தான் காலன்; போரிலே சாரி திரிவானெனில், வாயுவுக்கு இவன் வாயு போல்வான்; திருமாலும் முதுகிட்டோடத் தன் கைச்சூலமே கொண்டு வென்ற பேராற்றலன்; இந்திரனுடைய ஐராவதத்தைப் பம்பரமெனச்சுற்றி விளையாடினவன்; தீயையும் காற்றையும் பிழிந்து சாறு கொள்ளவல்ல பெற்றியன்; கடல் நீரை அதில் இறங்கிக் காலால் இறைத்து வற்றச்செய்ய வல்லவன்; மதத்துத் திரண்ட வலியுடையுடலினன்; இவன் சிங்க வேற்றினும் சிறந்த மிடுக்குடையன்; உயர்ந்த தவத்தினன்; அத்தவப்பயனாலே சிறந்த வரத்தையுமுடையான்; தேவர்கள் போருக்கு முன்னிட்டால் அவ்வேழையமரர் வென்னிலன்றி விழித்திலாதவன்; இவன் நெடிதுகாலம் உறங்கலாலே உலகத்திலேஉயிர்கள் உண்டெனலாயிற்று. ஐயனே! தேவர்கோனை திருநெடுமால் அறிதுயிலெழுந்த காலத்திலே படுவார் அரக்கரென்றால் அரக்கர்கோனை இவன் துயிலெழுந்த காலத்தே படுவார்கள் அமரரேதான். இத்தன்மையனேனும் உன்னுடைய விஷயத்தில் தன்தமையனுக்கு எவ்வளவோ நன்மதிகளைக்கூறினன். "இது தருமமன்று. சீதையை விட்டுவிடு. விடாயெனில், இதனாலே நமக்கு அழிவே வரும்" என்று மிகவும் இவன் வற்புறுத்திக்கூறவும் செய்தான். எவ்வளவு சொல்லியும் அவன்

கேளாமை கண்டு, அவனை வெறுத்து, அவன் மாய்வது சரத மாதலின், 'நாமும் உயிர் கொடுப்போம்' என்று ஈண்டு நின்னை எதிர்க்கவந்தான். தமையன்செயல் நன்றன்றெனக் கூறியவன் தானே அச்செயலுக்குடன்பட்டுப் போருக்கு வந்துவிட்டான். இதுவும் விதியது வலியலால் வேறுமற்றுண்டோ?"

**சுக்கிரீவன்:** "ஓஹோ! இவனைக் கொன்றுவதென்? ஊழி நாளும் உறங்குவோனைக் கொன்றுலென்? கொல்லாமல் விட்டா லென்? இவன் தன் தமையனுக்கு நீதியுரைத்தானென்று, வீடணா! நீ கூறுதலாலே நெறியுடையன் போலும்! அவன் நம் ஐயனைச் சேருவானெனில் சேர்த்துக்கொள்வோமே; உனக்கும் அது நன்மை பயப்பதாகுமன்றோ?"

**இராமன்:** "நல்லதே யுரைத்தாய் நம்பி! அப்படிச் செய்ய லாகும். ஆனால் அவன்பாற் செல்லுதற்கு உரியார் யார்?"

**வீடணன்:** "ஐயனே! அடியனேன் செல்கின்றேன். அவனை என் அறிவின் திறத்தாலே தெருட்டுகின்றேன். அவன் நம்மைச் சேருவானென்று உறுதியாய்க் கூறமாட்டேன்; என் றாலும் என்னாலியன்றவரை முயன்று பார்க்கின்றேன். அவன் நம்மைச் சேருவானேயாயின் ஈண்டு அழைத்துப் போதுகின் றேன்."

**இராமன்:** "நல்லது. அப்படியே செய். சென்றுவா"

இராமனிடம் விடைபெற்றுச் சென்ற வீடணன் தன் தமையனிருக்கும் இடத்தைச் சேர்ந்தான். அரக்கரிற் சிலர் வீடணன் வரவைக் கும்பகன்னனுக்குத் தெரிவிக்க அவன் மன மிக மகிழ்ந்து எதிர்கொள நின்றான். நின்றவனைச் சென்று வீடணன் அடிவணங்கினான்.

கும்பகன்னன், தன்னடியிலே வீழ்ந்து வணங்கிய தம்பியை எடுத்து மார்பாரத் தழுவினான். தழுவியவன், கண்கள் நீர் சொரிய நின்று தம்பியை நோக்கிச் சில கூறுவானாயினான்.

**கும்பகன்னன்:** "அப்பா! வீடணா! நீ ஒருவன் உய்ந்தனை போயினை என்றெண்ணி நெஞ்சம் மகிழ்ந்தேன். என் மகிழ்ச்சியெல்லாம் சிந்தும்படி நீ ஈண்டுப் போந்ததென்னோ? நீ இராமனிடம் அபயம் பெற்றாயெனக் கேட்டேனே! தேவர்க்கும் கிடைத்தலரிய பேற்றை நீ பெற்றுயர்ந்தனை யெனப் பலரும் சொன்னார்களே! அறிவுடையோய்! அப்படிப்பட்ட நீ இங்கு வந்ததென்? எங்கள்பால் எத்தன்மையான நன்மையுண்டெனக் கருதினாயோ? அப்பனே! நாங்கள் காலன் வாய்ப்புகக் களித்துத் தருக்கின்றமை நீ கண்டிலைபோலும்? நீ அமுதுண்ணத்தக்கவனல்லையோ? நஞ்சுண்ணக் கருதினாயோ.?"

"கவிஞரினும் சீரியோய்! நீ உன் அறிவையெல்லாம் இழந்து விட்டனையா? அந்த இராமலக்குமணரை ஏனோ பிரிந்து வந்தாய்? அவ்விராமலக்குமணர் உன்னைத் துறந்திருப்பர் என்று யான் எண்ணமாட்டேன். அவர் அத்துணை எளியரோ அல்லர்; மற்று அவரோ அறப்பெருந்துணைவர்; அவர்கள் தம்முயிரையேனும் துறக்கத் துணிவரல்லால், தம்மை அபயமென் றடைந்தாரைத் துறத்தலோ துணியார்; ஆதலால் அவர் துறத்தலாலே ஈண்டு நீ போந்தாயெனக் கருதமாட்டேன். உன்னுடைய நல்லறிவைத் திரித்தவர் யார்?"

"ஐயா! நீ என்றுவரை இராமனைத் துணைக்கொண் டிருப்பாயோ அன்றுவரை உனக்கு இறப்பென்பதேது? பிறப்புத் தானேது? பிறவித்துன்பம் ஒழியக்காணும் பேற்றினும் ஒருவ

னுக்குச் சிறந்த வேறு பேறென்னுண்டு? அப்பனே! நீ உன்னுடைய சிறுபருவந்தொட்டே உத்தம ஒழுக்கினை யன்றோ? அவ்வொழுக்கின் பயனாக, அறமே உருவெடுத்தனைய இராமனுக்கு அன்பு பூண்டு அடிமையாகிக் காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களும் மருங்கறமாற்றிப் பெருவாழ்வு பெற்ற நீயோ, பிறன்மனை நோக்கிவாழும் பேதையேமைச்சேரவந்தாய்?''

"அப்பா! வீடணா! அரும்பெருந்தவங்கள் செய்து பெற்ற வரத்தாலே நீதியும், தருமநிலையும், மெய்யுணர்வும், விளிவிலா ஆயுவும் பெற்றனையே; இவை பெற்றுச் சிறந்த உன்னிடத்தும் சாதியின்புன்மை இன்னும் தீர்ந்தபாடில்லைபோலும்? நாங்களோ போருக்கே மூண்டுவிட்டோம். எங்களைக் கொல்லவோ இராமனும் நேர்ந்துவிட்டான். அவன் மட்டுமோ? அவன் தம்பியும், கூற்றமும் கூடிநிற்க, விதியுமன்றோ எங்களைக் கொல்லுவான் முற்பட்டுவிட்டது? இவ்வாறு ஒரே காலத்தில் தப்பவொண்ணாதபடி நாங்கள் அழிய விருத்தலை உணர்ந்துமோ எம் பக்கல் நீ வந்தாய்?''

"ஐயா! நம்முடைய குலத்தியல்பு இராவணன் இழைத்த தீமையால் அழிந்தது; எனினும், குமரா! உன்னைக்கொண்டு புலத்தியன் மரபும் புண்ணிய வாழ்விலோங்கக் காணலாகும் என்றிருந்தேனே; என்னுடைய எண்ணத்தைப் பாழாக்கி என் வாயில் மண்ணைப் போட்டனையே! நீ ஈண்டு வந்தது அறமாகுமா? அன்றி அறிவுடைச் செயல்தானாகுமா? நீ இராமனுடைய காவல் பெற்று உய்கிலையெனின், அவனாலே இறந்துபடும் எங்களுக்கெல்லாம் எள்ளுநீரைக் கையாலே இறைத்துக் கடன் கழிப்பார் வேறு யாரையா உண்டு? அவரைக் காட்டிக் கழியாய் அப்பா!''

"இப்பொழுது நீ இலங்கையூர்க்கு வருதல் சிறிதும் தகாதே; மற்று இப்புன்றொழில் அரக்கரெல்லாம் மாண்டொழிந்த பின்பன்றோ நீ வரக்கடவை; அப்பொழுதல்லவோ உன்னுடைய உயர் குணத்துக்குரிய வரிசைகள் சிறப்பதாகும்?"

**வீடணன்:** "அண்ணா! நீ நினையுமாறு யான் இராமலக்குமணரை விட்டு வந்தேனில்லை. உன்னிடம் ஒரு காரியங் கருதி வந்தேன்."

**கும்பகன்னன்:** "அப்படியா! மிகவும் நல்லதே. நீ இராமனை எவ்வாற்றாலும் பிரிதல் கூடாதென்பதே என் விருப்பம்; அதனாலே தான் இத்துணையும் சொன்னேன். நீ வந்த காரியம் என்னோ? அறியச்சொல்லாய்!"

**வீடணன்:** "அண்ணா! நீ இராமனை நன்கு தெரிந்துகொண்டிருக்கிறாய்; ஆதலாலே நான் அதிகம் சொல்லத் தேவையில்லை. அவ்வறப்பெருந் துணைவன் இருளுறு சிந்தையேனுக்கும் இன்னருள் சுரந்தான். அன்னான் நீ சேரின் அருளும் என்று உரைக்கவும் வேண்டுமோ? அருளொன்றோ செய்குவன்? அபயவரதமும் அளித்துக் காப்பனல்லனோ? இம்மையிலே மட்டுமோ அவன் காப்பவனாவான்? இல்லையில்லை. மறுமைக்கும் அவனே தான் காப்பாவன். பிறவிப்பகைஞன் அவனல்லனோ? ஆதலாலே சகடமொத்து நிலைமாறி வருகிற இவ்வாழ்க்கைத் துன்பங்களைத் துடைத்தருளி, ஒப்புயர்வில்லா வீடு பேற்றையு மளிப்பன். இது பொய்யா வாய்மை காண்."

"அண்ணா! அவனைச் சரண்புக்க எனக்கு அவன் இலங்கைச் செல்வம் ஈத்தருளினான். அச்செல்வத்தையும் அரசுரிமையையும் எல்லாம் உனக்கு யான் தருகிறேன். தருதலொன்றோ? அவற்

றைத்தந்து உன் ஏவல் வழியொழுகுகின்றேன். இதன்மேலும் உனக்கு உறுதியொன் றுண்டெனக் கருதுகின்றனையோ? உன் விஷயத்தில் என் மனம் மிகவும் வியசனத்தை யடைகிறது. நீ என் மனக்கவலையை மாற்றுதற்கு ஒருப்படாயோ? குலமானம் பேசுகிறாயே, அண்ணா! நீ நமது குலம் விளங்குதற்கு நன்னெறிப்படுதலன்றோ செய்யவேண்டும்? நீதியும் அறமும் இத்தன்மையவென்று அறிந்தாரிலே உன்னிற் சிறந்தவர் யாருண்டு? அவற்றின் இயல்புகளை நன்குணர்ந்த உனக்கு நான் சொல்வதென்னோ?''

"அண்ணா! போர் முகத்தே இராமனை எதிர்க்கச் சென்றால் சென்றவர் உய்ந்து போதலோ அரிதாகும். அவன் பாணத்தைத் தப்பி உய்ந்துபோதற்குப் புகலிடமாகிலும் அவர்க்குண்டோ? யாரேனும் அது வுண்டெனக் கேட்டதில்லை. ஆதலாலே அவனைப் பகைத்துச்சென்றார் சாதலோ சாதமாகும். இவை யுண்மையாலே நீ போருக்குச்சென்று உயிர்விடுதலாற் பயனில்லையே! அநியாயமாய் உன் ஆருயிரை ஏனோ நீ போக்கிக்கொள்கிறாய்? அறத்துக்குப் புறமான வழியிலே உயிரை நீப்பதற்கு, நீதிகளை அறிந்த நீயும் அமைந்தனையே! இந்நாள்காறும் நீ உறங்கி உன் ஆயுளைத் தேய்த்ததல்லால் உறுதியெனத்தேடிய பொருள் தானுண்டோ? வீணே நினது நீண்ட நாளையும் போக்கிவிட்ட நீ, தக்க சமயம் வாய்த்த காலத்தேனும் உய்நெறியைக் கடைப்பிடித்தலாகாதா?''

"அண்ணா! நீ உன் தமையனுக்காகப்பரிதற்கு என்னுளது? உன்னிலும் யான் பரிந்ததில்லையோ? உன்னிலும் யான் சிறக்க நல்லற உரைகள் வழங்கியதில்லையோ? என்னை அவன் மதித்தானா? உன்னைத்தான் மதித்தானா? மூடர் மொழிந்த தீயமொழி

களுக்கேயன்றோ அவன் செவி சாய்த்துவிட்டான்? உன் தமையனைக் காக்கலாம் உபாயங்களைப் பார்த்தும் பயன்படாமை அறிந்தன்றே யான் துறந்து போந்தேன்?''

''அண்ணா! சினந்தெழுந்து போர்க்களத்துக்கு எவனுந் தான் போகலாம். மறத்தொடு கூடி ஆரமர் புரிந்து உயிரையும் போக்கலாம்!, ஆனால் அறனிலாமாக்களுக்கு மறுமைப்பயனாகக் கிட்டுவது நரகந்தானே! இங்ஙனமிருத்தலின், அறிவுடைமாந்தர் வேதநூல் மரபுக்கு ஏற்ற ஒழுக்கமேயன்றோ என்றும் புரிதல் வேண்டும்.''

''போர் மூண்ட இக்காலத்திலே அவனை எப்படித்துறந்து வருவதென்று நீ சிந்தனை செய்யவேண்டா. அண்ணா! அறவும் கொடியன செய்வாரேயாயின், சிறந்தவரென்? உடன்பிறந்த உற்றாரென்? தாயரென்? தந்தையரென்? தம்பியர் தாமென்? இவர் இன்னரென நினைதலும் செய்வரோ தருமம் பார்ப்பார்? நீ இவை யறியாதவனல்லே. யானோ உனக்கு இவை சொல்லல் வேண்டும்? நல்ல வினைகளிலே தலையிட்டு நின்றாரைப் பழிவந்து எவ்வுலகத்தாயினும் தொடர்வதுண்டோ? மக்களையும், பெற்றோரையும், மாதரையும், ஏனைச்சுற்றத்தோரையும், தமக்கினிய உயிரன்னாரையும், மறக்கக்கூடாத நன்றி புரிந்தோரையும் ஒருசேரத் துறந்துவிட்டு, உரனுடையோர் துறவு பூண்ட காலத்தே, அவர்க்கு அது புகழ் பயந்ததோ பழி விளைத்ததோ? பகர்தல் வேண்டுமால்! அதுதான், புகழ் பயந்து, நல்ல செயலாய் வீடு பேற்றையுமன்றோ அத்துறவுடையார்க்கு உதவநின்றது? ஆதலாலே நீ அக்கொடிய தீயவினைகளை செய்யும் உன் தமையனைத் துறந்து போந்தனையெனின் அதுவே நினக்குப் புகழை விளைக்கும் என்னவும் வேண்டுமோ?''

"அண்ணா! அங்ஙனம் செய்தார் யாரேனுமுண்டோ என் பாயாகில் கூறுவன்; கேளாய். மக்களில் ஒருவனான பரசுராமன், தீயவினை செய்யவன்றோ தாயையும் கொல்ல நேர்ந்தான்? அம் மழுவாளவன் தவத்தின் மிக்கவனல்லனோ? அவன் செயலால் அவனுக்குப் பழிவந்து பிறந்ததுண்டோ? தேவரிலே, நான் முகனது தலைகளிலே ஒன்றைக் கண்ணுதலோன் பற்றித் திருகிப் பறித்ததுவும் புகழ்பெறு செயலே ஆயிற்றன்றோ? பழி யொடு பொருந்தி நரகிடை வீழ்தற்கான செயலைத்தான் அறி வுடையார் செய்ய ஒருப்படார்; மற்றுப் புகழொடு பொருந்திப் புண்ணியம்பயந்து வீடுபேறளிக்கும் வினை செய்யவும் பின்னிடு தல் உன்னைத்தார்க்கும் அழகாகுமோ? பொன்போலுடம்பில் புண்ணொன்று தோன்றின், கண்ணோட்டமின்றிக் கருவியிட் டாற்றி இன்புற்று வாழ்வதல்லால், அப்புண்ணைப் பொதிந்து வைத்து மூடுவாருண்டோ? இல்லையே; அதுபோலவே புண் ணைத்துப் பிறந்த முன்னோனைத் துறந்து நீ போதுவாயெனில் உனக்கு அது பெரும் பேறளிக்கும்."

"அண்ணா! இராமபிரானோ கேவலம் மானுடனல்லன்; அவன் திருமறுமார்பன். அவனை நீ சரண் புகுந்தாயேல் அவ னருளாலே இந்நெடுந்துயில் ஒழியப்பெறுவாய்; செல்வப்பெரு மையும் எய்துவாய்; அளவிலா ஆயுவும் பெறுவாய்; ஏக சக்கர வர்த்தியாய் அரசு புரியும் பதவியும் கிடைக்கும்; இவ்விலங்கை யரசுரிமை நினக்கு இல்லையென்றற்கில்லை; இவை பெற்று வாழ் வதினும் அரிய பொருள் உனக்கு வேறொன்றுமில்லை; அதற்குக் காலமும் கிட்டியது."

"அண்ணா! தேவாதி தேவனான இராமன் அருளிய இலங் கைச்செல்வம் பெற்றனையாமெனில், நீ பிறர் சிலருக்குக்

தாழ்ந்தவனாகமாட்டாய்! உன்னை நலியும் வலியுடையார் வேறு ஒருவருமிலராவர். உன் மக்களும், உன்னோடு பிறந்த என் மக்களும், நம்முடைய குலத்துக்கு முடிவு தேடுகிற அத்தீயோனுடைய மக்களும், உறவின் முறையாரும் நம்மாலே தலை கொண்டு திரியலாவர்; இல்லையெனில் இராம பாணத்துக்கு இலக்காகி யொழியவேண்டியவரே தான்.''

"அண்ணா! நீ இராமனை அடைந்துவிட்டாயெனில், நம் மேல் வெறுப்புடைய முனிவரும் நம்மிடம் கருணை வைப்பர்; நமக்குச் சென்ம விரோதிகளான தேவருங் கூட நமக்குத் துணைவராவர். நல்ல கனிவரும் காலத்திலே பூக்கொய்ய ஒருவன் நினைப்பது எத்துணைப்பேதைமையுடைய செயலாம்?''

"அண்ணா! இவ்வளவும் யான் வற்புறுத்துச் சொல்லற்குக் காரணமுண்டு. வேதநாயகனே தனது அருளாலே உன்னை வேண்டிவிட்டான்; அதற்குக் காரணமும் அவன் என் மேல் வைத்த கருணையேயாகும்; நீ செய்யத்தகுந்த கருமமும் ஈதன்றி யில்லை; ஆதலால் அத் தனிப்பெரு மூர்த்தியைக்காணப் போது வாயாக. ஐயனே! சிந்தை செய்கையில் திகைத்தல் வேண்டா.'' என்று கும்பகன்னனுடைய பொன்னடி பற்றிக்கொண்டான்.

தன் அடியிணையைப் பூண்டு கிடக்கும் அன்புடைத் தம்பியை எடுத்துப் புல்லிக்கொண்டு, கண்களிலே உள்ளன்பைப் புறங்காட்டும் கண்ணீரோடே செம்புண்ணீரும் பாயநின்று, கும்பகன்னன் மறுமொழி சில பகர்வானானன்.

**கும்பகன்னன்:** "தம்பி! வீடணா! என் வாழ்நாளைக் கொன்னே உறங்கிக் கழித்தேன் என்றல்லவோ மனமிரங்கினை? என் உயிருக்கு உறுதியையல்லவோ உரைத்தனை? தக்கதே.

தம்பி! நீ கூறியாங்கே நிலையில்லாத வாழ்வன்றோ நம்முடைய வாழ்வு? இவ்வாழ்வுடைய என்னைப் பேணிப்போற்றி இராவணன் வளர்த்தானன்றோ? நான் பன்னெடு நாள் உறங்கி அவத்தமே காலத்தைக் கழித்தேனே; ஆயினும் அவன் என்னைத் துறவாது முனியாது பேணினனன்றோ? எனக்கினிய சுவையுடை யுணவுகள் அளித்து, என் மேனியைப் பொன்னேபோல் போற்றினனன்றோ? அன்று அங்ஙனம் போற்றிய அவன் இன்று போர்க்கோலத்தை எனக்குப் பூண்டுவிட்டானெனில் நான் என்செய்யும் கடப்பாடுடையேன்? கூறாய்! 'கொள்ளென்றால் வாயைத் திறப்பேன்; கடிவாளமென்றால் வாயை மூடுவேன்' என்றவாறு ஒழுகுவதோ எனக்கழகிதாம்? என்னை அவன் முழுதும் நம்பியேயன்றோ போர்க்கோலம் பூண்டுவிட்டான்? அவனுக்காக என்னுயிரைக் கொடாது வாழ்வதும் எனக்கு ஒரு வாழ்வாகுமோ? ஆதலாலே என் பொருட்டு நீ கவலையடைவ துண்மையேயெனின் இராமனைக்கடிதிற் சென்றடைவாயாக."

"மலரவன் அருளிய வரத்தினாலே நீ அழிவிலாத் தருமநெறியை மேற்கொண்டாய்; உனக்கது தக்கதேயாகும்; மற்றுயான்எய்துவது புலையுறு மரணமே; ஆயினும்எனக்கோ அதுவே தக்கதாகும். தன் தலைவன் அறிவிலனாய்த் தீமைகள் செய்தொழுகுவானெனின், அடுத்தவர் கடன் அவனைத் திருத்துதலே; அவர் திருத்தவும் அவன் திருந்தானெனிலோ, அடுத்தவர்க்கு அடுத்தது அத்தலைவனின் முன்னம் சாதலன்றியும் வேறு சில உண்டோ? உண்டவர்க்குக் கடனாவது யாது? தமக்குத் தீஞ்சுவையுண்டி யுதவிய தலைவனுக்குப் பிறரோடு போர் மூண்டதெனில், உண்டவர், செருவிடைச் சென்று தம் இன்

னுயிரை இழப்பதன்றோ செய்யவேண்டும்? அப்பொழுதன்றோ அவர் செஞ்சோற்றுக் கடன் கழித்த சீரியோராவர்?''

"நீ சரணெனச் சேர்ந்த இராமன் அறப்பெருந்தலைவனே; அவனுடைய சுடுகணையால் என் தமையன் மாண்டொழிவது திண்ணமே; எனினும் போர்க்களத்தே சுற்று முற்றும் வெம் படை வீரர் ஒருபுறம் கிடக்க, வேறுள சுற்றத்தார் மறுபுறம் கிடக்க, இருவர் தம்பியரையுடையனேனும் அவருள் ஒருவனு வது உடனிறக்கப் பெறுதவனாய்த் தமையன் மாண்டு கிடப்பது காணவோ நான் உயிர்கொண்டு வாழ்வது? கற்றைவார் சடைக் கண்ணுதல் வாழ்வதோர் சிகர மால்வரை தோள் மிசைக் கொண்ட பேராற்றலான் என் தமையன்; தன் பகைவராய தேவர் சிரிக்க, தனக்கு முன்னர்த் தோற்றோடி அஞ்சி ஒளித்த கூற்றுவன் சூழலிலே துணைத்தம்பியரின்றி அவனைச் செல்லவும் விடுவனென்றோ என்னையும் கருதிவிட்டாய்?''

"வீடணா! இலங்கையரசும் வாழ்வும் எனக்குக் கிடைக் கும் என்றாய்; இந்தத் திருநகர்ச் செல்வத்தின்மேல் வைத்த ஆசையாலே, என் தமையனுயிர்கொண்ட பகைவனை வாழ்த்தி, அம்பிட்டுப் புண்கொண்ட மார்போடும் கும்பிட்டு வாழ்வெ னென்றோ கூறினாய்? ஒருநாளும் யான் அது செய்யமாட்டேன்.''

"அப்பா! என்னை நீ உள்ளவாறறிந்திலை போலுமால்! கூற் றையும் ஆடல்கொண்ட யானோ குரங்கையும் கும்பிட்டு வாழ் பவனாவேன்? நீ மெச்சிப் பேசும் அநுமனை, அங்கதனை, சுக்கி ரீவனை, நீலனை, சாம்பனை இராமலக்குமணரையெல்லாம் யான் சுட்டுப் பொசுக்கி நீறாக்கி ஊழிக்காலத்துக் கதிரெனத்திரியக் காண்பாய்! உயிர்க்கிறுதி விளைவது காட்டியோ என்னைக்கலக்க

முயலுகின்றாய்? வீடணா! யான் இச்சூலங்கொண்டு களத்துப் புகுங் காலை, ஆலங்கண்டு அஞ்சி யோடிய அமரர்போல் குரங்குகள் ஓடக் காண்பாய்; குரங்குகள் மட்டுமோ? நீலங்கொள் கடலோடாதோ? சலித்தியல் காற்றோடாதோ? சுடுநெருப் பவிந்தோடாதோ? உலகமே நிலைகுலைந்தோடுதல் செய்யாதோ? என் வரவு கண்டும் அவ்விராமலக்குமணர் என்னை அஞ்சாதே எதிர்ப்பரோ? அப்படி யான் எண்ணமாட்டேன். அவர் எதிர்குவரேல் அவ்விருவரையும் ஒழித்து, மற்றுள குரங்குகளையெல்லாம் போனகத்தொழில் முற்றிப் போதுவேன்; அல்லால் ஒருவரையேனும் உயிர்கொண்டு திரியவொட்டேன் என்றறி.''

''தம்பி வீடணா! காலதாமதம் செய்யாதே. என் சொல்லின்படி நடப்பாயாக. நீ உடனே சென்று அவரைச் சேர்ந்துகொள். யான் அங்குப் போதுவேன் என்ற எண்ணத்தை அடியோடு மறந்துவிடு. இன்னும் அது குறித்துச் சில கூறத் தலைப்படாதே. உன்னுடைய நியாயங்கள் என் செவிக்கேறா. அம்மானுடவரைக் கொன்று என் தமையனுக்குச் சீதை நலத்தை அடையச்செய்யாதொழியின் என தாண்மையென்னும்? புகழென்னும்? உடன்பிறப்பென்னும்? உண்டுவளர்ந்த பயன்தான் என்னும்? ஆதலாலே ஈண்டுத் தாமதியாது ஆண்டுச்செல்.''

இம்மொழிகளைக் கேட்ட வீடணன் ''இனி இவனைத் திருப்புமாறில்லை'' என்றெண்ணித் தொழுது விடைகொண்டு மீண்டான்; இராமனை யடைந்தான். ''சுவாமி! அறமும் நீதியும் உய்திறமுடையார்க்கே யன்றோ? ஏனையோர்க்கேது? எவ்வளவோ நியாயங்கள் கூறியும் அவன் மனந் திரும்பினானில்லை. குலமானம் சிறிதும் நீங்கப்பெற்றிலன்; மாளவே துணிந்துவிட்டான்'' என்றான்.

இராமன்: "வீடணா! உனக்கினிய தமையன் என்பதால் அவனைக்கொல்லவேண்டாது உன்னை அனுப்பினேன். அவனோ அதன் பயன் தெளிந்தானில்லை. வேறினிச் செய்வதென்? அவனைக் கொன்றொழிக்க வேண்டியதுதான். விதியை யார் தான் தீர்க்கவல்லார்?"

---

## 4. அகதிக்குத் தெய்வந்துணை

'வடவேங்கடந் தென்குமரியாயிடைத் தமிழ் கூறு நல்லுலக'மாகிய தமிழ் நாட்டிலே முடியுடை வேந்தர் மூவருள் ஒருவராகிய பாண்டியர்களாலே முறை கோடாது காக்கப்படுவது பாண்டி நாடாகும். அந்நாடு செந்தமிழ் முனிவராகிய அகத்தியமுனிவர் என்றும் உறையும் பொதிய மலையைத் தன்னகத்துடையது. நிலமகள் ஆடையாக உடுத்த கடல் ஒருவர்க்கும் பயன்படாத உவரியென்று கருதி, அதிற் சங்கமமாகாமல், வயல், குளம் என்பவற்றை நிரப்பி வளம் படுத்து, அறத்தை வளர்த்துத் தமிழருமையறிந்த வையைநதியும், தனக்குவமையாவது ஒன்றுமின்றித் தானே பிறவற்றிற்கு உவமிக்கப்படுந் தன்மையாற் பொருநை யென்று வழங்கப்படுவதாய் அலை கொழித்துச்செல்லும் அழகு வாய்ந்த தாம்பிரபன்னியாறும், அந்நாட்டை அலங்கரிக்கின்றன. அந்நாட்டுக் குறிஞ்சி நிலம் தக்கோலம், தீம்பூ, இலவங்கம், கர்ப்பூரம், சாதி யென்னும் ஐந்தனையும் உதவும்: முல்லை நிலம் அரக்கு, இருல், செந்தேன், மயிற்பீலி, நாவி யென்னும் ஐந்தனையும் தரும்: மருத நிலம் செந்நெல், சிறு பயறு, சேதாநறுநெய், கரும்பு, கதலி யென்னும் ஐந்தனையும் சுரக்கும்: நெய்தல் நிலம் ஓர்க்கோலை, சங்கம், பவழம், முத்து, உப்பு என்னும் ஐந்தனையும் வழங்கும்.

இவ்வுலகம் திருமாலாகவும், அதனுட்பட்ட பாண்டிநாடு அத் திருமாலின் நாபிகமலமாகவும், அந்நாட்டுப் பொதியமலை அக் கமலத்தின் பொகுட்டாகவும், அதில் வீற்றிருக்கும் அகத்திய முனிவர் அப்பொகுட்டில் வீற்றிருக்கும் பிரமதேவராகவும், அம்முனிவரருளிய முத்தமிழும் பிரமதேவர் திருவாய் மலர்ந் தருளிய வேதங்களாகவும் விளங்குகின்றன என்று கவிகள் புகழ்வதனால், அப்பாண்டி நாட்டின் சிறப்பு நன்கு புலப்படு கின்றதன்றோ?

இத்தகைய பாண்டி நாட்டிற்குத் தலைநகராயுள்ளது மதுரைமா நகரமாகும். நிலமடந்தை மார்பிற் கிடந்திமைக்கும் மணியாரம் பாண்டிநாடெனின், அம்மணியாரத்தின் நடுவில் விளங்கும் நாயகமணி அம்மதுரைமா நகரமேயாம். அந்நகரம் திருமகட்குச் செந்தாமரைக்கூடம்: நாமகட்கு வெண்டாமரை மாடம்: ஞானமகட்கு யோகபீடம்: நிலமகட்குத் திலகம். ஏனைய உறையூரிலும் வஞ்சியிலும் கோழி கூவிப் பொழுது புலரும்: அம்மதுரையிலே அந்தணர்கள் நான்கு வேதங்களையும் ஓதும் ஒலி மிக்கெழலால் நகரத்தார் துயிலுணர்வர். அங்கே பால் வேறுபட்ட நால்வேறு வகையினரும் தத்தமக்குரிய இடங் களிலே நெறிவழாது வாழ்ந்து வந்தனர். நகரின் ஒருசார் பாண் டியவரசர்க்கு வழி வழி வந்த இருக்கையாகிய அரண்மனை சுதன்மையோவெனக்கண்டோர் ஐயுற்று வியக்குமாறு திகழும். நகரத்தின் நடுவிலே விண்ணிழிவிமானத்தமர்ந்த சோமசுந்தரப் பெருமான்கோவில் மணிச்சுடர்விட்டுப் பொலிந்து தோன்றும். அந்நகரின் வளம் எங்கும் நாவுமாய் எங்கும் கண்ணுமாய் எங் கும் வியாபித்துள்ள அச்சோமசுந்தரப்பெருமான் கூறவும், அப் பெருமான் கண்டு அளக்கவும் கூடுமல்லது ஆயிரம் நாவுடைய

ஆதிசேடன் கூறவும் ஆயிரங் கண்ணுடைய இந்திரன் கண்டு அளவிடவும் முடியாது.

அந்த மதுரைமாநகரிலே ஒருகாலத்தில் சுந்தரேச பாத சேகர பாண்டியன் என்பவன், ஐம்பெருங்குழுவும் எண்பேரா யமும் தனக்கு உறுதிச் சுற்றமாகக்கொண்டு, தனது குலதெய் வமாகிய சோமசுந்தரப்பெருமான் திருவருளால் பாண்டிநாட் டைச் செங்கோல் ஒச்சி யாண்டுவந்தான். அந்நாளில் அந்நக ரிலே வணிகரிற் சிறந்தோனாகிய தனபதி என்பானொருவன் இருந்தான். அவன் செல்வத்தில் அளகேசனெனத்தக்கான். அவனது இல்லறக்கிழத்தி சுசீலை யென்பவள். அவள் அழகிலே திருமகளை ஒப்பாள். இவ்விருவரும் அந்தணர் ஓம்பலும் அற வோர்க்களித்தலும் விருந்தெதிர் கோடலும் முதலாகிய கடமை களிலே சிறிதும் வழுவாது இல்லறத்தை நடத்திவந்தனர்.

பலவகைச் செல்வத்தையும் பெற்றுப் பலரோடு கூட வுண்ணும் மிக்க செல்வத்தையுடையோராயினும், ஒருவர், தாம் உண்ணுங்காலத்துக் குறுகக்குறுக நடந்து சென்று சிறிய கையை நீட்டி, உண்கலத்திலேயுள்ள சோற்றைத் தரையிலே இட்டும், கூடப் பிசைந்து தோண்டியும், வாயிற் கௌவியும், கையால் அளைந்தும், உடம்பிலே சிதறியும், அறிவை இன்பத் தால் மயக்கும் புதல்வரை யிலராயின், அவரது வாழ்நாளிலே பயன் யாதுமில்லை. தெய்வப்புலமைத் திருவள்ளுவநாயனாரும், தம்மக்கள் சிறுகையால் அளைந்த உணவு அமிர்தத்தினும் ஆற்ற இனிது என்றும், மனைமாட்சிக்கு நன்மக்கட்பேறு நன்கலம் என்றும் கூறியருளினார். தென்புலவாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும் பொன்போற் புதல்வரைப் பெறுதவர் இல்வாழ்க்கை யின் இன்பம் அறியார்.

தனபதியும் இவ்விதக் குறையுடையனாய் வருந்தினான். அவன் தனது குறையை நீக்க நினைந்து தன் தங்கை மகனைத் தத்தபுத்திரனாகக்கொண்டு மிக்க மகிழ்ச்சியோடு தன் மனைவியிடங் கொடுக்க, அவளும் தொழுது வாங்கி, அத் தத்தபுத்திரனுக்குப்பூண்கள்முதலியன அணிந்து சீராட்டிவளர்த்து வருவாளாயினள். இங்ஙனம் நிகழும் நாளில், சுசீலைக்கும் அவளுடைய நாத்தூணுக்கும் மனவேற்றுமையுண்டாயிற்று; தனபதி, புத்திரனைத் தத்தாகக்கொடுத்த தங்கையோடு நாடோறும் தீராத பூசல் விளைத்து வருவாளாயினள்; அதனாலே மனநொந்த தங்கை, ஒருநாள், தனபதியை நோக்கி, "உனக்குப் பெருமிதம் ஏன்? நீ பிள்ளைப்பேறில்லாத பாவி. என்னுடைய அருமை மகனாலன்றோ நீ இம்மையின் நன்மையையும் மறுமையின் பயனையும் அடைவாய்" என்று வெகுண்டு கூறினாள். தனபதியின் செவியில் இச்சொற்கள் பழுக்கக் காய்ச்சிய இருப்பு நாராசம்போற் பாய்ந்தன. அவன் பெரிதும் நாணமடைந்து, "இப்பிறப்பில் நமக்குப் பிள்ளைப்பேறில்லையாயினும், இனி வரும் பிறப்பிலேனும் புத்திர பாக்கியத்தைத்தரும் தவத்தைச் செய்வோம்" என்று நிச்சயித்துத் தனது செல்வம் அனைத்தையும் தத்தபுத்திரனாகிய மருமகனுக்கு உரிமையாக்கிவிட்டுத் தனது மனைவியுடன் தவம்புரியச் சென்றான். சென்றவன் நெடுநாளாகியும் மீண்டிலன்.

இஃதிவ்வாறாகத் தனபதியின் ஞாதிகள் ஒருங்கு கூடித் தனபதி தன் தத்தபுத்திரனுக்குக் கொடுத்த வீடு, நன்செய், புன்செய், அணிகலம் முதலிய அனைத்தையும் வல்வழக்குப் பேசி வௌவிக்கொண்டார்கள். இங்ஙனம் தாயத்தார் கவர்தலும் தனபதியின் தங்கையும் மகனும் சிறையிழந்த பறவைபோல வருந்தினார்கள்.

தனபதியின் தங்கை, "நிர்க்கதியாய் இருக்கின்றவர்க்கு ஒப்பற்ற புகலிடமாய் இருக்கும் மதுரை நாயகனே எமக்குத் தஞ்சம்" என்று துணிந்து, இரவிலே ஆலயத்திற்குச் சென்று, பொற்றாமரைத் தீர்த்தத்திலே நீராடிப் புனித ஆடையுடுத்து, திருநீறணிந்து, சோமசுந்தரப்பெருமானிடம் நீங்காத அன்பு தாங்கி, ஸ்ரீபஞ்சாக்கரத்தை மகிழ்வுடன் உச்சரித்துக்கொண்டு, இந்திரவிமானக்கோவிலிலே எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக்கடவுள் திருமுன் சென்று, வணங்கி, "உலகுக்கெல்லாம் அம்மையப்பராய் இருக்கும் சுவாமீ! தேவரீரே எங்கட்கும் அம்மையப்பராய் இருக்கின்றீர். என் தமையன் தனக்குப் புத்திரப்பேறின்மையால், என் மகனைப் பலருங்காணப் புத்திரனாகக்கொண்டு அன்றே வீடு, விளைநிலம், பசுக்கள், முதலியவெல்லாம் அவனுக்கு நல்கித் தவத்தின்மேற் சென்றான். இப்பொழுது அவற்றையெல்லாம் தாயத்தார்கள் தங்கள் வலிமையாற் கவர்ந்துகொண்டார்கள். நான் ஒருத்தி: ஒருத்திக்கு இந்த ஒருமகன்: இவனும் நன்மை தீமைகளை ஆராயும் கருத்திலாச் சிறியன்: வேறு துணையாவாரையும் காண்கிலேன்: ஐயா! அருட்பெருங் கடலே! சர்வ வியாபகராயுள்ள நீர் இதை யறியீரோ" என்று விண்ணப்பஞ்செய்து பூமியிலே விழுந்தாள்.

அப்பொழுது சோமசுந்தரக்கடவுள் திருவருளினாலே அவள் சிறிது கண்ணுறக்கங்கொண்டாள். சிவபெருமான் அவளது கனவிலே பிராமண வடிவத்துடன் தோன்றிப் "பெண்ணே! நீ பொழுது புலர்ந்ததும் தாயத்தாரை அரசன் மீது ஆணையிட்டுத் தர்மாசனத்திற்கு இட்டுக்கொண்டு வந்து மறித்திரு; யாம் அத்தர்மாசனத்திலே வந்து அங்கு வீற்றிருக்கும் அறிவிற் சிறந்தோர் இசையுமாறு உனது வழக்கினைத்

தீர்த்துத் தருவோம்; நீ உன் வீட்டுக்குச்செல்'' என்றருளிச் செய்து மறைந்தருளினார். உடனே தனபதியின் தங்கை, துக்கத்தினின்றும் விழித்து, வியப்படைந்து, "அகதிக்குத் தெய்வந்துணை என்பதனை நான் இன்று அனுபவத்திற் கண்டேன்'' என்று அங்கயற்கண்ணியையும், அவள் மணாளனையும் தொழுது வாழ்த்தித் தன்னுடைய குமாரனையும் அழைத்துக் கொண்டு வீடு சென்றாள்.

அங்ஙனம் சென்றவள் வைகறையிலே துயிலுணர்ந்து, ஆலய வாயிலை அணைந்து வழிபட்டு, சோமசுந்தரப்பெருமான் முன்னிரவிலே அருளிச்செய்த வண்ணம் ஞாதிகள் இல்லங்களிற் சென்று, பலரும் கேட்கும்படி, "அடுக்களையிலே தீ மூட்டக்கூடாது; ஓரடியும் எடுத்து வைக்கக்கூடாது; பொய் வழக்கால் செயித்துப்போக நான் இடங்கொடேன்; யாவரும் அறியுமாறு அரசன் மீது ஆணையிட்டேன்; நீங்கள் எல்லீரும் தர்மாசனத்துக்கு வாருங்கள்; அங்கே வந்து ஆன்றோர் தீர்ப்பினைக்கேட்டு எங்களுக்குச் சேரவேண்டிய பொருளைத்தந்து போங்கள்'' என்று கூறித் தாயத்தார்களை மறித்தாள். தாயத்தார்கள் அவள் அவ்வாறு கூறியது பொறுக்கலாற்றாது, இழி சொற்கூறி, அவளை வைது, தள்ளி, அடித்தார்கள். அவள், தன் மகனோடும், "ஐயோ! இதுதான் முறையோ?'' என்று அழுது புலம்பிக்கொண்டு, தர்மாசனத்துக்குச் சென்று, தனது வழக்கை எடுத்துரைத்தாள். நீதிநூல்வல்ல பெரியோரும் அவளது வழக்கைக் கேட்டறிந்ததும், ஏவலாளரை அவளுடன் விடுப்ப, அவள் ஏவலரோடு சென்று ஞாதிகளை மறித்துத் தர்மாசனத்திற்குக் கூட்டி வந்தாள்.

அவ்வளவிலே, அறக்கொடி பாகராகிய சோமசுந்தரப் பெருமான் தாமும் தனபதியே என்னத் திருவுருக்கொண்டு,

திருச்செவியிலே யணிந்த மிக்க விலையுயர்ந்த குண்டலம் பிடரிலே பத்திபாய்ந்து ஒளி வீசவும், அங்கதம் என்னும் அணி தோளிலே கிடந்து இமைப்பவும், திருமார்பிலே ரத்ந கண்டிகை பிரகாசித்துப் பின்புறம் வளைந்து கிடப்பவும், வண்டு புறவிதழிலே மொய்க்கச் சிறிதலர்ந்த செந்தாமரை போல நீல மோதிரமணிந்த திருக்கரத்தை வீசிக் கடுங்கண் ஏறுபோலப் பெருமித நடை நடந்து, வாடிய தாமரை போன்று வாதிட்ட ஞாதிகளிடத்து ஊடியும், மலர்ந்த தாமரை போன்று தத்தபுத் திரன் மீது அன்பு நயந்தும், உட்கிடை கூடிய திருமுகத்தின ராய், "இங்கே அரசன் இல்லையோ? அறிவால் அமைந்த பெரி யோர்கள் இல்லையோ? அரசனது செங்கோல் வளைந்து விட்டதோ? வேதாகமங்கள் அறுதியிட்டுச் சொல்லும் தெய்வந் தானும் இல்லையோ? உயிர்கட்கு உறுதியாய் விளங்கும் தரும மும் யாண்டு ஒளித்ததோ?'' என்று சொல்லிக்கொண்டே தர்மாசனத்தைச் சார்ந்தார். தனபதி வரவு நோக்கித் தாயத் தார்கள் துன்புறும் மனத்தராகி, ஆச்சரியமடைந்து, வழக்கில் வெல்லும் மனவலியிழந்து, முன்பு அநீதியாக வென்ற வினையை நினைந்து, அச்சத்தாலும் வெட்கத்தாலும் விழுங்கப்பட்டனர். மாமனாக எழுந்தருளிய சோமசுந்தரப்பெருமான், மருகனையும் தங்கையையும் தழுவிக்கொண்டு, தமது கண்டத்தின் நீங்காத சாமவேதத்தைப் பாடுவார் போல வாய்விட்டு, "ஐயோ! நீங்கள் ஆதுலரானீர்களே'' என்று அழுது வருந்தினார். தங்கையும் குமரனும் வணிகர் பாதங்களில் வீழ்ந்தழுதார்கள்.

தனபதி வடிவங்கொண்ட சோமசுந்தரப்பெருமான், தாமும், அவர்கள் துன்பத்திற்கு இரங்கி யழுது, புதல்வனைப் பார்த்து, "ஐம்படையை மார்பிலே காணேன்; சிறு சிலம்பை

அடியிலே காணேன்; மதாணியை பொய்ம்பிடையே காணேன்; சுட்டியை முகத்திலே அசையக் காண்கிலேன்; மின்படு குழைகளைச் செவியிலே தூங்கக்காணேன்; வெற்றுடலே கண்டேன்; அப்பா! என் பெறும் என்று பிள்ளைப்பணிகளும் கவர்ந்தார்?'' என்று சொல்லிக் கண்டோர் அனைவரும் இரங்குமாறு வாய்விட்டரற்றித் தங்கையையும், தநயனையும் கண்ணீர் மாற்றிக் கையால் முதுகைத் தடவிக்கொடுத்து, "நீங்கள் வருந்தாதீர்கள்; என் முன் வேறு ஒன்றும் எண்ணுதீர்கள்; ஞாதியர் வல்வழக்குச் சோர்ந்துவிடுவதை நீங்கள் உங்கள் கண்ணூரக் காணுவீர்கள்'' என்று தேற்றினர். பின்னும், "நமது பொருள் பிறர் பிறர் பொருள்போல நட்பினரை வஞ்சம் செய்தும், நம்பினவரைக் கெடுத்தும், இரவலர்க்கு இம்மியும் உதாவதும், கடுவட்டி வாங்கியும் சம்பாதிக்கப்பட்டதோ? இல்லை. அறவழியிலே ஈட்டப்பட்ட நமது பொருள் அநியாயமாய்க் கெடுமோ?'' என்று கூறிச் சோமசுந்தரப்பெருமான் எழுந்தருளியிருக்கும் ஆலயத்திசையை நோக்கிச் சிரசின்மேற் கைகூப்பி வணங்கி, "மாணிக்கந்தேற்றி விற்கும் எங்குல வணிகரேறே! எங்கள் வழக்கையும் இந்தப் பெரியோர் வாயிலாகத் தீர்த்தருளவேண்டும்'' என்று புலம்பி ஆர்த்தார். பின்பு ஞாதிகளை வெகுண்டு நோக்கிவிட்டுத் தர்மாசனத்துப் பெரியோரைப்பார்த்து, "அரசனது செங்கோலிலே, நுண்ணிய நூல்கொண்டு கட்டப்பட்ட தருமமாகிய தட்டிலே, உங்கள் நாவாகிய துலைநாவையிட்டு, எங்கள் வழக்கையும் எங்கள் ஞாதிகள் வழக்கையும் சீர்தூக்கிப்பார்த்து நீதிசெலுத்துங்கள்'' என்று சொல்லியருளினர்.

இவ்வாறு சொல்லிய சொற்கேட்டலும், தர்மாசனத்துச் சான்றோர் நடுங்கி, உபயவாதிகள் சொல்லும் வழக்கினையும்

ஏற்றுக்கொண்டு, அநுவதித்து, இரண்டு கக்ஷிகளையும் சீர்தூக்கிப்பார்த்த காலத்தில் "ஞாதிகள் வழக்கு இழுக்குடைத்து" என்று தீர்ப்புச்சொல்ல, அதுகேட்ட தாயத்தார்கள் அச்சங் கொண்டார்கள்; ஆயினும் வலியர் போன்று, "தனபதிச்செட்டியார் இவரல்லர்'' என்றார்கள். அதுகேட்ட வணிகர் கோமனாகிய எம்பெருமான், இரண்டு கைகளையும் புடைத்துச் சிரித்து, அத் தாயத்தாரது குடிப்பெயர், பட்டம், காணி என்பவைகளையும், அவர்களுடைய தந்தை, தாய், மாமன், மாமி, தாயத்தார், அவரை யீன்றார், அவர்களது மைந்தர்கள், உடன்பிறந்தார், மனைவியர், கிளைஞர் என்றின்னோர் பெயர்களையும், மற்றும் அவர்களது குணவிசேடம் செய்கை முதலிய அடையாளங்களையும் சிறிதும் வழுவாதபடி முறைப்படச் சொல்லியருளினார். சர்வக்ஞரான எம்பெருமானுக்கு இத்தாயத்தாரது குலங் கோத்திராதிகளைச் சொல்லுவதும் ஓர் அரிய செயலாம் போலும்? இவ்வுரைகளைக்கேட்ட தர்மாசனத்தார் அனைவரும் ஏகமனதாய், "இவர் தனபதிச்செட்டியாரே; உங்கள் வழக்கு வல்வழக்கே" என்று முடிபு கூறினார்கள். மனவலியுடையார் போன்று தாயத்தார்கள் செய்த பொய் வழக்குத் தோல்வி யடைந்தது. மெய்யினைப் பொய்மைதான் வெல்லவல்லதோ?

உடனே ஞாதிகள், "இவ்வாறு நாம் பொய்வழக்குச் செய்ததை வேப்பந்தார் அணிந்த மாறன் அறிந்தானாயின் நம்மைத் தண்டிப்பான்'' என்றஞ்சி, "யான் வீட்டுக்குச்சென்று மீண்டு வருவேன்'' என்றும், "குளத்திற்குச்சென்று விரைய வருவேன்'' என்றும், பலவாறாக ஒவ்வொரு வார்த்தையைச் சொல்லிவிட்டு, காற்று வீசிய காலத்துக் கலைந்தோடும் மேகக் கூட்டம் போலச் சிதைந்து ஒளித்துப்போனார்கள். இவ்வாறு

தாயத்தாரனைவரும் போய்விடவும், தர்மாசனத்திலுள்ள பெரியோர், தனபதிச்செட்டியார் முன் வாய்மொழியாகத்தந்த செல்வங்கள் அனைத்தும் தத்தபுத்திரனுக்கே யென்று தனபதிச்செட்டியாரிடமிருந்து சாசனம் வாங்கித் தனபதி தங்கைபால் ஈந்தார்கள்; ஈந்ததும், 'வாக்கு மனங்கழியநின்ற' வணிகேசராகிய சோமசுந்தரப்பெருமான் மறைந்து தமது ஆலயத்திற்கு எழுந்தருளினார்.

இந்நிகழ்ச்சிகளைக்கேட்டு, சுந்தரேச பாதசேகர பாண்டியன், "இவ்வாறு இம்மெனப் பலருங்காண மறைந்தவர் எங்கள் குலதெய்வமாகிய சோமசுந்தரக்கடவுளே" என்று தேறி, விம்மிதமடைந்து, வணிகச் சிறுவனை அழைத்து வரச்செய்து, அவன் மனமகிழுமாறு வரிசைகள் 'போதும்! போதும்!' என்று சொல்லுமாறு நல்கிச் சோமசுந்தரப் பெருமானது திருக்கோயிலையும் பொன் கொண்டு புதுக்கினான்.

---

## 5. ஓவியர் திலகம்

தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று. —**திருக்குறள்**

"காதவழி பெயரில்லான் கழுதை" என்பது பழமொழி. பூதவுடம்பிற் புகழுடம்பே சிறப்புடையது. சில வாழ்நாட் பல்பிணிக்கொள்கலமாகிய இவ்வென்புடையாக்கை விரைவில் அழியும் பான்மைத்து. எல்லையில் காலம் எழிலுடன் இலங்கும் புகழ்யாக்கை என்றும் அழியாமேன்மைத்து. முயற்சியுடைய மக்கள் யாவரும் ஊனுடம்பை வளர்த்தலினும் புகழுடம்பை வளர்த்தலிலேயே கண்ணுங் கருத்துமாயிருப்பர்.

உலகிலே புகழ்பெற வாழ இயலாதான், விலங்கினுங் கடைப் பட்டோனவன். அன்னான் உலகிற்றோன்றுதலினும் தோன்றா திருத்தலே சால்புடைத்தென்பர் ஆன்றோர். புகழுற வாழ்க்கை நடாத்துபவர், உயர்ந்த குணங்களினுறைவிடமாகவும், ஒழுக் கத்தின் பேழையாகவும், அறிவின் களஞ்சியமாகவும், ஊக்கத் தின் ஊற்றாகவும், முயற்சியின் ஆணிவேராகவும் திகழ்வர். உலகத்தில் வழங்கும் பல்திறப்பட்ட கலைத்துறைகளிலே, இயற்கையாகத் தமக்கு எத்துறையில் மிகுந்த விருப்பமுண் டாகின்றதோ, அத்துறையிலே நுழைந்து ஊக்கமும் உண்மை யுங்கொண்டு உழைத்துக் கைதேர்ந்து, அக்கலையிலே தன்னின் ஒப்பாரும் மிக்காரு மிலரெனப் பெயர் பெற்று, உலகிலே பலரும் அந்தக் கலையினை விரும்புமாறு பரவச்செய்து அதனைப் பல்லாற்றானும் வளர்ப்பதே "புகழ்" பெற வாழும் வழியாகும்.

பண்டைக்காலத்திலே யிருந்து பாரததேசம், பலவகைக் கலைஞானங்களிலே சிறந்து மேன்மையுற்று விளங்குகின்றது. நனிநாகரிகம் படைத்துத் தற்பொழுது சீரும் சிறப்புமுற்றுத் திகழும் பன்னரும் பெருமை உன்னருங் கீர்த்தியுடைய உயர் மாந்தரும் மேனாட்டவர் அஞ்ஞான இருளிற் பொதிந்து அறி வொளி தோன்றப்பெறாமல் தயங்கிய பல்லாயிரவாண்டுகட்கு முன்னரே இந்தியத்தாய், சகல கலாவல்லுநராகிய மக்களை யீன்று, வீறுடன் விளங்கினாள். இத்தகைய நம் தாய் நாடு, காலந்தோறுங் கலைத்திறமிக்காரைத் தோற்றுவிப்பதில் தவறுவ தில்லை. மாந்தர் மனத்தைக் கவருஞ் சக்தி வாய்ந்தது ஓவியம், சித்தத்தைத்தெள்ளத் தெளியக்காட்டுவது சித்திரமே. கலைகள் பலவற்றுள்ளும், ஓவியக்கலை சிறந்ததொன்றாகும். இவ்வோவி யத்துறையிலே பயிலுவோர் ஆழ்ந்த அறிவோடு இயற்கையை

உற்று நோக்கும் ஆற்றலும், நுனித்துணர் திறனும் பெற்றிலங்குவர். இத்தன்மையராய்ப் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலே, நம்நாட்டில் தலைசிறந்து விளங்கிய ஓவியத்துறை கைபோய உத்தமப் பெரியாரொருவரது வாழ்க்கையைப்பற்றிக் கூறுவாம்:

"முத்தமிழ்நாடு" என உத்தமராற் புகழ்ந்து பேசப்பட்ட தென்னாட்டிற் சீருந்திருவும் பொலியத் தழைத்தோங்கி வளர்வது "திருவநந்தபுரம்" என்னும் திருநகரம். "இது பண்டைச் சேரர் நாட்டின் பகுதி" யென்பர் சரித்திரவல்லுநர். "அநந்த சயனம்" என்று போற்றப்படும் அறவாழி நெடியோன் அமர் பெருங் கோயிலைத் தன்னகத்துடைய பொன்னகராகிய இந்நன்னகரை, மன்னகராகக்கொண்டு, திருவுடைமன்னராகிய திருவநந்தபுர மாவேந்தர் திருவாங்கூர் நாட்டைச் செங்கோல் செலுத்தி யாண்டுவருகின்றனர். இத்திருவாங்கூர் நாட்டின் வளப்பம் சொல்லுந் தரத்ததன்று. தெங்கும், கமுகும், கதலியும், பலாவும் செழித்து வளரும் பெருமை, சிறப்பாக அமையப்பெற்றது இந்நாடு. வானமளாவிய மாமலைகளுக்கும் நீலத்திரைக் கருங்கடலுக்கும் இடையே அமையப்பெற்றிருப்பதால் மலைபடு பொருள்களின் தொகுதியும், கடல்படு பொருள்களின் வகைகளும் நாடெங்கும் மலை மலையாகக் குவிந்து கிடக்கும் காட்சி கண்கொளாக் காட்சியாகும். அரசர், திருமாலுக்கன்பு பூண்டொழுகும் விரதசீலர்; ஆகையால், குடிகளெல்லாம் இறைவழி பாட்டில் இறையும் வழுவாதவராவர். திருமகளும், கலைவாணியும் இங்குத்தான் ஒற்றுமையுடன் வாழ்கின்றனரென்று கூறுமாறு இந்நாடு கல்விப்பொருளுக்கு ஓருருணியாகவும், செல்வப்பொருளுக்கு ஓர் சேமவைப்பாகவும் திகழாநிற்கும்.

சீர்பெருகும் இத்திருநாட்டிலே, "கிளிமானூர்" என்றொரு பெரிய கிராமமுண்டு. இப்பேர் பெருகும் பேரூரில், திருவநந்தபுர மாவேந்தர்க்கு வழி வழி யுறவினராய் வழங்கி வரும் அரசர் பெருங்குடியிலே, நம் தாய்நாட்டின் தவப்பயனென்னத்தக்க சற்புத்திரரொருவர் கி. பி. 1848-ம்ஆ ஏப்பிரல் மாதம் 29-ம் திகதியிலே தோன்றினர். "உலகமெலாம் ஒளிபெறத்திகழ்வர்" என்ற குறிப்பை நன்குணர்ந்தாற்போல, அவர்தம் பெற்றோர் அவர்க்கு "இரவிவர்மர்" என்னும் எழிற் றிருப்பெயரைச்சூட்டி மகிழ்ந்தனர். "இரவிவர்மரது" முன்னோர்களும் பிரக்யாதி பெற்றோர்களே யாவர். அவர்கள் ஓர் காலத்திலே திருவநந்தை மாவேந்தர்க்குப் படைத்துணை புரிந்தமைக்காகக் "கிளிமானூர்" முற்றூட்டாக அவர்கட்கு அளிக்கப்பட்டிருந்தது. இரவிவர்மருக்குப்பின் தோன்றல்களாக, மூவர் ஆடவரும், பெண்மகள் ஒருத்தியும் உண்டு. இப்பிள்ளைகளுள், இவர்பால் இளமையிலேயே இயற்கையாக ஓவியத்துறையிற் பழகுதற்குரிய நுண்ணுணர்ச்சி அமைந்திருந்தது.

இரவிவர்மருக்கு அன்னையார், "உமாபாய்" என்னும் அம்மையாராவர். இப்பெண்மணி கல்வி கற்ற காரிகை; நாகரீகம் வாய்ந்த நங்கை; பாக்கள் புனையும் பாவன்மையும் படைத்தவர். இவ்வரிவையாரியற்றிய அருமையான பாடல்கள், அக்காலத்திலேயே பாமரமக்களாலும் அன்போடு படிக்கப்பட்டன. ஆங்கில பாஷை, இக்காலத்திலே நாடெங்கும் பரவியிருப்பதைப்போலப் பரவப்பெருத அக்காலத்தில் ஆங்கிலத்தை விரும்பிக் கற்பார் யார்? ஆதலால் இரவிவர்மர், இளமை வயதிலே தம் குலபோதகராகிய வடமொழிவாணரொருவர்பால், கல்வி கற்றுக்கொள்ளலாயினர். சில வருஷங்களிலே, இவர்

வடமொழியில் பல நாடக, இதிகாச, காவியங்களைக் கற்றுத் தேர்ச்சியுற்றார். இவ்வாறு இவர் இலக்கிய இலக்கணப் புலமையை யடைவதினும், தாம் கற்ற கதாபாத்திரங்களாகிய அரசர், கடவுளர், மனிதர்களின் உருவங்களை யூகத்திறைற் கண்டவாறே எழுதி எழுதிப் பழகுதலைச் சிறந்ததாக மதித் தார். அவர் சீமைச்சுண்ணாம்பினாலும், கரித்துண்டுகளினாலும் பழைமையான தம் மாளிகையின் அழகிய புறச்சுவர்களிலும், தரைகளிலும் வரைந்து வரைந்து பொழுதுபோக்கி வந்தார். வெளிக்கண்கொண்டு பார்ப்பவர்க்கு, இவரது செய்கை, சிறு பிள்ளைத்தனமாகவும், இழிவாகவுமே தோற்றிற்று. அவர்கள் இவரை எள்ளி நகையாடினர். ஆனால் இரவிவர்மர் இவைகளை யெல்லாம் பொருட்படுத்தவில்லை. நாளடைவில், அவரிடம் இவ்வோவியக்கலையுணர்ச்சி முறுக்கேறி வலிபெறத் தொடங் கிற்று. இரவிவர்மரது அறிவின் நுணுக்கத்தையும், உற்சாக மான ஊக்கத்தையும் உள்ளவாறே உணர்ந்து அவரைப் பாராட்டி வந்தவரொருவர் அவர் குடும்பத்திலே யிருந்தார். அவர், இவர்க்குத் தாய் மாமனார்; எடுத்த காரியத்தைத் தொடுத்து முடிக்கும் ஆற்றலும், நுட்பமான புத்தியும் படைத் தவராகிய அவர், "இராஜராஜவர்மர்" என்னும் பெயரினர்; சித்திரத்தொழிலும் சிறிது கைவரப்பெற்றவர். இயற்கைக் காட்சிகளில் மனத்தைச் செலுத்தி மகிழ்வுறும் இவர், பொழுது போக்காக ஓவியத்தொழிலைப் பழகிவந்தார். இராஜ ராஜவர்மர், இரவிவர்மருக்கு இயற்கையாக அமைந்துள்ள அரிய இவ்வாற்றலைக்கண்டு மகிழ்மீக்கூர்ந்து, வேண்டும் உதவி களைச்செய்து கொடுத்ததுமன்றி ஊக்கத்தையும் உற்சாகத்தை யும் ஊட்டி வந்தார்.

இராஜராஜவர்மர், நீரிற் கரைத்துப் பூசும் சில வர்ண முறைகளைத் தம் மருகனுருக்குக் கற்பித்தார். மேனாட்டிலே, ஓவியக்காரராற் சாதாரணமாகக் கையாளப்பட்டுவரும் வர்ணப் பொருள்களும் துகிலிகைகளும், இந்நாட்டில் அந்நாட்களிற் கிடைப்பது அபூர்வமாயிருந்தது. அத்தகைய அபூர்வமான பொருள்களைப்பற்றித் தெற்குக்கோடியிலே வாழும் இவர்கள் காதுக்கெட்டுவதும் அரிதாயிருந்தது. ஆனால் இராஜராஜவர்மர் சொந்தமாகவே வர்ணங்களையும், துகிலிகைகளையும் தயாரித்து வந்தார். இவர், தம் வாழ்க்கையின் பிற்பகுதி முழுமையும், இவைகளைத் தயாரித்தலிலேயே கழித்தமையால் பல புதிய முறைகளையும் கண்டுபிடிப்பதில் வெற்றியடைந்தாராயினும், இவரைப் பின்பற்றி வழிவழியே பழகுதற்கு யாரும் முன் வர வில்லை. மேனாட்டுப் பொருள்கள் அபரிமிதமாக வந்துவிட்ட மையே, இவ்வீழ்ச்சிக்குக் காரணம்.

காலஞ் செல்லச்செல்ல, இரவிவர்மருக்கு இயற்கையா யெழுந்த ஓவியக்கலை விருப்பம், பிறைமதிபோற் செழித்து வளர்வதாயிற்று. சித்திரம் எழுதுதற்குபயோகமாகும் மேனாட் டுக்கருவிகளும், இந்தியாவின் பிரதான நகரங்களிற் கிடைக்க லாயின. அவரது பதின்மூன்ருவது வயதிலே, அவர் தம் தாய் மாமனோடு திருவனந்தபுரஞ் சென்ருர். தாம் எழுதியவற்றுட் சில அழகிய படங்களைத் திருவனந்தை மாவேந்தர்க்குக் காண் பித்தார். அந்நாட்களிற் சித்திரத்தொழில் மிக இழிவான செய லாகக் கருதப்பட்டது. செல்வர்கள், சித்திரகாரிகளை யொரு பொருளாகக் கருதுவதில்லை. ஆயினும் கலையுணர் புலவர் திலக ராகிய அம்மன்னர் அவ்வாறெண்ணவில்லை. சித்திரமும் சிறந்த தொருகலையே என மதித்துவந்தார். அப்பேரரசர் மிக்க அறிவு

யடைத்தவர். நீதி யரசுபுரியும் நேர்மையாளர். அவர் காலத்தில் திருவாங்கூர், புகழ்பெற்றிலங்கிற்று. மாவேந்தர், மைந்தரது சித்திரத்திறமையையும், பணிவுமிக்க ஒழுக்கத்தையும் மெச்சி, "இவன், பிற்காலத்தில் பெரிது முன்னேற்றமடைந்து கியாதியுடன் வாழ்வா" னென ஆசிகூறினர்; "விளையும் பயிர் முளையிலே தெரியு" மன்றோ? இரவிவர்மருக்கு வேண்டுமுதவிகளைத் தாமே செய்வதாக ஒப்புக்கொண்டார். பதினெட்டாவது வயதிலே திருவநந்தபுர மகாராணியாரின் இளைய சகோதரியாரை, இரவிவர்மர் மணஞ் செய்துகொண்டார்.

திருவாங்கூர் அரசாங்கத்திற் பெண்மக்கட்கு மிகுந்த உரிமைகள் வழங்கப்படும். ஆங்குப் பெண்வழித் தோன்றும் மைந்தர்க்கே சொத்துரிமை யுண்டென்பது உலகப்பிரசித்தம். அரசருக்குப்பிறந்த மைந்தன் அரசாளும் உரிமையாளனல்லன். அரசர்க்குடன்பிறந்தோராகிய பெண்மக்கட்கும், அவர் வழிக் குருசிலர்க்குமே அரசுரிமையுண்டு. இரவிவர்மருக்குத் தாய் மாமனாராகிய ஒருவரும், பாட்டனாரொருவரும் அரசர்களைப் பெற்ற தந்தையராக விளங்கினர். இன்னும் திருவாங்கூர் அரசகுடும்பத்திலே பலவித முறைகளில் நேரிய பிணைப்புடைய சீரியராவர் இரவிவர்மர். ஆதலால் இரவிவர்மருக்கு அரசாங்கத்திலே எவ்வளவு செல்வாக்குண்டென்பது சொல்லாமலே

1868-ம் வருஷத்தில் திருவநந்தை வேந்தர், "தோடர் ஜென்ஸன்" என்னும் ஆங்கிலேயச் சித்திரகாரியைத் தம் அரண்மனைக்கு வரவழைத்தார். தமது திருவுருவத்தையும், தம் முன்னோரிற் சிலரது திருவுருவங்களையும் எழுதித்தருமாறு அவ்வாங்கிலேயற்குக் கூறினார். அவ்வாங்கிலேயனது வருகை,

இரவிவர்மரது வாழ்க்கைக்கு அநுகூலமானதொரு புதிய மாறுதலை யுண்டுபண்ணிற்று. அவ்வோவியன் பெருஞ்சினத்தைக் கருந்தனமாக்கொண்டவன். தான் தொழில்புரிசாலையில் எவரையும் நுழையவிடமாட்டான். ஆயினும் அரசர்பிரானது அன்பு ததும்பிய வேண்டுகோட்கிணங்கி, இரவிவர்மரை மாத்திரம் அநுமதித்தான். இரவிவர்மர் நுண்ணிய அறிவு படைத்த திண்ணியரன்றோ? அவர்க்கெவ்வளவு வேண்டும்! தொலைவிலிருந்தே அவன் வேலை செய்யும் முறைகளைக் கவனித்து வந்தார். மேனாட்டார், சித்திரமெழுதுவதிலே கையாளும் பல நவீன முறைகளையெல்லாம் தெரிந்து உணர்ந்தார். அறிவாளிகட்கு, ஆசிரியனொருவன் அருகிருந்து இடித்திடித்துப் புகட்ட வேண்டியதுண்டோ? சிலையிலே ஆசிரியனையமைத்துக் கலையாளனாகத்திகழ்ந்த கானவர் குருசிலின் கதை நாம் அறியாததன்றே! ஆங்கிலேயச் சித்திரகாரி எண்ணெய் கலந்த நவநவமான வர்ணங்களை யுபயோகிப்பதைப் பார்த்தவுடனே, வியப்படைந்து, அந்த விதமான வர்ணப்பொருள்களை வரவழைத்துத் தான்றோன்றியாகவே தமக்குத்தெரிந்தவாறு கலந்து, பழகி வரலானார். ஆனால், எவ்வளவு உண்மையான உழைப்பிருந்தபோதிலும், "சுட்டிக்காட்டாத கல்வி, சொட்டுப் போட்டாலும் வாராது" என்றவாறு, வர்ணங்களை யொன்றோடொன்று சேர்ப்பதிலும், அவைகளைக் கையாளுவதிலும் ஐயப்பாடுகள் தோன்றிக் கொண்டேயிருந்தன. என்றாலும் எவற்றையும் பொருட்படுத்தாமதால் உழைத்து வந்தார்.

திருவாங்கூர் நாட்டில் அரசனால் வரிசைபெற்ற பிரபல சித்திரகாரி யொருவனிருந்தான். அவன் மதுரைமாநகரிற் பிறந்தவன். அவன் பெயர், இராமசாமி நாயக்கன். இவனை,

இரவிவர்மர் அடுத்துப் பலதடவைகள் உதவிபுரியும்படி வேண்டிக்கொண்டார். அவனோ, பொறாமைப்பேயினால் பிடர்பிடித்துந்தப்படும் சிந்தையன். பருத்திக்குண்டிகையும் முடத்தெங்குமன்ன குணத்தன். ஆதலால் இரவிவர்மரை விரவலாராக எண்ணி ஏமாற்றி வந்தான். தனக்குத்தெரிந்த சித்திர நுணுக்கங்களை இரவிவர்மருக்குக் கற்பித்தால் பிற்காலத்தில் தனக்கே அவர் எதிரியாகக் கிளம்பித் தொலைத்துவிடுவாரென்ற தீய எண்ணம் அவன் மனத்திற் குடிபுகுந்தது. என்னே இவன் அழுக்காறு!

அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும்.

"தனக்குத்தெரிந்த நல்ல விஷயங்களைப் பிறருக்குக் கற்பித்தலாகாது" என்ற கெடுதலான எண்ணமுடைய ஆசிரியனொருவனிருப்பின், அவனுக்கென்றே நரகங்கள் படைக்கப்பட்டுள்ளனவென்பது தேற்றம். ஊக்கங்குன்று உயர்திறற் றோன்றலாகிய இரவிவர்மர், நாயக்கனது தீயவெண்ணத்தையகற்ற எவ்வளவோ முயன்றார்! "மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா" என்பது முதுமொழியன்றோ? அவரது முயற்சியெல்லாம், நாய் வாலை யளவெடுத்துப்பெருக்கித் தீட்டி நல்ல எழுத்தாணியாக்க முயன்ற கதையாகவே முடிந்தது. நாயக்கனது கெட்ட எண்ணத்திற்காக, அவனை வெறுத்தாராயினும், இரவிவர்மர் அவனோடு பகைமை பாராட்டியதில்லை. நாயக்கன் உதவிசெய்ய மறுத்தமை, இரவிவர்மருக்கு முன்னிலும் பன்மடங்கு ஊக்கத்தைக்கொடுத்தது. அல்லும் பகலுமாக உழைக்கத்தொடங்கிவிட்டார். எப்படியாயினும், நாயக்கனைத் தொழிலிலே வெல்ல வேண்டுமென்று தீர்மானித்தார். அழகின் உணர்ச்சியிலும் கற்பனைத்திறத்திலும் இயற்கைவளம் அமைந்த இரவிவர்மர்,

அத்தகைய வளம் சிறிதும் வாய்க்கப்பெருத நாயக்கனை வெல்லுவதென்பது ஒரு பெரிய காரியமன்று. இயற்கை யழகுகளை யுணரும் திறத்திலே இரவிவர்மரது காலடித்துகளுக்கும் பற்ருதவன் நாயக்கன். இயற்கையை யுணரும் வல்லமையும், கற்பனுசக்தியுமே சித்திரத்தொழிலுக்கு ஆணிவேர்கள். இயற்கையழகுகளையும், அழகின் இன்பங்களையும் நுகரும் ஆற்றலிலாதார் மானிடவுருவிலே திரியும் மிருகங்களேயாவர். இரவிவர்மரும், நாயக்கனும் தவருமல் ஆங்காங்கு நடந்த பொருட்காட்சிகளுக்கெல்லாம் படங்களெழுதி அனுப்புவது வழக்கம். ஆனுல் இரவிவர்மரது படங்களே சுருதி, யுக்தி, அநுபவங்களுக்கொப்பத்தக்கனவாக இருக்கும். அவைகளே பரிசில் பெற்றுத் திரும்பும்; நாயக்கன் படங்கள் பரிசுபெறும் யோக்கியதை பெறுவதில்லை. நாளடைவில் மனஞ்சலித்து, அவன் போனவிடந் தெரியாமல் மழுங்கிப் போய்விட்டான்.

இரவிவர்மர் பலநாட்கள் முயன்று திருவநந்தபுர, அரசர் அரசியருடைய திருவுருவங்களையும் வேறு பல விநோத விசேஷப்பொருள்களையுமெழுதி அரசர்க்கு அர்ப்பணஞ் செய்தார். 1873-ம்வரு சென்னையில் கவர்னர்துரை, "ஹோபார்ட் பிரபு" ஒரு விநோதப் பொருட்காட்சியை ஏற்படுத்தினர். திருவநந்தபுர அரசியற் பாதுகாப்புப் பிரதிநிதி (ரெஸிடண்ட்) யின் தூண்டுதலினுல், அநந்தைக்காவலர் இரவிவர்மருடைய சித்திர வேலைகளிலிரண்டொன்றைத் தெரிந்தெடுத்து அக்காட்சிக்கு அனுப்பினர். இரவிவர்மரும் அந்தக் காட்சியினை நேரிற் காணச் சென்றிருந்தார். "மல்லிகை மாலையை முன் கொண்டையிற் சூடிய மலையாள நங்கை"யைச் சித்திரித்திருந்த இரவிவர்மரது அழகிய படம், கவர்னர்துரையின் முதற்றரமான பரிசும்

பொற்பதக்கமும் பெற்றது. மலையாள மங்கையரது மட்டிலா வனப்பை எடுத்துக்காட்டும் அப்படம் இப்பொழுது சொற்ப விலைக்கு எங்கும் கிடைக்கப்பெறும். காட்சியினைக் காண வந்தோரனைவரும் அந்தச் சித்திரத்தைப் பெரிதும் புகழ்ந்தனர். கவர்னர்துரை இரவிவர்மருக்கு நேரிற் பேட்டி கொடுத்து, அவரது தொழிற்றிறமையைப் பெரிதும் புகழ்ந்து, "தொழிற் றுறையிலே மிகவும் ஊக்கத்தோடுழைத்துப் புகழ்பெறுதலே சிறந்ததாகும்" என ஆசி நல்கினர். அநந்தைக்கோமான் இரவி வர்மர், திருவநந்தபுரத்திற்குத் திரும்பிவந்தவுடன், அவர்க்கு நல்வரவு கூறி வரிசைகள் வழங்கி வாழ்த்தினர். சென்னையிற் சிறப்புற்ற அதே சித்திரம் வீயன்னு நகரத்துச் சர்வதேசப் பொருட் காட்சியிலும் பத்திரமும் பதக்கமும் அளிக்கப்பெற் றுக் கீர்த்தியுற்றது.

அதற்கடுத்த யாண்டிலும், சென்னைப் பொருட் காட்சி யில் இரவிவர்மர் எழுதிய "யாழ்பயில் தமிழணங்கின்" படமே முதற் பரிசும் பொற்பதக்கமும் பெற்று வெற்றியுடன் திரும் பிற்று. 1875-ம் வருஷத்தில், ஏழாவது எட்வர்ட் சக்கர வர்த்தியார், காளுட்டுக் கோமகனாக விளங்குகையில் இந்தியா வுக்கு விஜயஞ் செய்தனர். அவ்வமயம் அநந்தபுர வேந்தர் இரவிவர்மரது கீர்த்திபெற்ற "மலையாள மங்கை," "தமிழ் மடந்தை"யரது படங்களை வேறிரண்டு படங்களோடு அரசர் பிரானுக்கு அளித்தனர். மன்னிளந் தோன்றலும் மகிழ்ச்சியோ டவற்றையேற்றுக்கொண்டு, தமக்கு இந்திய நாகரீகத்திற் சிறி தும் பழக்கமில்லாதிருந்தாலும், இரவிவர்மரது வேலையின் திறமைப்பாட்டைப் பெரிதும் மெச்சுவதாகத் தெரிவித்தனர். அப்பால் 1876-ம் யாண்டிலே நடைபெற்ற சென்னைப் பொருட்

காட்சிக்கு, "சகுந்தலை, கமலப்பாசிலையிற் காதலனுக்குக் கடிதம் வரையும்" பாவனையில் எழுதிய சித்திரமே பரிசு பெற்றது. பொருட்காட்சி யதிபராகிய கௌரவந்தங்கிய பக்கிங்ஹாம் பிரபுவே அந்தச் சித்திரத்தின் அருமைப்பாட்டை வியந்து விலைக்கு வாங்கிக்கொண்டார். இரவிவர்மர் வடமொழியில் நல்ல பயிற்சியுடையவராக இருந்தமையால், இந்திய புராதன நாடக இதிகாசங்களில் வேறு எவ்வோவியனுக்கும் எட்டாத கருத்துக்களைக் கவர்ந்தெடுத்துச் சித்திரித்துக் காட்டுதற்கேற்ற ஆற்றலுடையவராயிருந்தார். இரவிவர்மர் பின்னும் அதிகமாக நாடக இதிகாசக் காட்சிகளை எழுதுவதிலும், உருவங்களைப் பார்த்து வரைவதிலுமே மாறிமாறிப் பழகலாயினர். 1878-ம் வருஷத்திலே தமது உருவத்தை எழுதித்தருமாறு பக்கிங்ஹாம் பிரபு தெரிவிக்க, இரவிவர்மர் விரைவிலே அதனை முடித்துக் கொடுத்தனர். இவரது கைத்திறமையையும் விரைவையும் நேரிற்கண்ட, அவ்வாங்கிலப் பிரபுவும் பிரமித்துவிட்டனர். வேறு பல, மேனாட்டுச் சித்திரகாரிகள் எழுதித்தந்த சித்திரங்களோடு இரவிவர்மரெழுதிய படத்தையும் வைத்து ஒப்பு நோக்கியபொழுது, மற்றவைகளெல்லாம் மதியத்தைக்கண்ட கமலம்போன்றிருப்பதைக்கண்டு, நம் ஓவியச் சிங்கத்தை வாயார மனமாரப் புகழ்ந்தனர். பதினெட்டு முறைகள் உட்கார்ந்து காட்டியபின், தம்மைப்போல ஒரு ஆங்கிலேயர் எழுதி ஈந்த உருவப்படம், இரவிவர்மர் ஒரே முறையிற் பார்த்தெழுதிய படத்திற் பாதியளவுகூடத் திருத்தமாயும் அழகாயுமில்லை யென்ற உண்மையை அவரால் வாய்விட்டுக் கூறாமலிருக்க முடியவில்லை. இவ்வாறு சென்னையிற் கீர்த்திபெற்ற சித்திரக் கலைஞர் தலைவர் திருவநந்தபுரத்திற்குத் திரும்பிய சின்னாட்

களில், இவரையாதரித்து அன்புகாட்டிவந்த அநந்தைக்காவலர் அமரர்க் கருவிருந்தாயினர். அவருக்குப் பின்பு, அரியணை யேறிய அரசரும் இரவிவர்மருக்கு ஆக்கமும் ஊக்கமும் அளிப் பதிற் குறைகாட்டவில்லை. அரக்கரை யழித்து அமரரைக் காத்து அரியாதனத்தமர்ந்த அமலனாகிய இராமன், தன்னருந் தேவியின் பன்னருங் கற்பை மண்ணுலகோர்க் கறிவித்தற் பொருட்டுச் சோதனை கருதிய ஞான்று, பூமகள் அகடு கீண் டெழுந்து அன்புடைச் செல்வியை ஆகமுறத் தழீஇ யெடுத் துச் செல்லும் காட்சியைச் சித்திரித்துத் தருமாறு அரசர், இரவிவர்மரைக் கேட்டுக்கொண்டார். இரவிவர்மர், முதனூற் கவிஞராகிய வால்மீகியின் கருத்திற் சிறிதும் பிழையேற்படா மல் மிக அழகாகவும் அதியற்புதமாகவும் வரைந்தளித்தனர்.

பரோடா நாட்டிற் பண்புறும் அமைச்சு நடாத்திய மாதவ ராயரென்பார் திருவநந்தபுரத்தைக் காணவந்தஞான்று, ஓவியர் திலகத்தின் இளமைக் காலத்துப் படங்களைப் பார்த்துப் பரவச மடைந்து பாராட்டு மொழிகள் பல புகன்றனர். "சீதையின் கற்புச் சோதனை"ப்படத்தைத் தம் அரசர்க்காகவும், "மலையாள மங்கை"யின் படமொன்றைத் தனக்காகவும் விலைக்கு வாங்கிச் சென்றார். சென்றவர், புனா நகரத்தில் நடந்ததொரு கண் காட்சிக்குத் தன் "மலையாள மங்கை"ப் படத்தை அனுப்ப, அதுவே கெய்க்வார் மன்னரது பரிசைப்பெற்றது. அப் பொழுது பம்பாய்க் கவர்நராக இருந்த பர்கூஸன் பிரபு, அந்தப் படத்தைக் காட்சிசாலையிலே கண்ணுற்று, வியப்படைந்து, அது மாதவராயருக்குச் சொந்தமானதாதலால் விலைக்குப்பெற வியலாதெனத்தெரிந்து, அதனை அவரிடம் வாய்விட்டுக் கேட் கவும் அச்சுற்றனர். உடனே, கவர்நர் துரை தமக்கென அது

போலவொன் றெழுதியனுப்பும்படி இரவிவர்மருக்கே முடங்கல் விடுத்தனர். கவர்நரது திருமுகத்தைத்பெற்ற இரவிவர்மர், விரைவிலே அவர் விருப்பத்தின்படி எழுதிமுடித்துத் தாமே நேரிற் பம்பாய்க்குச்சென்று கவர்நர்பால் அதனைச் சேர்த்தனர். கவர்நர் துரை இரவிவர்மாது வேலைத் திறமையையும், பணிவுடைமையையும் கண்டு அவரோடு அளவளாவி இன்புற்று ஆங்கில அரசர் குடும்பத்தினரது படங்களடங்கிய விலையுயர்ந்த ஆல்பமொன்றை யன்புடன் நல்கினர்.

1881-ம்ஹூ-த்தின் கடைசியில் நடந்த பரோடாப் பார்த்திபரது மகுடதாரண வைபவத்திற்கு, இரவிவர்மரும் அழைப்புத் திருமுகம் கிடைக்கப்பெற்றார். இரவிவர்மர் தம் இளவலாகிய இராஜராஜவர்மருடன் பரோடாவுக்குச்சென்று நான்கு மாதங்கள் தங்கியிருந்தார். அந்நாட்களில் அவ் அரசருக்கும், தம்மீது ஆரா அன்புடைய மந்திரி மாதவராயருக்கும், ஆங்குள்ள அரசாங்கப் பிரதிநிதி மேல்விலி துரைக்கும் அவரவர் குடும்பங்களிற் பலருக்கும் உருவப்படங்கள் சித்திரித்துக் கொடுத்தார். அப்பால் கூர்ஜர நாட்டிற் றலைசிறந்த பவநகர்க் காவலரும் கலையுணர் வள்ளலென்றுணர்ந்து, அவரது அழைப்பிற்கிணங்க அங்குச்சென்று உருவப்படங்கள் பல வரைந்து கொடுத்துப் பலநாட்கள் சுற்றிவிட்டுப் பின்னர்த் தம்மூர் புக்கனர். அதுகாலை, அவரைக் கண்ணெனக் காத்துவந்த தாய் மாமனார் வேற்றுலகு எகினர்.

பின்னர், 1885-ல் இரவிவர்மர் மைசூருக்குச்சென்று, மகாராஜா சாமராஜேந்திர உடையாரவர்களது அன்புக்குப் பாத்திரராகிச் சிலமாதங்கள் தங்கி உருவப்படங்கள் பல எழுதியளித்தனர். ஓவியக்கலையி லொப்பற்ற அவர வுடையாராகிய

உடையார் இரவிவர்மருக்குப் பல்வகை வரிசைகளும் இரண்டு மதயானைகளும் அளித்து அனுப்பினர். கல்கத்தா, லண்டன் நகரங்களில் நடைபெற்ற பெருங் கண்காட்சிகளிலும், இரவி வர்மரனுப்பிய படங்கள் பரிசுபெற்றன. இரவிவர்மரை யீன்று அவரது புகழாகிய அளக்கரில் திளைத்தாடிய அவர்தம் அன்னையார், அவ்வாநந்த சாகரத்தினின்று கரையேற முடியாமல் தயங்கியாழ்ந்தாற்போல ஆநந்த இன்ப உறையுளாகிய இறைவனடியில் மறைந்து புக்கொளித்தனர்.

ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோ னெனக்கேட்ட தாய்.

அன்னையை யிழந்த தநயர், வேறொன்றிலும் நாட்டமின்றி வாட்டமுற்றுப் பலநாட்கள் கழித்தனர்.

1888-ம் யாண்டில், நீலகிரிக்கு வேனில் நுகர்வான் போந்த, கெய்க்வார் வேந்தர் பரோடாவில் பெரும் பொருளை வாரியிறைத்துக்கட்டிய புதிய மாளிகையை யழகுறுத்த வெண்ணி நம் ஓவியர் திலகரைப் பாரத கதையைப் பதினான்கு படங்களாகச் சித்திரித்துத் தருமாறு வேண்டினர். இரவிவர்மர் இதனை ஏற்றுக்கொள்ளுமுன் பழைய காலத்து நடையுடை பாவனைகளைப் பழைமையான சிற்பங்களினின்று தெரிந்து கொள்ளுதல் இன்றியமையாதெனை எண்ணினார். அதற்காக வடஇந்தியாவிற் சுற்றுப்பிரயாணஞ் செய்தால் நலமாமென நம்பிப் பெரும் பொருள் செலவிட்டுப் பிரயாணத்தை முடித்தார். டெல்லி, மாளவம், ராஜபுதனம், லாகூர், காசி, அலகாபாது முதலிய பழைய நகரங்கள் பலவற்றைக் கண்டுகளித்தார். ஆனால் அவர் கருத்து மாத்திரம் நிறைவேறவில்லை; விழலுக்-

கிறைத்த நீராயிற்று. பழைமையான சிற்பங்களெல்லாம் மகம் மதிய மன்னர்கள் பலருடைய நீண்ட காலக் கொடுங்கோலாட்சியிலகப்பட்டுத் தவிடு பொடியாய்த் தொலைந்துபோயின. பிரயாணத்தை முடித்துத் திரும்புகையிற் பரோடா சென்று, அவர் தம் கட்டளையைப் பெற்றுக்கொண்டு திருவநந்தபுரஞ் சேர்ந்தனர். இரண்டுவருடகாலத்தில் பாரதத்தைச் சித்திரித்து முடித்துப் பரோடாவுக்கு ஏகினர். பார்த்திபர் படங்களைப் பார்த்துப் பார்த்துக் கண்களிபூத்தனர். பொதுமக்களனைவரும் அவைகளைப்பார்த்து மகிழவேண்டுமென்ற நோக்கத்தோடு அவைகள் பலநாட்கள் பொதுவிடத்திலே வைக்கப்பெற்றிருந்தன. பம்பாய் ராஜதானியின் நாலுபக்கங்களிலிருந்தும் மாந்தர் திரள் திரளாகத் தினந்தோறும் வந்துகூடிக் கண் படைத்த பேறெனப்போற்றிச் சென்றனர். புராதன சரிதங்களை எழினிகளிலே தீட்டுவதில் அதுவே முதற்றடவையாதலால், இரவிவர்மரது அரிய முயற்சியை வியவாதார் நயவாதாரிலர். அப் படங்களின் புகைப்படங்கள் பல்லாயிரக்கணக்காக நாடெங்கும் விலையாயிற்று. ஆயினும் ஏழைமக்கள் விலையதிகமாகக் கொடுத்துப் புகைப்படங்களை வாங்கமுடியாமல் தயங்கினர். இதனையறிந்த இரவிவர்மர் பம்பாயிலே, ஒரு **'லித்தோ'** அச்சியந்திரசாலை யேற்படுத்தி வர்ணங்களோடு படங்களைப் பிரதிகள் செய்து சொற்ப விலைக்கு வழங்கினர்.

நாடெங்கும் ஓவிய உணர்ச்சி ஒளி வீசலாயிற்று. சித்திரங்களைப்போற்றி ஏற்றுக்கொள்ளும் விருப்பம் பாமரமக்களுக்கும் ஏற்பட்டது. "சித்திரம்" என்னும் கருவியால் நீதியும் ஒழுக்கமும் நிறைந்த புராதன இதிகாச நாடக புராணக்கதைகளைக் கற்றார் மற்றாராகிய அனைவருள்ளத்திலும் பசுமரத்தாணி

போற் பதியச்செய்வ தெளிதென்பது வெள்ளிடைமலையாய் விளங்கிற்று. இரவிவர்மருக்கு ஏற்பட்ட புகழ், அவர் இளமை யிலே எதிர்பார்த்ததைவிடக் கோடி மடங்காக நிறைந்தது. இமயவரம்பிலிருந்து தெற்கே குமரித்துறை வரையிலும், செல் வம் படைத்த நாகரீகமக்கள் வீடுகளில், இரவிவர்மரது பட மொன்றேனும் காணப்பெறுமலில்லை. இரவிவர்மரது பெயரை யறியாத அறிவாளருமிரார். அமெரிக்காக்கண்டத்துச் சிக்கா கோநகரில் நடைபெற்ற பொருட்காட்சியிலும் இரவிவர்மரது படங்கள் சிறந்து விளங்கின. அமெரிக்கப் பத்திரிகைகள் பல வற்றில் இரவிவர்மரது திறமையும் புகழும் பொறிக்கப்பட்டி ருந்தன. இந்தியாவில் நடைபெற்ற எந்தப் பொருட்காட்சியி லும் இரவிவர்மரது படங்கள் பரிசு பெருமல் திரும்பியதில்லை.

1894-ம் யாண்டிலே, இரவிவர்மர், இளவரசராகவிருந்த மார்த்தாண்டவர்மருக்குப் பரிபாலகரென்ற நிலையிலே தம் இள வலாகிய இராஜராஜவர்மரோடு இரண்டாமுறை வடஇந்தியா விலே சுற்றுப்பிரயாணம் புரிந்தார். இராஜராஜவர்மர் ஆங்கிலப் புலமை நிரம்பியவர். ஆதலால் அரசரது பிரயாணத்தைக் குறித்து அழகானதொரு வரலாற்றை ஆங்கிலத்திலே வெளி யிட்டார். 1900-ம் வருஷத்திலே திருவநந்தபுரத்திற்கு விஜயஞ் செய்த ராஜப்பிரதிநிதியாகிய கர்ஸன்பிரபு, இரவிவர்மரது சித் திரங்களைப் பார்வையிட்டுப் பெரிதும் பாராட்டி மகிழ்ந்தார். பம்பாயில் இயந்திரசாலையை யேற்படுத்திய நாள் முதல் இரவி வர்மர் பம்பாயிலும் திருவநந்தபுரத்திலுமாகவே வசிக்கலானர். பம்பாயிலும் சென்னையிலுமிருந்த பிரபுக்களெல்லாரும் இரவி வர்மரைக்கொண்டு தத்தம் உருவங்களை எழுதச்செய்தனர். உதயப்பூர் அரசரது வேண்டுகோளுக்கிணங்கிப் பல மாதங்கள்

உதயப்பூரில் தங்கினார். உதயப்பூரரசரில் நால்வரது படங்களை வரைந்துதவினர். அவ்வரசரில் ஒருவர், மகா அக்பரது பிரபல விரவலராகிய அஞ்சாநெஞ்சம் படைத்த ஆண்டகையான பிரதாபசிங்கராவர். உதயப்பூர் நகரத்தின் இயற்கையழகு இரவிவர்மரது மனத்தைக் கவர்ந்தது. இராஜராஜவர்மர் அவ்வழகின் சில பகுதிகளைச் சித்திரித்திருக்கின்றனர்.

இராஜராஜவர்மர், இரவிவர்மரது பிந்திய வாழ்க்கை நாட்களிலே மிக்க உதவியாக இருந்தார். ஆங்கிலப்புலமை நிரம்பப் பெற்ற இளவல், தம் கல்வியைத் தாம் மேற்கொண்ட தொழில் முறைக்கேற்ற அபிவிருத்தியிலேயே பயனுறச்செய்தனர். இரவிவர்மர் இத்துணை ஏற்றமும் தேற்றமும் பெற்ற பின்னரும், தமது கலையிலே திருப்தியடையாமல் மேலும் மேலும் பயில வேண்டுமென்று எண்ணினார். "கற்றது கைம் மண்ணளவு, கல்லாதது உலகளவு" என்ற ஆன்றோர் வாக்கை அடிக்கடி அவர் ஞாபகப்படுத்திக்கொள்வர். நவீனமான துறைகளைக் கற்றுத் தம் திறமையை அதிகரிக்கச்செய்ய விரும்பி, "பிராங் புரூக்ஸ்" என்னும் ஐரோப்பியச் சித்திரக்காரரை யடுத்தனர். தம்பியும் தாமுமாக அவர்க்கு மாணவராயிருந்து பல அரிய விஷயங்களைத் தெரிந்துகொண்டனர். அத்துடனுமமையாமல் இரவிவர்மர் ஐரோப்பாவுக்குஞ் சென்று பல பல புதிய விஷயங்களை அறிய ஆவலுற்றனர். என்னே அவர்க்கிருந்த ஆர்வம்! ஆனால் அவரது நாட்டிற்குரிய ஆசாரம் அதற்கிடந்தரவில்லை. கப்பலேறிச்செல்வது அநாசாரமென்பது சேரநாட்டாசாரம்; இருந்தாலும் அவர்க்கு மேலைநாட்டிலிருந்த ஆவல் அவரை விட்டபாடில்லை. ஆதலால் மேனாடுகளில் "சித்திர" சம்பந்தமாய் வெளியாகும் பற்பல செய்தித்தாள்களுக்குக் கையொப்பக்கார

ராயினர். மேனாட்டுச் சித்திரங்கள் பலவற்றை விலை கொடுத்து வாங்கித் தமது கிளிமானூர்ப் பழைமையான மாளிகையை அலங்கரித்தனர்.

பாரதத்தாயின் அருந்தவப்புதல்வர்கள், புலவர்களாகவும், சிற்பிகளாகவும் அறிவாளிகளாகவும், இசைப்புலமை மிக்கோ ராகவும் இன்னும் பல்லாறுகப் புகழ்பெற்று உலகில் திகழ்கின் றனர். ஆனால் சித்திரவல்லுநராகக் கியாதிபெற்றவர்களில் நம் இரவிவர்மரே முதன்மையானவரென்று அஞ்சாமற் கூறலாம். இரவிவர்மர் காலத்திற்கு முன்னால் சித்திரம், கலைஞானங்களி லொன்றாகக் கருதப்படவில்லை. மிக்க இழிவான நிலைமையிலே அது வைக்கப்பட்டிருந்தது. ஏறக்குறைய ஒருநூற்றாண் டுக்கு முன்பு தான் ஓவியக் கலை சிறிது தலை நீட்டத் தொடங்கிற்று. அக்கலையை இரவிவர்மர் தோன்றி ஒளியை வழங்கி முழுக்கலையோடு மதியென நிலவச்செய்தனர். இந்தியக் கலைஞான சரித்திரத்திலே இரவிவர்மர், "கலாஞானபிதா" என்ற ஸ்தானத்தை வகிக்கும் உரிமை யுடையோராவர்.

இரவிவர்மர் சாந்தகுணச்செம்மல்; பிறந்த குலத்திற்குரிய பெருந்தகைமை அவரை விட்டு நீங்கியதேயில்லை; இளகிய உள் ளத்தினர்; தயாளமிக்க தண்ணளியாளர். அடைந்தாரைக் காக் கும் அண்ணல். கற்பனை நீரினாற் செழிப்புற்று வளர்வது அவர் மனம்; அக்கற்பனையை எழுதி எழுதிப் பழகி வளர்வது அவரது கரம்; ஓவியக்கலையை உயிரினும் சிறந்ததாக்கருதி யோம்பினர். வாழ்க்கையின் பிந்திய நாட்களிலே கற்கத்தொடங்கிய ஆங்கி லக்கல்வியை இடைவிடாது பயின்றும் வடமொழி நாடகங் களில் நவரசம் பொழியும் பாக்களையோதியும், இன்பந்துய்க்கும் பழக்கத்தைக் கைக்கொண்டார். நிகரற்ற தேர்ச்சியினால்

முதிர்ச்சியடைந்தபின்னும், தம்மைப் பெரிதும் மதித்துச் செருக்கித்திரியும் வீணர்போலன்றி, கைக்கொண்ட கலைத் தொழிலின் வளர்ச்சியிலேயே கண்ணுங்கருத்துமாய்த் தளர்ச்சி யின்றிப் பாடுபடும் அரிய ஊக்கம் படைத்தவர்.

மெய் வருத்தம் பாரார்; பசிநோக்கார்; கண்துஞ்சார்;
எவ்வெவர் தீமையும் மேற்கொள்ளார்;—செவ்வி
அருமையும் பாரார்; அவமதிப்புங் கொள்ளார்;
கருமமே கண்ணா யினார்.

என்பது முயற்சியுள்ளார்பாற் கண்கூடாக் கண்ட உண்மை. இயற்கையழகின் நுட்பங்கள் கடல்போற் பரந்தவையென்றும், அவற்றில் தாமறிந்தது அக்கடற்கரையிலேயுள்ள நுண்ணிய மணலை யொக்குமென்றும் தம்முடைய நிறைந்த அறிவை அடக்கத்தோடு தெரிவிப்பது நம் ஓவியர் திலகராகிய இரவிவர் மரது வழக்கம். "யார் யார்க்குந் தாழ்ச்சி சொல"லாகிய உயரிய ஒழுக்கத்தை இவரிடம் அன்றி வேறியாரிடம் காணக்கூடும்?

ஓவியத்துறையிலே தம் வாழ்நாள் முழுமையும் கழித்த நம் உத்தமப் பெருந்தகை 1906-ம்வருடத்திலே அவரது ஐம்பத் தெட்டாம் யாண்டிலே இறைவன்றிருவடி நீழலெய்தினார்.

---

## 6. பஞ்சதந்திரம்

### சுகிர்லாபம்

"புத்திசாலிகளாயிருக்கிற சிநேகிதர்கள் திரவியமில்லா திருந்தாலும், வேறு சாதனங்களில்லாவிட்டாலும் காகமும், எலியும் ஆமையும், மானும் நட்பினால் ஒன்றையொன்று காப் பாற்றினாற் போல, ஒருவருக்கொருவர் உதவுவார்கள்" என்று

சோமசர்மா சொல்ல, ராஜகுமாரர்கள் "அதெப்படி" என்று கேட்டார்கள். அப்பால் சோமசர்மா சொல்லத் தொடங்கினான்.

"கோதாவரிக்கரையில் இருக்கிற பெரிய வன்னிமரமொன்றில் லகுபதனன் என்னும் காகம் வாசஞ்செய்துகொண்டிருக்கையில் ஒருநாள் விடியற்காலத்தில் அங்கே யமனைப்போல மிகவும் பயங்கரமான வடிவத்துடன் ஒரு வேடன் வந்தான். லகுபதனன் அவனைப் பார்த்துப் பயப்பட்டு இந்தத் துராத்மா என்ன பண்ணுவானோ தெரியவில்லை, ஆகையால் இதைச் சோதிக்க வேண்டுமென்று இரைதேடுகிற யத்தனத்தை விட்டிருக்க, அதற்குள்ளே அவ்வேடன் வலையை விரித்துப் பல வகைப்பட்ட தானியங்களைத் தெளித்து அங்கே ஒரு செடி மறைவிற் பதுங்கிக்கொண்டிருந்தான். அதன் பிறகு தன் பரிவாரத்தோடு அந்த மரத்தில் வந்து இறங்கின சித்திரக்கிரீவனென்னும் புருவரசு அங்கே இறைத்திருக்குந் தானியத்தைப் பார்த்துத் தன் பரிவாரப் புருக்களுடனே 'இந்த நிர்மானுஷியமான காட்டில் தானியம் எப்படி வரும்; யாரேனுங் கொண்டுவந்து போட்டிருக்கவேண்டும்; இது நமக்குத் தெரிந்தாலல்லாமல் இதை நாம் பக்ஷிக்கலாகாது. ஒரு பிராமணன் பொற்காப்புக்கு ஆசைப்பட்டுப் புலியினால் எப்படி மரணமடைந்தானோ அப்படி ஏதேனும் ஒரு விபரீதம் நேரிடுமென்று தோற்றுகிறது' என, புருக்கள் அதைக் கேட்டு, 'அதெப்படி மஹாராஜாவே' என்று கேட்க, சித்திரக்கிரீவன் சொல்லுகிறது:—

"நான் தென்காட்டில் மேய்ந்துகொண்டிருக்கையிற் பார்த்தேன், அதைக் கேளுங்கள். ஒரு கிழப்புலி பலஹீனத்தால் ஆகாரம் சம்பாதிக்கக் கூடாமல் ஓரேரிகரையில் நீராடிக் கையில் தருப்பையை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கையில் ஒரு

பிராமணன் அந்த வழியில் வந்தான். புலி அவனைப் பார்த்து, 'ஓ பிராமணா! இந்தப் பொற்காப்பைத் தருகிறேன் வா' என, அதைக்கேட்டு அந்தப் பிராமணன் இந்தக் காப்பு நமக்கு வலியக் கிடைக்கிறது; மரணத்துக்கிடமாகிய புலியின் கிட்டப் போகலாகாதென்று இந்தக் காப்பில் ஆசை வைக்காமற் போய் விட்டாலும் மரணத்துக்கு நாலண்டையும் வழியாகையால் இதைக் குறித்துப் பிரயத்தனம் அவசியம் பண்ணவேண்டு மென்று தன் துராசைக்கேற்பத் தனக்குள்ளே ஆலோசித்து நிச்சயித்துக்கொண்டு புலியைப் பார்த்து, 'புலியே! காப்பு எங்கே இருக்கிறது?' என, புலி கையில் வைத்துக்கொண்டு 'இதோ பார், பிராமணோத்தமா!' என்று காண்பித்தது. பிராமணன் 'உன்னிடத்தில் எனக்கு எப்படி நம்பிக்கை?' என, புலி 'நான் வைகறையில் மூழ்கி நித்தியதானம் பண்ணிக்கொண்டிருக்கிறேன். நகமும் பல்லும்போன கிழவனாயிருக்கிறேன். இப்போது என்னிடத்தில் நம்பிக்கை யில்லையா? (வேட்டல், ஓதல், கொடுத்தல், தவம், சத்தியம், உறுதி, பொறுமை, ஆசையின்மை) யென்னும் இவ்வெட்டுத் தருமங்களையும் நான் அறிந்திருக்கிறதனால் இந்த அபூர்வ வஸ்துவை யாருக்கேனுங் கொடுக்க இச்சிக்கிறேன். இதனால் என்னிடத்தில் நற்குணமிருக்கிறதென்றும் எவ்வளவும் துர்க்குணமில்லையென்றும் அறியவில்லையா?' என, அப்போது பிராமணன், 'இது மெய் தான், ஆனாலும் புலி மனிதரை யடித்துத் தின்னுகிறதென்ற லோகாபவாதம் இருக்கிறதே' என, புலி, 'நான் தருமசாஸ்திரமும் அறிந்திருக்கிறேன், தன் பிராணன் தனக்கு எப்படித் தித்திப்போ அப்படி எல்லார்க்கும் இருக்குமென்றறிந்து சாதுக்கள் பிராணிகளிடத்தில் தயையாயிருக்கிறார்கள். தம்

மைப்போலவே சுகதுக்கங்களைப் பிறரிடத்தில் நினைக்கிறார்கள். நீ மிக்க தரித்திரனாகையால் உனக்குக் கொடுக்க யத்தனிக்கிறேன். சாஸ்திரமும் இப்படியே யிருக்கிறது. எப்படியும் ஏழைக்கே கொடுக்கவேண்டும். செல்வமுள்ளவனுக்குக் கொடுத்தலாகாது. மருந்து நோயாளிக்கு எப்படி குணங் கொடுக்குமோ அப்படி நோயில்லாதவனுக்கு ஆகுமா? நீ இந்த ஏரியிலேயே முழுகிவந்து காப்பை வாங்கிக்கொண்டு வீட்டுக்குப்போ' என்றவுடன், பிராமணன், புலியின் பேச்சை நம்பி ஸ்நானம் பண்ணுகிறதற்கு ஏரியிலிறங்கினவுடனே, கால் உளையிற் புதைந்துகொள்ளவே வெளியே வரக்கூடாமல் திகைத்தான். புலி அதைப் பார்த்து, 'ஐயா, பயப்படவேண்டாம், நான் உன்னைச் சேற்றினின்றுமெடுக்கிறேன், சற்றிரு' என்று சொல்லிக்கொண்டு மெல்லெனப்போய் அவனைப் பிடித்துக் கொண்டது. அப்போது பிராமணன்: 'துஷ்டர்கள் வேதாத்தியயனம் பண்ணியிருந்தாலும் தருமசாஸ்திரம் அறிந்திருந்தாலும் அவர்கள் வார்த்தையில் நம்பிக்கை வைக்கலாகாது. எவன் சுபாவம் எப்படியோ அது எப்போதும் போகாது' என்று இப்படிப் பச்சாத்தாபப்பட்டுக்கொண்டிருக்கையில் அந்தப் புலி அவனைக் கொன்று தின்றது. ஆகையால் மிகவும் ஆலோசனை பண்ணி எதொன்று செய்யத்தக்கதோ அதைச் செய்யவேண்டும். அப்படிச் செய்தால் யாதொரு தீங்கும் நேரிடாது" என்று சித்திரக்கிரீவன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டு ஒரு புறா கர்வத்தோடு 'இப்படி ஆலோசித்தால் ஓரிரையும் நமக்கு அகப்படாது. மேலும் (வெட்கப்படுகிறவன், பொறாமையுள்ளவன், சந்தோஷப்படாதவன், குரோதமுள்ளவன், தீராச்சந்தேகமுள்ளவன், பிறர் பொருளாற் சீவிக்கிறவன்) ஆகிய இவ்வாறுபேர்

களும் துக்கத்தையே அனுபவிப்பார்கள்" என, இதைக்கேட்டுப் புறக்களெல்லாம் தானியத்தைத் தின்னும் பொருட்டுப் போய் நிலத்திலிறங்கி வலையில் அகப்பட்டன. புறவரசன் அதைப்பார்த்து 'எல்லாரும் என் சொல்லைக் கேளாமற்போனார்கள். இப்போது நான் தனியாயிருந்து பலனில்லை' என்று சொல்லி, தானும் வலையில்வந்து அகப்பட்டது. வேடன் பக்ஷிகள் வலையிற் சிக்கிக்கொண்டதைப் பார்த்து அதனிடத்திற்கு வரத்தொடங்கினான். அதைப் புறக்கள் கண்டு, சித்திரக்கிரீவனைப் பார்த்து, 'நாங்கள் நீசன் புத்தியைக் கேட்டு உன்னை அவமானம் பண்ணினோம். அதன் பலன் பிராப்தியாயிற்று' என, சித்திரக்கிரீவன் 'இப்போது இதைச்சொல்லிப் பயனென்ன? இதற்கோர் உபாயமிருக்கிறது. எல்லோரும் வலையோடுகூட ஒருமிக்கப் பறந்து வேறிடத்திற்குப் போகவேண்டும்; அப்படிச் செய்தால்தான் பிராணனைக் காப்பாற்றலாம்' என, அதைக் கேட்டவுடனே எல்லாப் பறவைகளும் வலையோடுகூட விரைவிற் பறந்துபோயின. அதை வேடன் தூரத்திலிருந்து பார்த்து ஆச்சரியமுற்று, 'இவைகள் ஒரேமனமாய் வலையைக் கொண்டுபோயின. ஆயினும் இவைகளில் ஒன்றுக்கொன்று சண்டை நேரிடும். அப்போது என் கையிலகப்படும்' என்று நினைத்துக்கொண்டு அவைகளின் பின்னே யோடும்போது புறக்கள் கண்ணுக்கு மறைந்து போய்விட்டன. பிறகு அவன் வருத்தமுற்றுத் திரும்பி வந்துவிட்டான். இவ்வாச்சரியத்தையெல்லாம் பார்த்திருந்த லகுபதனன் என்னுங் காகம் அந்தப் புறக்களின் பின்னே போயிற்று. கபோதராஜா தன் கூட்டத்தைப் பார்த்து, 'கண்டகிநதி தீரத்தில் இருக்குஞ் சித்திரவனத்தில் என் சிநேகிதனான இரணியகன்' என்னுமோர் எலியாச

னிருக்கிறான். அவன் பல்லினாலே நம்முடைய வலையை யறுப்பான். அங்கே நடவுங்கள்' என, அதைக் கேட்டு அப்படியே அவை எலியரசன் வளையண்டை யிறங்கின; அப்போது ஏதாவது ஆபத்து நேரிடுமென்பதைக் குறித்துத் தன் வளைக்கு நூறுவழி செய்துகொண்டு உள்ளேயிருந்த எலியரசன் புறாக்கள் இறங்கின சப்தத்தைக் கேட்டுப் பயந்து அடங்கியிருக்கையிற் சித்திரக்கிரீவன், 'சிநேகிதா! இரணியகா! எங்களோடே ஏன் பேசவில்லை?' என, அது தன் சிநேகிதனுடைய தீங்குரலென்றறிந்து சந்தோஷத்தோடு கூடச் சீக்கிரமாக வளையினின்றும் வந்து, 'நான் புண்ணியவானாகையாற் சித்திரக்கிரீவனென்னும் மித்திரன் என் வீட்டுக்கு வந்தான். இவ்வுலகத்தில் மனமொத்த மித்திரனோடு சம்பாஷிக்கிறதிலும் வேறே ஆனந்தமேது?' என்று எலி உபசாரஞ் சொல்லிப் பிறகு அதனுடைய அவஸ்தையைப் பார்த்து மிகவுந் துக்கித்து 'மித்திரா! நீ எல்லாரைக்காட்டிலும் சமர்த்தனாமே, உனக்கு இப்படிப்பட்ட காரியம் எப்படி நேரிட்டது?' என, புறா 'எந்தக்காலத்தில் எது நடக்குமோ அது நடக்கும். விதிவலிது; அதன் முன் யாருடைய உபாயம் பலிக்கும். கடல் பெருகி மேலிட்டால் அதற்குக் கரையேது?' என, இரணியகன் 'இந்தப்பேச்சு மெய்யே, நூறு நாழிகை வழித் தூரத்திலிருந்து வஸ்துக்களைத் தெரிந்துகொண்டு போகிற நீ இன்றைக்கு வேடன் வலையிற் பாராமற் சிக்கிக்கொண்டனையே பார். (சந்திர சூரியர்களுக்கு ராகு கேதுக்களாற் பீடை வருதலும், யானையும் பறவையும் பாம்பும் கட்டுப்படுதலும், புத்திசாலிகளுக்கு வறுமை வருதலும் தெய்வத்தின் மகிமையேயல்லாமல் வேறல்ல') என்று சொல்லிச் சித்திரக்கிரீவன் கட்டுண்டிருக்கிற வலைக்கயிற்றை அறுக்கத்

தொடங்கிற்று. அப்போது சித்திரக்கிரீவன் 'மித்திரா! முன்னே என் பரிவாரத்தினுடைய கயிற்றை யறு; பிறகு என் பாசத்தைத் துணி' என, எலி 'என் பல்லு மிகவும் மென்மையானது, அதற்குப் பலமும் கொஞ்சம், இத்தனைபேருடைய பந்தனைகள் என்னால் எப்படி யறுபடும்? உன் தளையை அறுத்துப் பின்பு என் சாமர்த்தியத்துக்குத் தக்கபடி மற்றவர்களுடைய தளையையு மறுப்பேன்' என, சித்திரக்கிரீவன், 'நல்லது முன்னே இவர்களுடைய பாசத்தை யறு' என, இரணியகன், 'தன்னைக் காப்பாற்றிக்கொண்டு தன் பரிவாரங்களைக் காப்பாற்றவேண்டும். அறம் பொரு ளின்பம் வீடாகிய இவைகளுக்குப் பிராணன் முக்கிய சாதனமாகையால் அதைக் காப்பாற்றினால் எல்லாவற்றையுங் காப்பாற்றினதுபோ லாகிறது' என, சித்திரக்கிரீவன் 'இந்த நீதி சரிதான்; ஆயினும் இப்படிப்பட்ட வேதனையினின்றும் பாலனம் பண்ணுகிறதற்கு அல்லவோ என்னை இவர்கள் ராஜாவாக நினைக்கிறார்கள்? ஆகையால் என் பிராணனிடத்தில் இச்சையைவிட்டு இவர்களைப் பிழைப்பி என்கிறேன்' என, அதைக்கேட்டு எலி, 'நீ பரமசாது, அடுத்தவர்களை ஆதரிக்கிறவனாயிருக்கிறாய், (எசமானனிடத்தில் விசுவாசமாயிருக்கிற சேவகனும், சேவகனிடத்திற் பிரீதியாயிருக்கிற எசமானனும் சுகமடைவார்கள்') என்று சொல்லி, எல்லாவற்றின் பாசங்களையும் அறுத்துச் சித்திரக்கிரீவனுடைய கட்டையும் சேதித்தது. பிறகு ஒன்றையொன்று தழுவிக்கொண்டு பிரியவார்த்தைகள் சொல்லின. சித்திரக்கிரீவன் பரிவாரத்தோடுகூடத் தன்னிடத்திற்குப் போயிற்று. லகுபதனனென்னுங் காகம் இவைகளையெல்லாம் பார்த்து ஆச்சரியமுற்று இரணியகனை நோக்கி, 'நீ பாக்கியவானாக இருக்கிறாயாகையால்

நானும் உன் சிநேகத்தை விரும்புகிறேன், நீ தயைசெய்து எனக்குச் சிநேகிதனாகவேண்டும்' என, இரணியகன் 'நீ யார்?' என, காகம், 'நான் லகுபதனனென்கிற காக்கை' என அதைக் கேட்டு எலி 'உனக்கும் எனக்கும் வெகுதூரம், உலகத்திற் சமானஸ்தர்களுக்கே சிநேக முண்டாகிறது; நான் உனக்குப் பகை; நீ என்னைத் தின்கிறவன். இப்படியிருக்கையில் இது எப்படியாகும்? ஆபத்துக்கே முகாந்தரமாம். நரியின் சிநேகத்தினால் ஒரு மான் வலையில் அகப்பட்டதுபோல் உன்னால் எனக்குப் பொல்லாங்கு நேரிடும்' என, லகுபதனன் அதைக்கேட்டு 'மான் எப்படி வலையிற் சிக்கிக்கொண்டது?' என்று கேட்க, எலி சொல்லத் தொடங்கிற்று:—

"மகததேசத்திற் சண்பகவனத்தில் ஒரு மானும் ஒரு காகமும் ஒன்றுக்கொன்று நட்பாயிருந்தன. அப்படியிருக்கையில் அந்த மான் இஷ்டப்படி புல் முதலானவைகளை மேய்ந்து தின்று கொழுத்திருக்கிறதை ஒரு நரி பார்த்துத் தனக்குள்ளே ஆலோசித்து இவன் நமக்கு அசாத்தியனாயிருக்கிறானாகையால் இவனை வஞ்சனையாற் கொல்லவேண்டுமென்று நிச்சயித்து அதன் சமீபத்திற் போய், 'சிநேகிதா! சுகமா?' என, அதைக் கேட்டு மான் 'நீ யார்?' என, நரி 'நான் க்ஷுத்திரபுத்தி யென்கிற நரி, இந்தக் காட்டில் யாருமற்ற பாவியாய் ஒருவனாகத் திரிந்து கொண்டிருந்தேன்; இன்றைக்கு உன்னைப் பார்த்து மிகுந்த சந்தோஷத்தை யடைந்தேன்; இப்போது உனக்கு வேலை செய்துகொண்டு உன்னிடத்தில் இருக்க இச்சிக்கிறேன்' என, இதைக்கேட்டு மான் 'நல்லது' எனலும், பொழுதுபோயிற்று. போனவுடனே இரண்டும் சண்பகமரத்தின் கீழே வந்தன. அம் மரத்தின்மேல் வாசம் பண்ணிக்கொண்டிருக்கிற மானின் சிநே

கிதனுகிய சுபுத்தி என்னும் காகம் இவ்விரண்டையும் பார்த்து, மானை அழைத்து 'ஓ மித்திரா! உன்னண்டையி லிருக்கிறவன் யார்?' என, மான் 'இவன் ஒரு நரி; என்னுடன் சிநேகிக்க விரும்புகிறான்' என, காகம், 'மித்திரனே! வழக்கமில்லாதவனை விரைவில் நம்பலாகாது. ஒருவன் குலமும் நடையும் தெரியாமல் அவனுக்கு இடங்கொடுத்தால் ஒரு பூனைக்குச் சரற்கவனென்னுங் கழுகு இடங்கொடுத்து இறந்தாற்போல நேரிடும்' என, அதைக்கேட்டு மான் 'சரற்கவன் எப்படி இறந்தான்?' என, காகஞ் சொல்லுகிறது:—

"பாகீரதி தீரத்தில் திரிகூடமென்னு மலையில் ஒரு முதிய இத்திமரத்தின் பொந்தில் வாசம் பண்ணிக்கொண்டிருக்கிற நகமும் கண்ணுமில்லாத சரற்கவனென்னும் ஒரு கிழக்கழுகானது மற்றப் பக்ஷிகள் இரக்கம் வைத்துத் தங்களாகாரத்திற் கொஞ்சங் கொஞ்சம் நெருக்கிக் கொடுக்கத் தின்றுகொண்டு ஜீவித்திருக்கையில் ஒருநாள் நெடுஞ்செவியனென்னும் பூனை பறவைகளுடைய குஞ்சுகளைத் தின்னவேண்டி அந்த மரத்தின் கீழே வர, அதைக் குஞ்சுகள் பார்த்துப் பயந்து பெருங்கூச்சலிட்டன. கழுகு கேட்டு 'நீங்களேன் பயப்படுகிறீர்கள்? இங்கே எவன் வந்தான்?' என, இதற்குள்ளே பூனை சரற்கவனைப் பார்த்து நான் செத்தேனெனப் பயந்து உடனே மனத்தில் தைரியம் பண்ணிக்கொண்டு 'இந்தச் சத்துருவுக்குத் தப்பி ஓடுகிறதற்கு நமக்குச் சக்தியில்லை, ஆகையால் இவன் சமீபத்திற் போகவேண்டும். பின்னர் எதுவுண்டாகுமோ அது உண்டாகட்டும்' என்று இப்படி நிச்சயித்து அந்தக்கழுகின் கிட்டப் போய், 'சமர்த்தனே! உனக்கு வந்தனம் பண்ணுகிறேன்' என, கழுகு அதைக்கேட்டு 'நீ யார்?' என, அப்போது பூனை 'நெடுஞ்

செவியன் என்னும் பூனை' என, பின்பு சாற்கவன் 'நீ சீக்கிரமாய் இவ்விடம்விட்டு ஓடிப்போ, இல்லாவிட்டாற் சாவாய்' என, பூனை 'நான் என் விர்த்தாந்தத்தைச் சொல்லுகிறேன் அதைக் கேள்; பிறகு கொல்லவேண்டுமானாற் கொல்லு; சாதிபேதத்தினாலேயே பிராணிகளைக் கொல்லுவதாவது புசிப்பதாவது யோக்கியமன்று; ஆதலால் அவனவன் நடையைப் பார்த்து எது செய்யத்தக்கதோ அது செய்யவேண்டும்' என, கழுகு பூனையைப் பார்த்து 'நீ ஏன் வந்தாய் சொல்' என, பூனை 'நான் கங்காதீரத்தில் நித்திய ஸ்நானம்பண்ணிச் சாந்திராயணமுதலாகிய விரதங்களை அனுஷ்டித்துக்கொண்டிருக்கின்றேன். நீ மிகவும் தருமவானாக இருக்கின்றாய் என்று பக்ஷிகளால் எப்போதும் கேள்விப்படுகிறதினாலும், வயது முதிர்ந்த வித்துவானிடத்தில் தருமங் கேட்கவேண்டுமென்று சாஸ்திரம் இருக்கிறதினாலும் நான் உன்னிடத்திற்கு வந்தேன். நீ தருமத்தைவிட்டு என்னைக் கொல்லத் துணிந்தாய். இப்படி இல்லறத்தாருடைய ஆசாரம் எங்கும் பார்த்ததில்லை. சத்துருவும் தம் வீட்டுக்கு வந்தாற் சாதுக்கள் அவனுக்குச் சம்மானம் பண்ணுவார்கள். மரம் தன்னை வெட்டுகிறவனுக்கு நிழல் கொடுக்கவில்லையா? சாதுக்கள் தங்கள் வீட்டுக்கு எவன் வந்தாலும் பூசிக்கிறார்கள். குறைவொன்றும் பண்ணுகிறதில்லை. அதிதி யாருடைய வீட்டுக்கு வந்து முகம் வாடிப்போகிறானோ அவன் தன் பாவத்தை அவ்வீட்டு எசமானனுக்குக் கொடுத்துத் தான்மட்டும் புண்ணியத்தைக் கைக்கொண்டு போகிறானகையாற் சாதுக்கள் எல்லாரிடத்திலும் தயை செய்கிறார்கள். சந்திரன் சண்டாளன் வீட்டிலும் பிரகாசிக்கிறான்' என, அதைக் கழுகு கேட்டு 'பூனை இறைச்சிகளைத் தின்கிறது; மேலும் கொலைசெய்கிறதென்று

ரத்து இப்படி நான் சொன்னேன்' என, அதைக் கேட்டு நெடுஞ்செவியன், பூமியைத் தொட்டுச் சிவசிவவென்று உச்சரித்துக் காதின்மேற் கையை வைத்து, 'நான் தருமசாஸ்திரங்கள் கேட்டு மிகுந்த வைராக்கியமடைந்து பொல்லாத கருமங்களை யெல்லாம் விட்டுவிட்டேன். அநேக சாஸ்திரங்களிற் கொலைசெய்வதுபோல வேறொரு பாதகமில்லையென்று சொல்லப்பட்டிருக்கின்றது. எவர்கள் மற்றொருவனைக் கொன்று தங்களுக்குச் சுகத்தை விரும்புகிறார்களோ அவர்கள் நரகத்தையடைகிறார்கள். ஆகையாற் கொலைசெய்யாமல் இருப்பது போல வேறொரு தருமமில்லையென்று நினைத்துக் காட்டிலிருந்துகொண்டு காய் கனி கிழங்குகளைச் சாப்பிடுகிறவர்கள் பாதகம் எப்படிப் பண்ணுவார்கள்?' என்று சொல்லிக் கழுகுக்கு நம்பிக்கை வரப்பண்ணி அதன் வீட்டிலிருந்தது. பிறகு அந்த ருத்திராக்ஷப்பூனை பட்சிகளின் குஞ்சுகளை நாடோறும் அங்கே கொண்டுவந்து தின்றுகொண்டிருக்கத் தலைப்பட்டது; அப்போது குஞ்சுகளை இழந்த பறவைகளெல்லாம் கிலேசமுற்று ஒன்றாய்க் கூடித் தங்கள் குஞ்சுகளைச் சோதிக்கத் தொடங்கின. பூனை இதை யறிந்து அவ்விடம் விட்டு ஓடிப் போயிற்று. அந்தப் பக்ஷிகள் அங்கே பார்த்துக்கொண்டே கழுகின் பொந்தண்டை வந்து ப்பார்க்கையில் அக்குஞ்சுகளுடைய எலும்புகளும் சிறகுகளும் விழுந்து கிடக்கக் கண்டு, நம்முடைய குஞ்சுகளை இந்தத் துரோகியாகிய கழுகே பக்ஷித்ததென்று நிச்சயித்து அந்தக் கழுகைக் கொத்திக் கொன்றன. ஆகையால் ஒருவனுடைய குணந்தெரியாமல் அவனுக்கு இடங்கொடுக்கலாகாது' என,—அப்போது நரி, 'ஒருவன் சுபாவம் சிநேகிக்கிறதற்கு முன்னே தெரியுமா? நல்லோர்களுக்குச் சுபா

வத்தினாலே காரியமில்லை. அவர்களுடைய சிநேகம் கண்ட மாத்திரத்தினாலேயேயாகிறது' என, மான் அதைக் கேட்டுக் காகத்தைப் பார்த்து, 'எப்படி நீ யெனக்கு மித்திரனோ அப்படியே யிவனு மிருக்கட்டும். நீ ஒன்றுக்குந் தடைசொல்லாதே' என்று சொல்லி, நரியைத் தன்னிடத்தில் வைத்துக்கொண்டது. பிறகு மூன்றும் தங்கள் மார்க்கத்தின்படி வயிற்றை நிரப்பிக்கொண்டு ராத்திரிவேளைகளில் அந்த இடத்தில் வந்துகொண்டிருந்தன. அப்படியிருக்கையில் ஒருநாள் நரி மானைப் பார்த்து 'மித்திரா! இந்தக் காட்டில் இளவிளவென்று நேர்த்தியான பயிரிருக்கிறதை உனக்குக் காண்பிக்கிறேன்' என்று சொல்லி, அதை அழைத்துக்கொண்டுபோய்க் காட்டிற்று. அன்று முதலாக அந்த மான் போய்த் தினந்தோறும் பயிரை மேய்ந்துகொண்டிருக்கையில் அதைக் கொல்லைக்காரன் பார்த்து அங்கே வலை கட்டினான். பின்பு மான் அங்கே வழக்கப்படி மேயப்போய் அதிற் சிக்கிக்கொண்டு 'இப்போது மித்திரனைத் தவிர என்னை யார் விடுவிப்பார்?' என்று மனத்தில் எண்ணிக்கொண்டிருக்கையில் அங்கே நரி வந்து 'என்னுடைய மனோரதம் நிறைவேறிற்று; இப்போது நான் இதன் எலும்பையும் மாம்ஸத்தையும் நிரம்பத் தின்னுவேன்' என்று வாயூற மனத்திலெண்ணிக்கொண்டு சும்மாவிருந்தது. அதைக் கண்டு மான் 'மித்திரா! ஏன் சும்மா இருக்கிறாய்? என்னுடைய தலையைச் சீக்கிரம் அறுத்து என்னை விடுவி; சங்கடகாலத்திற் சிநேகிதர்கள் உடையிழந்தவன் கைபோல உதவுகிறார்களே' என, சம்புகன், 'ஆம், நீ சொல்வதெல்லாம் மெய்யே; ஆயினும் எனக்கு இன்று விரத தினமாகையால் நான் இந்தத் தோல்வலையைத் தீண்டமாட்டேன்; நாளைக்கு என்ன சொன்னாலும் கேட்பேன்; சிநேகித

னுக்காக நான் பிராணனை விடத்தக்கவன்' என்று சொல்லி, அதன் கண்ணுக்குத் தப்பி அங்கே ஓரிடத்தில் ஒளித்துக் கொண்டிருந்தது. காகம் இராத்திரிக்கு மான் வரவில்லையென்று அதைத் தேடும்பொருட்டு இங்குமங்குந் திரிந்துகொண்டு அங்கே வருகையில் அந்த மானின் அவஸ்தையைப் பார்த்து, சிநேகிதா! உனக்கு இந்த அவஸ்தை இப்படி ஏன் வந்தது?' என, மான் 'உன் வார்த்தையைக் கேளாமையால் வந்த பலன் இது' என, காகம் 'உன் கூட்டாளியான சம்புகன் எங்கே போனான்?' என, மான் 'என்னுடைய இறைச்சியைத் தின்பதற் காக இங்கேதானே ஒளித்துக்கொண்டிருப்பான்' என, அதைக் கேட்டுக் காகம் 'தனக்கு இதம்பண்ணுகிற மித்திரன் பேச்சைக் கேளாதவனுக்கு விபத்து சீக்கிரமாக வரும்; இன்னும் அவன் சத்துருவுக்குச் சந்தோஷம் வருவிக்கிறான்' என்று சொல்லிக் கொண்டிருக்கையிற் கொல்லைக்காரன் கையில் ஒரு தடியை எடுத்துக்கொண்டு வர, மானைப் பார்த்துக் காகம், 'மித்திரா! நீ இப்போது மூச்சை அடக்கிக்கொண்டு செத்தவனைப்போலக் கிடந்தால் அவன் உன்னைப் பார்த்து நீ செத்தாயென்றெண்ணிக் கொண்டு கட்டிய வலையை அவிழ்த்துச் சுருட்டி வேறோரிடத் தில் வைக்கப்போவான். அப்போது நான் கத்துகிறேன்; அதைக்கேட்ட மாத்திரத்தில் நீ மிகவும் விரைவாய் ஓட்டம் பிடி' என்று சொல்லிவிட்டுச் செத்ததுபோற்கிடந்த மானின் கண்ணைக் கொத்திக்கொண்டிருந்தது. இதற்குள்ளே வந்த கொல்லைக்காரன் மானைப் பார்த்துச் செத்ததென்றெண்ணிக் கட்டியிருந்த வலையை அவிழ்த்து ஓரிடத்தி லொன்றாகச் சுருட்டி வைக்கப்போனான். காகம் அதைப் பார்த்துச் சங்கே தப்படி கத்த, மான் உடனே யோட்டம் பிடித்தது. அதைக்

கொல்ல நினைத்த அந்தக் குடியானவன் தடியை வீசியெறிய, அது பதுங்கியிருந்த நரிமேற் பட்டது; உடனே அது இறந்தது. ஆகையாற் புண்ணியமாவது பாவமாவது மிகுதியானால் அதன் பலன் உடனே உண்டாகிறது" என்று சொல்லிப் பின்னும் எலி 'இப்படி மானுக்கு நரியின் சிநேகம்போல் உன்னுறவு உபயோகமன்று' என, காகம் 'உன்னைத் தின்றால் எனக்குப் போதுமா? நீ பிழைத்திருந்தால் நான் சித்திரக்கிரீவனைப் போலச் சுகமடைவேனென்று உன்னட்பை விரும்புகிறேன்' என, பின்னும் இரணியகன், 'நீ எனக்குப் பகைவன். உன்னுடனே நான் சிநேகம் பண்ணுகிறதில்லை. சத்துரு தனக்கு அநுகூலமாக இருந்தாலும் அவனோடே சிநேகிக்கலாகாது. தண்ணீர் வெந்நீரானாலும் நெருப்பை அவிக்கும். எது தக்கதோ அதைச் செய்யவேண்டும். தண்ணீரில் வண்டியும், பூமியின் மேற் கப்பலும் நடக்குமா? ஆதலால் சத்துருக்களிடத்தில் நம்பிக்கை வைக்கலாகாது' என்று இப்படிப் பலவிதமாகச் சொல்லக் காகம், 'நான் உன்னுடனே சிநேகிப்பேன். இல்லாவிட்டாற் பட்டினியாகவிருந்து இங்கேயே பிராணனை விடுவேன். நெருப்பின் வெப்பத்தினாற் பொன் முதலானவை உருகி ஒன்றுகின்றன. யாதேனும் ஒரு நிமித்தத்தினாலே விலங்கும் பறவைகளும் மித்திரத்துவத்தை அடைகின்றன. பயத்தினாலாகிலும், யாதோராசையினாலாகிலும் மூடர்களுக்குச் சிநேகமுண்டாகிறது. சாதுக்களுடைய சிநேகமோ கண்டமாத்திரத்தில் உண்டாகிறது. மட்பானை சீக்கிரமாய் உடைகிறது, பிறகு பொருந்துகிறதில்லை. பொற்குடம் சீக்கிரத்தில் உடையாது, உடைந்தாலும் சேரும். இப்படியே துர்ச்சன சற்சனர்களுடைய சிநேகமுமிருக்கிறது' என, இதைக் கேட்டு இரணி

யகன் 'உன் வார்த்தையால் நான் சந்தோஷமடைந்தேன். இப்போது உனக்கும் எனக்கும் சிநேகம் இருக்கட்டும்; இனிமேல் நாமிருவரும் ஒருமனமாயிருக்கவேண்டும். உபகாரம் பண்ணுகிறவன் மித்திரனென்றும், அபகாரம் பண்ணுகிறவன் சத்துருவென்றும் அறிந்து மனக்களங்கமில்லாமல் நடக்கவேண்டும்' என்று இப்படிப் பேசி நிச்சயித்து இரணியகன் லகுபதனனுக்குச் சிறிது ஆகாரங் கொடுத்துத் தன் வளையிற் போயிற்று. சிநேகலாபம் பெற்ற காகமும் அதனிடத்தில் விடைபெற்றுக் கொண்டு தன்னிடத்திற்குப் போயிற்று. அதுமுதலாக அவைகள் அத்தியந்த சிநேகமாய் ஒன்றுக்கொன்று ஆகாரங் கொடுத்துக்கொண்டு பலபல வார்த்தைகள் பேசிக்கொண்டிருக்கையில் ஒருநாள், லகுபதனன் எலியைப் பார்த்து, 'மித்திரா! இப்போது இங்கே இரை அகப்படாமையால் வேறோரிடத்துக்குப் போக இச்சிக்கிறேன்' என, அதைக் கேட்டு இரணியகன் 'எங்கே போகிறாய்?' என, லகுபதனன், 'தண்டகாரணியத்திற் கர்ப்பூர கௌரமென்கிற தடாகத்திலிருக்கிற ஆமையாகிய மந்தரன் என்பவன் எனக்குச் சிநேகிதனாக இருக்கிறான்; அவன் எனக்கு விதம்விதமான மீன்களைக் கொடுத்துப் போஷிப்பான்; அதைக்குறித்து நான் அவனிடத்திற்குப் போகிறேன்' எனக் கேட்டு இரணியகன் 'மித்திரா! அவ்விடத்திற்கு என்னையும் அழைத்துக்கொண்டு போகவேண்டும். நான் தேசாந்தரம் போக விரும்புகிறேன்?' என, அப்போது காக்கை 'நீ அப்படி விரும்புவானேன்?' என, இரணியகன் 'அங்கே போனபின்பு சொல்வேன்' என, லகுபதனன் இரணியகனை எடுத்துக்கொண்டு அந்தவிடத்திற்குப் போயிற்று. அவைகளைப் பார்த்து மந்தரன் அவ்விரண்டுக்கும் உபசாரம் பண்ணிற்று. அப்போது லகுபத

ணன் மந்தரனைப் பார்த்து, 'இந்த இரணியகன் நல்ல பரோபகாரி; இவன் சித்திரக்கிரீவனை அவன் கூட்டத்தோடுகூட வலையினின்றும் விடுவித்தவன்; அப்போது இவன் நட்புநிலைமையைப் பார்த்து நானும் இவனுடனே நட்புக்கொண்டேன்' என, அதைக்கேட்டுக் கூர்மம் சந்தோஷப்பட்டு இரணியகனைப் பார்த்து, 'மித்திரா! நீ இந்த மனித சஞ்சாரமில்லாக் காட்டில் வருவானேன்?' என, அப்போது எலி சொல்லுகிறது:—

"சம்பகாவதியென்னும் பட்டணத்திற் சூடாகர்ணன் என்னும் ஒரு சந்நியாசி, உண்டு மிகுந்த சோற்றைக் கப்பரையிற் போட்டு உறியின்மேல் வைத்துவிட்டு நித்திரை பண்ணிக்கொண்டிருப்பான். பின்பு அந்தச் சோற்றை நான் தின்றுகொண்டு சுகமாவிருக்கிற நாளில் அங்கே வீணாகர்ணனென்னுமொரு சந்நியாசி வந்து அவனோடுகூட அநேக கதாப்பிரசங்கம் பண்ணிக்கொண்டிருக்கையில் அந்தச் சூடாகர்ணன் கையில் ஒரு தடியினாலே பூமியைத் தட்டிக்கொண்டு சோற்றைக் காப்பாற்றிக்கொண்டிருந்தான். அப்போது வீணாகர்ணன் 'என்னுடைய கதையை அநாதரவு பண்ணி நடுவில் வேறே என்ன வியாபாரத்தி லிருக்கிறாய்?' என, சூடாகர்ணன் 'உன் வார்த்தையை அநாதரவு பண்ணவில்லை. இவ்வெலி என் பாத்திரத்தி லிருக்கிற அன்னத்தை நாடோறுந் தின்னுகிறது; அதை ஓட்டுகிறேன்' என, வீணாகர்ணன் அப்போது உறியைப் பார்த்து, 'கொஞ்ச பலமுள்ள இந்த எலி இவ்வளவு உயரம் எப்படிக் குதிக்கிறது? இதற்கு ஏதோ ஒரு காரணமிருக்கவேண்டும், அதுதான் எதுவென்று ஆலோசித்துப் பார்த்தால் இங்கே திரவியம் மிகுதியாக இருக்கவேண்டும்; உலகத்தில் திரவியமுள்ளவர்கள் பலமுள்ளவர்களாக இருக்கிறார்கள்; அசாத்தியமான

காரியங்களைச் சாதிக்கிறார்கள்; ராஜத்துவத்துக்கும் இது காரண மாகும்; எல்லாம் இதனாலாகின்றன' என்று சொல்ல, அந்தச் சந்நியாசி இதைக்கேட்டு மெய்தானென்று நம்பிப் பூமியை வெட்டி, ஐயோ! என் திரவியத்தை யெடுத்துக்கொண்டான்; அன்றுதொடங்கி நான் இளைத்துப்போனேன்; பின்பு எனக்கு இரையும் கிடையாததனால் மெல்ல மெல்ல நடந்துகொண்டிருக் கையில் அந்தச் சந்நியாசி பார்த்து, 'பார், இந்த எலி இப்போது தன்னுடைய சாதித்தன்மையை அடைந்திருக்கிறது. முன்னி ருந்த தன் மதம் போய்விட்டது. ஆகையால் பணமில்லாதவர் களை எல்லோரும் அற்பமாய் நினைக்கிறார்கள்' என, இதைக் கேட்டு 'நான் இப்போது இங்கே யிருக்கிறது சரியன்று. இதை வேறொருவரோடும் சொல்லலாகாது. பொருளிழவும் கிருக சித்திரமும் தானமும் மானமும் அவமானமும் ஆயுளும் தனமு மாகிய இவைகளைப் புத்திமான் வெளிப்படுத்தலாகாது; தன் விதி பிரதிகூலமாயிருக்குங் காலத்திற் பராக்கிரமமும் முயற்சி யும் வீணாகின்றன. பணமில்லாதவனுக்கு வனவாசத்தைக்காட் டிலும் சுகம் வேறு இல்லை. எந்தவிடத்தில் நாம் பணக்காரரா யிருந்தோமோ அந்தவிடத்திலேயே ஏழையாயிருக்கிறது உத் தமமன்றென்று மறுபடி இழந்த பணத்தை எடுத்துக்கொள்ள ஆயத்தப்பட்டேன். அப்போது சந்நியாசி என்னைத் தடியா லடித்தான்; அதனாலே மிகவுந் துக்கமுற்று உன் சிநேகித னோடே கூட இங்கே வந்தேன்'' என, மந்தரன் 'மித்திரா! நீ இதனால் அதைரியப்பட்டு உறைவிடந் துறந்தோமென்று வருத் தப்படவேண்டாம். சாதுக்கள் எங்கேபோனாலும் மரியாதை பெறுகிறார்கள். சிங்கம் வேறொரு காட்டுக்குப் போனாலும் புல்லைத் தின்கிறதில்லை, யானையையே தின்னும். உற்சாகமுள்

அவன், சந்தோஷமுள்ளவன், தைரியசாலி, சூரன், களங்கமில்லாதவன் ஆகிய இவர்களை லட்சுமி தானேவந்து அடைகிறாள். நீ பணமிழந்தாலும் எப்போதும் சந்தோஷத்தோடே கூடியிருக்கிறாய். ஆகையால் உனக்கிருக்கிற சுகம் பணத்தாசையால் மயங்குகிறவர்களுக்கு இல்லை. இன்னுங் கேள்: மேகச்சாயை, துஷ்டனுடைய தயை, இளம்புல், யௌவனம், தனம் இவைகள் வெகுநாளைக்கு நில்லா. ஆகையால் இவை இழந்துபோனால் அழுதுகொண்டு ஆகாரத்தைக்குறித்து ஏங்கி யிருக்கலாகாது; எவன் கர்ப்பத்தில் இடுகிறானோ அவன் பிறக்கிறதற்கு முன்னே தானே தாயினிடத்திற் பாலை அமைத்துவைக்கிறான், அப்படிப்பட்டவன் ஆயுளுள்ளவரைக்கும் காப்பாற்றமாட்டானா? நீ நல்ல விவேகியாயிருக்கிறதினால் இவையெல்லாம் உனக்குத் தெரிந்தேயிருக்கும். இனி, சிநேகமாய் என்னிடத்திற் சுகமாயிரு' என, இவையெல்லாங் கேட்டு, லகுபதனன், 'மந்தரா, நீ சகல குண சம்பன்னன்; மேலும் சற்குணன், சாதுக்களுக்கு வந்த ஆயத்தைச் சாதுக்களே நிவர்த்தி பண்ணுகிறார்களென்றறிந்து நாங்கள் உன்னை நாடிவந்தோம்' என்று சொல்லி, நீண்ட பெரிய மரத்தின்மேற் போய் இருந்து தன் சுபாவப்படியே இங்கும் அங்கும் பார்த்துக்கொண்டிருக்கையில் ஏதோ ஒரு பயமுகாந்தரத்தை யறிந்து அவ்விரண்டையும் நோக்கி, 'நீங்கள் உங்களிடத்தில் ஒளித்துக்கொண்டிருங்கள்' என்று சொல்ல, மந்தரன் தண்ணீரிற் போயிற்று, எலி வளையில் நுழைந்தது. காகம் விருட்சத்தின் நுனியிலிருந்து பார்க்கையில் ஏதொன்றும் காணப்படாமையாற் பின்பு அம்மூன்றும் ஒன்றோடொன்று பேசிக்கொண்டிருக்கையில் அங்கு அவைகளின் சமீபத்திற் சித்திராங்கனென்னும் ஒரு கலைமான் வந்து, 'நான் வேடர்

பயத்தால் உங்களிடத்தி லிருக்கலாமென்று வந்தேன்' என, அதைக்கேட்டு மந்தரன் அதனிடம் அன்புகாட்டி, 'இது உன் வீடு, நான் உன் சேவகனென்று எண்ணிக்கொண்டு சுகமாயிருக்கவேண்டும்' என்று முகமலர்ந்து மனங்கலந்த இன்சொற் சொல்ல, பிறகு அதுவும் இவைகளுடன் நட்புக்கொண்டிருந்தது. அப்படியிருக்கையில் ஒருநாள் அந்த மான் புல்மேய வேறோரிடத்திற்குப் போய் மீண்டு சாயங்காலம் வாராமையால் ஆமை மேயப்போன மான் இன்றைக்கு ஏன் சாயந்தரம் வரவில்லையென்று வருத்தப்பட, அதையறிந்து எல்லாம் துக்கமடைந்தன. மறுநாள் விடியற்காலத்திற் காக்கை பறந்து நாற்புறமும் பார்த்துக்கொண்டு போகையிற் சித்திராங்கன் தோல் வலையில் அகப்பட்டிருக்கிறதைக் கண்டு அதன் கிட்டப்போய் 'மித்திரா! உனக்கு இந்த அவஸ்தை எப்படி நேரிட்டது?' என, மான் 'இப்போது இதைக் கேட்டுப் பிரயோசனமில்லை. நீ போய் இரணியகனைச் சீக்கிரமாக அழைத்துக்கொண்டு வந்தால் அவன் வேடன் வருகிறதற்குள் என் பாசத்தை அறுத்து என்னை விடுவிப்பான். வேடன் வந்தால் ஒருபாயமும் நடவாது' என இதைக் கேட்டவுடனே விரைவாகப் போய் அவைகளுடனே நடந்த காரியத்தைச் சொல்லி இரணியகனை அழைத்துக்கொண்டு வந்தன. வந்த இரணியகன் மானைப் பார்த்து, 'நீ சமர்த்தனுயிருக்கையில் வலையில் எப்படி யகப்பட்டாய்?' என, மான் "வல்லமையிருந்தாலும் வருவது வரும்; இப்போது என்னைச் சீக்கிரமாக விடுவி. எனக்குப் பழைய பயமிருக்கின்றது; முன் நான் குட்டியாயிருக்கையில் வேடன் வலைகட்டி என் கூட்டத்தை வளைத்தான். மற்றவைகள் பெரிய மான்களாயிருந்தபடியாற் குதித்து வலையைத் தாண்டிப் போயின. எனக்

குக் குதித்தோடச் சக்தியில்லாமையால் வேடன் பிடித்து இராஜாவினிடத்திற் கொண்டுபோனன். ராஜா வாங்கித் தன் பிள்ளை கையிற் கொடுக்க, அங்கே நான் வெகுநாளிருக்கையில் ஒருநாள் மேககர்ச்சனையைக் கேட்டு மிகவும் சஞ்சலமுற்றுக் காற்றாலும் மழையாலும் பீடிக்கப்பட்டு மான் கூட்டங்கள் ஓடும்போது அவற்றின் பின் நான் ஓடுவேனென்று மனுஷ்ய பாஷையினல் எனக்குள்ளே பேசிக்கொண்டேன். இராஜ குமாரன் இதைக்கேட்டு நாற்றிசையையும் பார்த்து என்னையும் பார்த்தான். பின்பு சற்றுநேரம் சும்மாவிருந்து இது மனுஷ்ய னைப்போல எப்படி உச்சரித்தது? ஆகையால் இது ஒரு விசித் திரமான பிராணியாயிருக்கிறதென்று நினைத்துப் பயத்தினற் சுரநோயில் விழுந்தான். பிறகு விடியற்காலத்திற் சோதிடர்களை யழைப்பித்து அவர்களுடனே இதைச்சொல்ல, அவர்கள் 'எல்லா மிருகங்களும் மனிதரைப்போற் பேசுகின்றன. ஆயி னும் நமக்கு முன்னே பேசுகிறதில்லை. அதுவும் உன்னைப் பாராமற் பேசிற்று, இதற்காக நீ பயப்படவேண்டாம். இது யாதொரு விசித்திரப் பிராணியுமன்று, இதனல் உனக்கு எவ் வளவும் பயமில்லை' என, இதைக்கேட்டு இராஜகுமாரன் என்னை விட்டுவிட்டான். பிறகு இக்காட்டில் வந்தேன். இப்படி முன் னெருதரம் வலையில் அகப்பட்டேனகையால் என்னைச் சீக்கிர மாக விடச்சொல்லுகிறேன்'' என, இதற்குள்ளே மித்திரத் துவத்தினலே மந்தரனும் அங்கே வந்து இரணியகனைப் பார்த்து, 'மித்திரா! இப்படி தாமஸம் பண்ணுகிறது சரியன்று. இப்போது வேடன் வந்தால் நாமெல்லாம் ஓடிப்போவோம்; வலையில் அகப்பட்ட சித்திராங்கனைப் பிடித்துக்கொள்வான்; இதைக்குறித்து எனக்குக் கிலேசமாயிருக்கிறது. நினைப்பின்

படி மனத்திலிருக்கிறதை அறிகிற சிநேகிதனும், பிறர் துக்க மறிகிற பிரபுவும் கிடைக்கிறது அருமை' என்று இப்படி மந்தரன் சொல்லிக்கொண்டிருக்கையில், வேடன் விரைவில் யமனைப்போல் தூரத்தில் வருகிறதை லகுபதனன் அறிந்து சுண்டெலியைப் பார்த்து, 'மித்திரா! வேடன் வந்தான்; இப்போது பெரிய சங்கடம் நேரிட்டது' என, அதைக்கேட்டு இரணியகன் அதிசீக்கிரத்திற் சித்திராங்கன் வலையை யறுத்தது. அறுத்தவுடனே கிட்ட வந்த வேடனைப் பார்த்து எல்லாம் ஓட்டம் பிடிக்க அப்போது அவன் துக்கமுற்று நாலண்டையும் பார்க்கையில் மந்தரன் தன் நடையின்படி நடந்துகொண்டிருந்தது. வேடன் அதைப் பார்த்துத் தன் வில்லிற் சேர்த்துக் கட்டிக்கொண்டு சிறிது சந்தோஷத்தோடே போகும்போது அதைப் பார்த்து மானும் எலியும் காகமும் மிகவும் சிரமப்பட்டு இப்போது என்ன செய்யலாமென்று வேடன் பின்னே போகத் தொடங்கின. அப்போது இரணியகன், 'ஒரு சங்கடம் நிவர்த்தியாகிறதற்குள்ளே மற்றொன்று வந்து நேரிட்டது. ஆகையாற் சீவனுக்குத் தேகத்தோடுகூட அநேக துக்கங்களை அனுபவிக்க வேண்டியிருக்கிறது. இந்தத் துன்பம் சிநேகத்தினால் நமக்கு வந்தது. எவன் மித்திரனிடத்தில் விசுவாசம் வைக்கிறானோ அந்த விசுவாசம் அவனுக்குத் தாய், தந்தை, சகோதரன், பிள்ளை, சுற்றங்களிடத்தில் இராது' என்று இப்படி வெகுவிதமாகத் துக்கித்துப் பின்னும் 'வேடன் நெடுந்தூரம் போவதற்கு முன்னே மந்தரனை விடத்தக்க உபாயம் பண்ணவேண்டும், பிறகு ஆகமாட்டாது' என, அப்போது அவைகள் 'என்னசெய்யலாம்? சொல்' என, எலி 'சித்திராங்கன் ஏரிகரையிற் செத்தவனைப் போல் கிடக்கவேண்டும், அதன்மேற் காகம் உட்கார்ந்து

கொண்டு பொய்யாகக் கொத்தவேண்டும்; அப்படியிருந்தால் அதை வேடன் பார்த்து, மந்தரனைப் பூமியில் வைத்துவிட்டு மானண்டையிற் போவான், இதற்குள்ளே நான் ஆமையின் கட்டைச் சேதிப்பேன், பிறகு அவ்வாமை தண்ணீரிலோடிப் போம்' என, இதைக்கேட்டு எல்லாம் அவ்வாறே செய்து மந்தரனை விடுவித்தன. பிறகு அந்த வேடன் 'வாய்த் தவிடும் போய் அடுப்பு நெருப்பும் இழந்தவள்போல' வெட்கமுற்று மிகவும் வருத்தமடைந்து 'கைக்குவராத பெரிய லாபத்தை இச்சித்துக் கைக்குவந்த சிறிய லாபத்தை யிழந்தேனே; யார்க்கும் அதிகவாசை அதிக நஷ்டம்; கிடைத்தமட்டும் போதுமென்று நினைக்கிறவனே மகாபுருஷன்' என்று இங்ஙனமெண்ணிக்கொண்டு தன் வீட்டுக்குப் போனவுடனே அந்தக் காகமும் ஆமையும் மானும் எலியும் மிகவும் சந்தோஷமடைந்து தங்களிடத்தில் முன்போல வாழ்ந்திருந்தன."

---

## 7. பொய்த்தோற்றங்கள்

### ஆரோபம்

இந்தப்பூலோகத்திலே நாம் ஒவ்வொருவரும் அநேகம் பொய்த்தோற்றங்கள் பார்த்திருக்கிறோம். அதாவது சில சில தோற்றங்கள் நமக்குப் பார்க்கும்போது உண்மையாகக் காணப்பட்டபோதிலும் ஆராய்கையிற் பொய் என்று தெரியும். இந்தத் தோற்றங்களெல்லாம் பஞ்சேந்திரியங்களுக்கும் புலப்படும்; அதாவது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற ஒவ்வொன்றிற்கும் பொய்த்தோற்றங்கள் உண்டு. இந்தப்பொய்த் தோற்றங்களிலே இரண்டு விதங்கள் உள; அவற்றில் ஒன்றினைப் பற்றி இப்பொழுது கூறுவோம்.

'அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்ற ஒரு பழமொழி நமக்குள்ளே வழங்குகின்றது. இந்தப் பழமொழியில் அடங்கிய உண்மையை ஆராய்ந்தறிவதே நாமெடுத்துக்கொண்ட விஷயம். தற்காலத்தில் நாமெல்லோரும் பெரும்பாலும் புகைவண்டிகளிலே பிரயாணம் செய்திருக்கின்றோம். அவ்விதமாகப் பிரயாணஞ் செய்கையில் நம்மவர்களில் அநேகர் ஒரு விஷயம் அறிந்திருக்கலாம். அதாவது: வண்டிக்குப்பக்கங்களிலே உள்ள மரங்களும், செடிகளும், ஓடுவனவாகவும், தாங்கள் அசையாது ஒரேயிடத்தில் நிலையா யிருப்பவர்களாகவும், அவர்களுக்குத் தோற்றுவது வழக்கம். ஆனால், அவர்கள் நாம் புகைவண்டியிலன்றோ பிரயாணஞ் செய்கிறோமென்று சற்றுச் சிந்திப்பார்களாயின் உண்மை வெளிப்படும். ஆகையினாலே முதலில் அவர்களுக்கு மரங்களுஞ் செடிகளும் ஓடுவனவாகத் தோற்றிய தோற்றம் பொய்த் தோற்றமாயிற்று.

இனி, ஒருநா ளிராத்திரியில் பயப்படும் பிரகிருதியுள்ள ஒரு மனிதன் கால்நடையாக ஓரூரிலிருந்து மற்றோரூருக்குச் செல்லவேண்டுமென்று போய்க்கொண்டிருக்கையில் ஒரு பழுதையானது அவன் போகின்ற வழியில் நெளிந்து கிடந்தது. அப்பொழுது ஆகாசத்திற் சந்திரனானவன் மேக படலத்தால் மறைப்புண்டு பிரகாசங் குறைந்து விளங்கினான்; நட்சத்திரங்களோ மின்னிக்கொண்டிருந்தன. அந்நேரம் அவன் இந்தப் பிரகாசத்தில் நெளிந்துகிடந்த பழுதையைக் கண்டான். கண்டவுடனே அவன் அதைப் பாம்பு படுத்திருக்கின்றதென்று நினைத்துக்கொண்டு பயந்து விலகி, நம்மை யெங்கே பாம்பு தொடர்ந்து வந்துவிடுமோ வென்று ஓடினான். ஓடும்பாதையிற் பிளந்த மாங்கொட்டையொன்று கிடந்தது. பயத்தோடு ஓடி

கின்ற அவசரத்தில் இவன் அந்த மாங்கொட்டையை மிதித்து விட்டான். அது பிளந்த மாங்கொட்டையாகையினாலே மிதிக்கப்பட்டவுடனே அவனுடைய வலதுகாலின் சிறுவிரலைக் கவ்விற்று. கவ்வின அளவில், 'ஐயய்யோ! அப்பா! என்னைப் பாம்பு கடித்துவிட்டதே!' என்று அலறிக்கொண்டு போனவன் வழியெல்லாம் நிமிஷத்திற்கு இரண்டுதரம் சிவசிவா! சிவசிவா! என்று கடவுளைப் பிரார்த்தித்துக்கொண்டு செல்லுகையில், இவனுக்கெதிரே 'லாந்தர்' ஒன்றை யிடதுகையிற் பிடித்துக் கொண்டு, வலதுகையில் ஒரு தடியோடு இன்னொரு மனிதன் வந்தான். வந்தவன் இவ்விதமாகக் கதறிக்கொண்டு போகிறவனை நிறுத்தி என்னென்றுகேட்க, 'ஐயா, என்னைப் பாம்பு வலதுகாற் சிறுவிரலிற் கடித்துவிட்டது' என்றான். இதைக் கேட்டவன் 'லாந்தரை'ப் பிடித்துக்கொண்டு அவ்வெளிச்சத்தில் அவன் காலைப் பார்த்து 'ஒரு காயத்தையும் காணோமே, பல்லுப்பட்டிருக்கின்றது என்று சொல்லவும் இடமில்லையே' என்று சொல்லி, 'என்னிடத்திலே தடியிருக்கிறது, கையிலோ விளக்கிருக்கிறது, கடித்த இடத்தைக்காட்டு பார்ப்போமென்று அவனையும் அழைத்துக்கொண்டு போய்ப்பார்த்ததில், அங்கே பிளந்த மாங்கொட்டை கிடக்கக்கண்டு 'இதுதான் உன்னைக் கவ்வியிருக்கும்; அதை நீ பாம்பு கடித்துவிட்டதென்று மயங்கி விட்டா' யென்றான். அதற்கு அவன் 'இல்லை, நான் பாம்பு நெளிந்து படுத்திருப்பதைப் பார்த்துத்தான் ஓடிவந்தேன்' என்றான். இன்னுங் கொஞ்சதூரஞ்சென்று பார்க்கையில் அங்கே ஒரு பழுதை நெளிந்து கிடப்பதைக் கண்டார்கள். உடனே 'கண்டது பழுதை, கடித்தது மாங்கொட்டை' என்று தீர்மானித்துப் பொய்ப்பாம்பு கடிக்கப்பட்டவன் தேற்றப்பட்டு ஊர்

போய்ச் சேர்ந்தான். ஆகையினாலே, பழுதையைப் பாம்பென மயங்கியதும், மாங்கொட்டை கவ்வியதைப் பாம்பு கடித்ததாக நினைத்ததும் பொய்த்தோற்றங்களென்று கண்டோம்.

இனி, இவ்விதமான பொய்த் தோற்றங்களை யெல்லாம் **ஆரோபம்** என்னும் பெயராற் குறிப்போம். ஆரோபம் என்று லென்ன? ஆரோபமென்பது ஓர்விதப் பொய்த்தோற்றம். அது ஒரு பொருளை மற்றொரு பொருளாக அறியும் பிராந்தியுணர்ச்சியாம். இதை ஆங்கில பாஷையில் *'இல்யூஷன்ஸ்' என்பார்கள். இந்த ஆரோபமென்னும் பிராந்தியுணர்ச்சியானது எல்லா ஜாதியாரிடத்திலுமுள்ள போதிலும் நம் இந்துக்களிடத்தில் அதிக விசேஷமாயிருக்கிறது. இந்த ஆரோபத்தில் மூன்று பிரிவுகளுண்டு. அவை இந்திரியாரோபம், ஞாபகாரோபம், நம்பிக்கையாரோபம் என்று சொல்லப்படும். மெய், வாய், கண், மூக்கு, செவி யென்று இந்திரியங்கள் ஐந்து உள்ளன. ஆகையால் இந்திரியாரோபம் ஐவகைப்படும். கண்ணுக்கு விஷயமாகும் **ஆரோபத்தை, ரூபாரோபம்** என்போம். திருடர்பயத்தோடு இரவில் வழிப்பயணம் போவார், சில மொட்டை மரங்களைக் கண்டு திருடரென மருண்டு சிறிதும் ஓசைப்படாமல் வாய் புதைத்துச் செல்லுதலும், புகைவண்டியிற் போகையில் செடிகளோடுவனவாகக் காணப்பட்டதும், வழி நடக்கையிற் பழுதையைப் பாம்பென மயங்கியதும் **ரூபாரோபங்கள்** தான். தற்காலத்திலுள்ள †ககோள தத்துவசாஸ்திரிகள் சூரியன் ஓரேயிடத்தில் நிலையாயிருக்கிறதென்றும் பூமியானது அதைச்சுற்றி வருகிறதென்றும் தீர்மானித்திருக்கிறார்கள். ஆகையினாலே சூரியனை

* Illusions
† Astronomers

வன் பூமியைச்சுற்றுகிறான் என்ற நம் பூர்வீக இந்துக்களுடைய கொள்கையும் ரூபாரோபத்தின் சக்தியினால்தான் என்பதற்கு ஆக்ஷேபமில்லை.

செவிக்குப் புலப்படும் ஆரோபத்தைச் சப்தாரோபம் என்போம். இதற்கு உதாரணங்கள் அதிகமாய் அகப்படும். ஒரு பெரியமனுஷனுடைய கிருகத்திலே ஒருநாள் அன்றைக்கு விசேஷ தினமாகையால் பாட்டுக்கச்சேரி நடந்தது. அங்கே மகா அழகுள்ள யௌவன ஸ்வரூபியாகிய ஒரு பெண்ணானவள் பாடிக்கொண்டிருந்தாள். அவளுடைய பாட்டைக்கேட்டு ஆநந்திக்கும்படியாக அந்தப்பெரிய மனுஷனுடைய சிநேகிதர்களில் அநேகர் வந்திருந்தார்கள். அவள் அழகுக் தத்தக்கபடி குரல் அவ்வளவு நன்றாய் இருக்காது. அவள் சங்கராபரணம் பாடுகையிற் காம்போதியைக் கலப்பாள்; தோடி பாடுகையில் தன்யாசியைக் கலப்பாள்; பைரவி பாடும்போது முகாரியைக் கலப்பாள்; கானடாப் பாடும்போது சகானாவைக் கலப்பாள்; இவ்வளவு நன்றாக அவளுக்கு இராகங்களின் வித்தியாசங்கள் தெரியும். இப்பேர்ப்பட்டவள் பாடத்தொடங்கியது முதல் முடிகிறவரைக்கும் அங்கிருந்தவர்களில் அநேகர் 'பேஷ்' என்பவர்களும் 'அச்சா' என்பவர்களும் 'பலே' என்பவர்களுமாயிருந்தார்கள். இவ்விஷயத்தில் அவர்களெல்லோரும் பாட்டு இனிமையில்லாமலும், குரல் நன்றாயிராமலுமிருக்க, 'பேஷ்'ப் பட்டங்கொடுக்கும்படியிருந்தது பொய்த்தோற்றமோ அன்றோ?

ஒருவன் தன் மனைவியானவள் உப்பில்லாமற் சமைத்தாலும் வெகுருசியாய்ச் சமைத்திருக்கிறாளென்று மெச்சிக்கொள்ளுதல் நம்மவர்களிற் பெரும்பாலாருக்குத் தெரியும். புருஷன் தன் மனைவியின் பேரில் வைத்திருக்கும் அன்பினாலே அவளு

டைய சமையலையும் நன்றாயிருக்கிறதாகச் சொல்லுகிறான். இப்படிப் புருஷர்கள் கண்ணை மூடிக்கொண்டு சொல்லுகிறதைப் பற்றி அவர்களுக்கு முன்னிலையிலேயே வீட்டிலிருக்கும் தங்கை தமக்கையர்கள் "எப்படியும் பெண்டாட்டியோ இல்லையோ, அப்பா, அவள் எப்படிச் சமைத்தாலும் உனக்கு நன்றாய்த்தானிருக்கும்" என்று சொல்லிக் காட்டுவதுமுண்டு. 'விழுதிலைத் துவையலும், வேப்பங்காய்க்குழம்பும் அகமுடையாள் சமைத்தால் அமிர்தமாயிருக்கும்' என்று நம்முடைய பாட்டிகள் சொல்லிக்கொள்ளும் பழமொழி இதை வற்புறுத்தும். இந்த உதாரணம் வாயிற்குப் புலப்படுதலின் "ரசாரோபமாம். மூக்கிற்கு விஷயமாகும் பொய்த்தோற்றத்தைக் கந்தாரோபம் என்று சொல்லலாம். துர்நாற்றமுள்ள ஒருத்தியினிடத்தில் இச்சை வைத்துத் திரியும் காமுகன் ஒருவன். அவன் அவள் நறுநாற்றமுள்ளவளென்று சொல்லிக்கொள்ளுதலும், இவைபோல்வன பிறவும், இவ்வித ஆரோபத்திற்குத் திருஷ்டாந்தங்களாகும்.

இதுவரைக்கும் * இந்திரியாரோபங்களைப்பற்றிப் பேசினோம். இனி, இரண்டாவதாகிய ‡ ஞாபகாரோபத்தைப்பற்றிச் சொல்லப்புகுவோம். ஞாபகாரோபம் என்பது யாது? முன் நடந்தவைகளை நினைவூட்டிக்கொள்ளுங்காலத்திற் சில பொய்த்தோற்றங்கள் உண்டாகும். அப்பொய்த்தோற்றங்களையெல்லாம் ஞாபகாரோபம் என்று கூறலாம். மனிதரியற்கையானது எப்பொழுதுஞ் சுகத்தையே நாடுவது என்பது சுபாவநியமமாம். ஆகவே அவர்களுடைய எண்ணங்களும் சுகத்தையே

* Illusions of sense Perceptions

‡ Illusions of Memory

நாடிச்செல்லும் என்பது பெறப்படும். அப்படியே சுகத்தை நாடுங்கால் துன்பங்களை மறந்து இன்பங்களைப்பற்றி யெண்ணுதல் இயற்கையாம். யாவரேனுமொருவர்க்குத் தற்காலத்தில் ஏதேனும் ஓர் அற்பத் துன்பத்தை அனுபவிக்குந் துர்ப்பாக்கியம் நேரிட்டால் அவர் தாம் இப்பொழுது அடைகிற சுகத்தைக் காட்டிலும் இளமையில் அதிகமாகச் சுகமடைந்திருந்தோமென்று எண்ணுகிறார். இவ்விதமாக எண்ணுவதில், தாம் அதிக சுகமடைந்ததாக எண்ணுகிற அவ் விளமைப் பருவத்திலேயே யநுபவித்த துன்பங்களெத்தனையோ அத்தனை துன்பங்களையும் மறந்து தொலைத்துவிட்டுக் கேவலம் சுகமாத்திரமடைந்திருந்ததாக எண்ணுதலைப் பொய்த்தோற்றமாகிய **ஞாபகாரோபம்** என்று சொல்லுவதற்குத் தடையுமுண்டோ?

இனி, மூன்றாவதாகிய * **நம்பிக்கையாரோபம்** என்பது இன்னதென விளக்குவோம். நாம் ஆராய்ந்து உண்மையென நம்புகிற அநேக விஷயங்களிலேயே ஆராய்ச்சி உண்மையென நம்புகிற அநேக விஷயங்களிலேயே ஆராய்ச்சிக் குறைவினாற் சிற்சில பொய்த்தோற்றங்கள் உண்டாய்விடுகின்றன. தன்னைப் பற்றிய விஷயங்களை எல்லாம் அதிகப்படுத்திச் சொல்லிக் கொள்ளுதல் இவ்வகையாரோபமாம். அறிவில்லாத ஒருவன் தான் நிரம்பக் கெட்டிக்காரனென்று நினைத்துக்கொள்ளுதலும், மகா கோர ரூபியாயிருக்கும் ஒருத்தி தான் மகாலெட்சுமி போல் அழகுள்ளவளாயிருக்கிறதாக எண்ணிக்கொள்ளுதலும், பைத்தியக்காரன் ஒருவன் தான் பேசும்போதெல்லாம் வெகு புத்திசாலித்தனமாய்ப் பேசுவதாக நினைத்தலும் **நம்பிக்கையாரோபமாம்.**

---

* Illusions of belief.

இந்த நம்பிக்கை யாரோபமானது வேதாந்த சாஸ்திரங்களில் மிகவும் பிரயோகிக்கப்பட்டுள்ளது. இருட்டிற் பழுதையாகிய அசரவஸ்துவைப் பாம்பாகிய சரவஸ்துவாகமருண்டதுபோல, அஞ்ஞான அந்தகாரத்தில் ஜடமாகிய சரீரத்தையும், அசத்தாகிய இந்த லோகத்தையும் முறையே சித்துப்பொருளாகவும், சத்தாகவும் மயங்குதலும் இவ்வித ஆரோபமென்பர் வேதாந்தநூலார்.

இனி, ஆரோபங்களுக் கெல்லாம் காரணமென்ன? இவ்விதப் பொய்த்தோற்றங்களெல்லாம் ஏன் அவ்வாறுகாணப்படல் வேண்டும்? இவ்வாரோபங்கள் உற்பத்தியாவதற்குத் தத்துவ சாஸ்திர சம்பந்தமான காரணங்கள் ஏதேனுமுண்டா? இந்த விஷயத்தைக் குறித்து ஆராய்ந்து பார்ப்போம். இப்பொழுது திருஷ்டாந்தமாகச் சிறிது நாளைக்குமுன் ஒருவன் மதுரைக் கடுத்த திருப்பரங்குன்றம் என்னும் ஒரு மலையினுச்சியிலேறி நின்று கீழேயுள்ள சராசரங்களை யெல்லாம் பார்த்துக்கொண்டிருந்தான். பார்த்துக்கொண்டிருந்த சிறிது நேரத்திற் கெல்லாம் கீழேவிழுந்து இறந்துபோனான். அவன் வேண்டுமென்று விழவில்லையென்று அவனோடு கூடப்போயிருந்தவர்களுக் கெல்லாம் வெகு நன்றாகத்தெரியும். அப்படி வேண்டுமென்று விழுவதத்குக் காரணங்களுமில்லை. அவனோடு கூடப்போயிருந்தவர்கள் அவனைத் தள்ளிவிட்டார்கள் என்று சொல்லுவதற்கோ இடமுமில்லை. ஏனெனில் அவனோடுகூடப் போயிருந்தவர்களெல்லாம் அவனுடைய பெற்றோரும், மனைவியுமே யாவார். அப்படியானால் அவன் விழுவதற்கு வேறுகாரணமிருக்கவேண்டுமே அது என்ன? சிற்சில எண்ணங்கள் மனதிலே உற்பத்தியாகி நிலைபெற்றுநின்று மூளையிலே வியாபகமாகி எவ்விதமுயற்

சியாலும் நீக்கப்படுதலில்லாமல் உடம்பைத் தன் வசப்படுத்தி நடக்கச்செய்யுங் குணத்தையுடையனவா யிருக்கின்றன. இவ் வித எண்ணங்களுக்கு *நிலைத்தவெண்ணம் என்று இப்போது நாம் பெயரிடுவோமாக. மேற்கூறிய உதாரணத்தில் அந்த மனிதன் மலையினின்றும் உருண்டதற்கு இந் நிலைத்தவெண்ணமே மூலகாரணமாம். அது எப்படியென்பதை விளக்குவோம். அந்த மனிதன் மலையுச்சியிலிருந்து கீழேயுள்ளனவற்றை நோக்கிக் கொண்டிருக்கும்போதே, எங்கே விழுந்து விடுவோமோ என்ற பயத்தோடு கூடிய ஓரெண்ணமானது உற்பத்தியாகி அவன் மனதைக் கைவசப்படுத்திக்கொண்டு அவ்விடத்திலேயே நிலையாய்நின்று அவன் அறிவை மேகஞ் சந்திரனை மூடுவதுபோல, மறைத்ததினாலே அவ்வறிவின் வழிச்செல்லும் உடம்பானது மேற்கூறிய எண்ணத்தின்படி நடக்கத் தொடங்கவே அவன் மலையுச்சியினின்றும் விழுந்து இறந்துவிட்டான். இவ்வளவு வல்லமையையுடையதாய் விளங்குகின்றது அந்த நிலைத்தவெண்ணம். இன்னும் இதனுடைய வல்லமையை பற்பல விஷயங்களில் காணலாம். இது §மானஸ தத்துவ சாஸ்திரத்திலே மிகவும் உபயோகிக்கப்பட்ட ஒருவித நியமமாகும். இந் நிலைத்த வெண்ணமே சகலவிதமான பொய்த்தோற்றங்களுக்கும் ஆதிகாரணமாம். மேலே சொல்லிய மூவகை யாரோபத்து உதாரணங்களும் ஒவ்வொன்றையும் இந்த 'நிலைத்த வெண்ணம்' என்னும் நியமத்தைக்கொண்டு விளக்கிவிடலாம். ஒவ்வோருதாரணத்தையுமெடுத்து விளக்கப்புகுந்தால் அதிகமாய் வளருமாதலாற் படிப்போர்க்கு பொறுமையிருக்கமாட்

---

* Fixed Ideas

§ Psychology

டாது. ஆகையினாலே ஏதாவது ஒன்றைமாத்திரம் விளக்கு வோம். திருஷ்டாந்தமாகச் சப்தாரோபத்திற்குக் கூறிய உதா ரணத்தில் அந்தப் பெண்ணினுடைய யௌவனத்தோடு கூடிய அழகில் அங்கிருந்தவர்கள் மயங்கி நின்ற அளவில் 'நன்றாகப் பாடுவாள்' என்ற ஒரு எண்ணமானது அவர்களுடைய மன திலே ஜனித்து நிலைநிற்கவே, அவர்களென்செய்வார்கள்! அவ் வெண்ணத்தின் சக்திக்குட்பட்டு 'பேஷ்' 'அச்சா' 'பலே' என்று சொல்லிவிட்டார்கள். இதே மாதிரியாக நிலைத்தவெண் ணத்தின் அதிகாரத்தைப் பிறவற்றினும் இனிது காணலாம்.

